

ஆமுர்க்தி பத்மபூஷண்

# ம.ப. பெரியசாமித்தூரன்

நினைவு மலர் அக்டோபர் - 1987

# தமிழ்நாடு
# சங்கீத நாடக சங்கம்

'தென்றல்', கிரீன்வேஸ் சாலை, சென்னை-28.

1968-69

தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம்

உயர்திரு **ம.பெ. பெரியசாமித் தூரன்** அவர்களுக்கு

சிறந்த **சாகித்தியகர்த்தா** என்ற

சிறப்பு விருதுக்குரிய பொற்பதக்கத்தையும்

## கலைமாமணி

என்ற பட்டத்தையும் வழங்கி கௌரவிக்கிறது

தேதி 18-4-1969 தலைவர்

அமரகவி

பத்மபூஷண்

# பெரியசாமித் தூரன்



# நினைவு மலர்

அக்டோபர்

1987



தோற்றம் : 16—9—1908

மறைவு : 20—1—1987

# ஜனதிபதி தலைமை தாங்கிய விழா



கலைக்களஞ்சியத்தின் இறுதிப் பகுதியான 9-வது தொகுப்பைப் பாரத ஜனதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் 4—1—1963 தேதியன்று வெளியிட்ட காட்சி. அவரது இடது புறத்தில் தமிழக ஆளுநர் மேதகு விஷ்ணுராம் மேதி, மாண்புமிகு தமிழக உள்துறை அமைச்சர் எம். பக்தவத்சலம், வலதுபுறத்தில் தமிழக முதல்வர் மாண்புமிகு கு. காமராஜ், ஆகியோர் அமர்ந்துள்ள காட்சி. அவர்களை கவிஞர் தூரன் வரவேற்கின்றார்.

## பெருந்தலைவர் பாராட்டு



தமிழக முதலமைச்சர் மாண்புமிகு கு. காமராஜ் அவர்கள் கலைக்களஞ்சிய ஆசிரியருக்கு ரூ. 63,500/- தொகை கொண்ட பொற்கிழி அளிக்கின்ற காட்சி.

# புரட்சித்தலைவர் பாராட்டு



செந்தமிழ்க் கவிஞர் தூரனின் தமிழ்ச் சேவைகளைப் பாராட்டுகின்ற
தமிழக முதல்வர், பொன்மனச்செம்மல், புரட்சித்தலைவர்
மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன்

# செட்டிநாட்டரசர் வாழ்த்து



குழந்தை எழுத்தாளர் சங்கம் 13-11-1968-ல் சென்னை மாவட்ட மத்திய நூலகத்தில் நடத்திய குழந்தைகள் தினவிழாவில்
திரு. ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள் தலைமையில் டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் 28 குழந்தை நூல்களை வெளியிட்டார்கள். புத்தகங்களைப் பெற்ற குழந்தைகளுடன், சங்கத் தலைவர் திரு. அழ. வள்ளியப்பாவும் நிற்கின்றார்.

# சி. எஸ். புகழாரம்





கலைக்களஞ்சியத்தைத் தமிழுக்குத் தந்த தூரனுக்கு மத்திய அமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் மாலை அணிவித்து பாராட்டுகின்ற காட்சி.

# பேராசிரியரும் கலைக்களஞ்சிய ஆசிரியரும்



22-12-1972 அன்று தமிழக நல்வாழ்வுத்துறை அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் பத்மபூஷண் திரு. ம. ப. பெரியசாமித் தூரன் அவர்களுக்கு 'இசைப் பேரறிஞர்' பட்டம் வழங்கி, அதற்குரிய நற்சான்றிதழையும் வழங்கினர்.

# கவர்னர் பாராட்டுகிறார்



தமிழ்நாடு அரசு கலைஞர்களுக்கு விருது வழங்கி பாராட்டுகிற நிகழ்ச்சி 18-4-1969 ல் சென்னை இராஜாஜி ஹாலில் நிகழ்ந்தபோது தமிழக ஆளுநர் மேதகு உஜ்ஜல்சிங் அவர்கள் தூரனுக்கு கலைமாமணி பட்டம் வழங்கிப் பாராட்டுகின்ற காட்சி.

# சிலம்புச்செல்வர் வழங்கிய பரிசு



இருபது ஆண்டுகளுக்கு முன்பு சென்னை இராமலிங்கர் பணி மன்றம் நடத்திய வள்ளலார் காந்தி விழாவில் 1968-ல் சென்னை மல்லீசுவரர் கோயிலில் நடந்தபோது சிலம்புச்செல்வர் ம. பொ சி. அவர்கள் கவிஞர் தூரனுக்கு பரிசளித்து பாராட்டுகின்ற காட்சி. பின்னால் அமர்ந்திருப்பவர் சொல்லின் செல்வர் டாக்டர் நா. கிரிதாரிபிரசாத்.

# அருட்செல்வரின் அன்பு வாழ்த்து



சென்னையில் கவிஞர் தூரன் எழுதிய பாரதி நூல் வரிசைகளை அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்கள் வெளியிடுகின்ற காட்சி

## நாஞ்சில் நாவலரும் - காவிரிக் கவிஞரும்



ராஜாசர் அண்ணுமலை செட்டியார் அறக்கட்டளை தூரனுக்கு ரூ. 10,000 பரிசளித்ததை பாராட்டி தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு கி. மனேகரன் அவர்கள் பாராட்டுகின்ற காட்சி.

# கவிஞரும் - கவிஞரும்



தமிழக அரசவைக் கவிஞர்
நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளையும்,
பாரதி அறிஞர் கவிஞர் ம. ப. பெரியசாமித் தூரனும்.

# இருபெரும் தமிழறிஞர்களுடன் கவிஞர் தூரன்





டாக்டர் மு. வரதராசனார்,
டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்,
கவிஞர் ம. ப. பெரியசாமித் தூரன்



தமிழ்க் கலைக்களஞ்சிய அலுவலகத்தில் பணியாற்றுவோருடன்
கலைக்களஞ்சிய ஆசிரியர் திரு. தூரன் அவர்கள்.
அமர்ந்திருப்பவர்கள் :
இடமிருந்து வலம் : 1. திரு. பு. மு. இரத்தினசபாபதி முதலியார்
2. திரு. ஜ. இராஜு முதலியார் 3. திரு. நா. சுப்பிரமணிய ஐயர்
4. திரு. ம. ப. பெரியசாமித் தூரன் 5. திரு. நா. கி நாகராசன்
6. திரு. பொ. திரிகூட சுந்தரம்பிள்ளை 7. திரு. ஊ. அ. பாஷியம் ஐயங்கார் 8. திரு. ப. மு. சோமசுந்தரம் பிள்ளை



அமரகவி ம. ப. பெரியசாமித் தூரன் அவர்கள் வாராதுபோல் வந்த மாமணி யாய்த்தோன்றியவர். அடிப்படையில் அவர் கவிஞர். அருள் நாட்டம் நிரம்பிய கவிஞர்.

அவரே கூறுவார் 'புறவெற்றிகள்' போதும் போதும் என்று.

அவர் ஆசைப்பட்டதெல்லாம் "அக வெற்றிகள் தான்"

அகவெற்றி என்பது உள்ளிருள் நீங்கி உள்ளொளி ஓங்கி தெள்ளியராதல் என்பதுதான்.

தமிழறிஞர் தூரன் அத்தகைய தெள்ளியர் ஆனார்.



# கலைக்காவிரி

மஞ்சக்காட்டு வலசு என்ற பட்டிக்காட்டில் பிறந்தவர். பட்டணத்திற்கு வந்து செய்த தமிழ்ப் பணி தமிழ் உள்ள வரை மங்காது.

காவிரிக் கரையின் ஓரத்தில் பிறந்த பெரியசாமியின் பெற்றோர்கள் கிராமத்தில் இருந்தார்கள். பெரியசாமியோ தூரனுகப் பரிணும வளர்ச்சிபெற்று கவிஞனுக கனிந்ததைப் பார்க்கையில், இவர் காவிரியின் கருவில் வளர்ந்து மறுபடியும் பிறக்கிறுர் என்றுதான் கூறவேண்டும்.

காவிரியை ஒரு தாய்ப் பாசத்தோடு காதலித்தவர். அந்தத் தாய்ப் பாசம் அவருடைய இறுதி மூச்சிருக்கும்வரை இருந்தது.

வற்றுத காவிரியை வாஞ்சையோடு பார்த்துப் பார்த்து பூரித்த காவிரித்தாயின் செல்வன், இன்றுள்ள வற்றி வறண்டுபோன காவிரியைப் பார்த்திருந்தால் எப்படித் துடித்திருப்பார் என்பதை எண்ணிப் பார்க்கின்றேன்.

தூரன் அவர்கள் இராமகிருஷ்ண வித்யாலயத்தில் தலைமையாசிரியராக இருந்தபோது நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். அந்தக் காலத்திலேயே அவருடன் பழகும் வாய்ப்பினை நான் பெற்றிருந்தேன்.

நான் வித்யாலயம் செல்லும் போதெல்லாம் அவர்களைச் சந்தித்துப் பேசுவது வழக்கம். அவர் சென்னைக்கு வந்த பிற்பாடு, நான் சென்னைக்குப் போகும்போதெல்லாம் கலைக் களஞ்சியம் அலுவலகத்திற்குச் சென்று அவர் வேலையைக் ''கெடுப்பது'' எனக்கு வழக்கமாகிவிட்டது. போனுல் ஒரு மணி நேரமாவது அவருடன் பேசி மகிழ்வேன்.

அப்பொழுது தமிழறிஞர் திரிகூடசுந்தரம் பிள்ளை அங்கிருந்தார். இது போன்ற நல்ல அன்பர்கள் பலர் அங்கு இருந்ததால் அங்கு சென்று பேசுவது எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

கலைக் களஞ்சியப் பணியை உருவாக்கிய உயர்திரு அவினுசிலிங்கம் ஐயா அவர்கள், அப்பொழுது மந்திரியாகத்தான் இருந்தார்கள். அப்படியிருந்தும் இதைப் பல்கலைக் கழகத்தினுடைய ஒரு இலாகாவாக செய்யாமல், தனியாகச் செயல்படும்படி செய்துவிட்டார்கள். ஏன் இப்படி செய்தார் என்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

பிற்பாடு இக்கலைக் களஞ்சியப் பணியை சென்னைப் பல்கலைக் கழகத்திடமே ஒப்புவித்து விடுவதற்காக, நான் பல்வேறு முயற்சி எடுத்துக் கொண்டேன். ஆனுல் அது நடைபெறவில்லை. அதன்பிறகு ஆட்சி மாறிவிட்டது.

அப்பொழுது முதல் தொகுதி வேலைகள் அநேகமாக முடிந்துவிட்டது

முதல் தொகுதியின் இரண்டாவது 'எடிஷன்' போடவேண்டும். அப்புறம் குழந்தைகள் கலைக் களஞ்சியம் வரவேண்டும் என்ற நிலை இருந்தபோது, ஆளுங்கட்சியிலிருந்து சில பிரதிநிதிகளைக் கலைக் களஞ்சியத்தை உருவாக்கிவரும் இந்தத் தமிழ் வளர்ச்சிக் கழகத்திலே நியமிக்கவேண்டும் என்று ஐயாவிடம் நான் ஆலோசனை சொன்னேன்.

ஐயா அவர்களின் தீவிர காங்கிரஸ் பக்தி அதற்கு இடம் கொடுக்க வில்லை. சில காரியங்களைச் செய்கின்ற போது அரசாங்கத்திடம் அடிக்கடி போக வேண்டியிருந்தால் அரசைப்பற்றிக் குறை சொல்லும் படியாக நாம் இருக்கக் கூடாது. அப்படிச் செய்தால் நம் காரியங்கள் நடைபெறுது.

கலைக் களஞ்சியம் ஏன் நடைபெறவில்லை என்று திரு. ம. ரா. போ. குருசாமி அவர்கள் குறிப்பிட்டார்கள். பிரதானமான காரணங்கள் சில உள்ளன. நூல் உரிமையை அரசாங்கத்திற்கு கொடுப்பதற்கு கலைக் களஞ்சிய நிர்வாகம் தயாராக இருக்கவில்லை. இரண்டாவது, அரசாங்கமே ஏற்றுக்கொண்டுவிட்ட எழுத்து சீர்திருத்தங்கள் பலவற்றை கலைக் களஞ்சியம் 2-வது எடிஷன் போடும்போது அரசாங்கம் செய்ய விரும்பியது. ஆனால் கலைக் களஞ்கிய நிர்வாகம் அதற்குத் தயாராக இல்லை.

கலைக் களஞ்சியத் தயாரிப்புப்பணி என்பது ஒரு முழுநேர வேலை. அதனை யாராவது முழுநேர வேலையாகத்தான் எடுத்துச் செய்ய வேண்டும். 'பார்ட் டைம்' வேலையாக அதைச் செய்ய முடியாது. ஆகவே தான் இன்று கலைக் களஞ்சியப் பணிகள் ஸ்தம்பித்து விட்டன.

இன்று அதை யாரிடமாவது முழுநேர வேலையாக ஒப்படைக்க வேண்டும் அல்லது பல்கலைக் கழகத்திடம் ஒப்படைக்க வேண்டும். மதிப்பிற்குரிய பெரியவர் சுப்பிரமணியம் அவர்கள் இப்போது ஓரளவு செய்வதற்கு ஓய்வு பெற்று பாரதீய வித்யாபவனில் தலைவராக இருக்கிறார். இந்தப்பணி அவருக்கு ஓய்வே தேவையில்லை.

தூரன் அவர்கள் சென்னையிலிருந்த வரை ராமலிங்கர் பணி மன்றத்தின் மகாத்மா காந்தி விழாவில் கலந்து கொண்டு பலமுறை கவியரங்கத்திற்கு தலைமை தாங்கி சிறப்பாக நடத்திக் கொடுத்திருக்கிறார்கள். எப்போது அழைத்தாலும் எவ்வளவு வேலை இருந்த போதிலும் அதுபோன்ற பொது நிகழ்ச்சியில் கலந்துகொள்வதில் விருப்பம் உடையவராக இருந்தார். நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு பேசமுடியாமல் போனாலும் நிகழ்ச்சிக்கு நேரில் வந்திருந்து அமர்ந்து கேட்டு ரசிப்பார்கள்.

என்சைக்ளோபீடியா எடிட்டராக இருந்த ஒருவர் ஓய்வு பெறுகிறார் என்று சொன்னால், அரசாங்கத்தில் அவரை அழைத்து பெரிய பதவிகளில் ஆலோசகராக வைத்துக் கொள்வார்கள். அதுதான் மரபு.

மத்திய அரசாங்கத்தில் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் 62 முதல் 75 வரை பல்வேறு துறைகளில் அமைச்சராக இருந்தார்கள். அப்பொழுதுதான் தூரன் கலைக் களஞ்சியத்தை முடித்திருந்த தருணம். டெல்லி மாநகரம் தமிழ் நாட்டிலிருந்து வெகுதூரத்தில் இருக்கிறதென்று பொதுவாகச் சொல்வார்கள். இப்படி வெகுதூரத்திற்குச் சென்று விடுபவர்களுக்குத் தமிழகமே மறந்து விடுகிறது போலும்.

தூரன் அவர்களை நன்கு தெரிந்தவர்கள் மிக உயர்ந்த மத்திய பதவிகளில் மத்திய அரசிலும் மாநில அரசிலும் இருந்தும்கூட, தூரன் அவருடைய சிறப்புக்குத் தகுந்தபடி பெரிய பதவிகள் எதனையும் அடையவில்லை. காரணம் உரியவர்கள் அவரை ஏனோ ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவில்லை. மறக்கப்பட முடியாத பணியை தமிழுக்குச் செய்தவர், மறக்கப்பட்ட மனிதராகி விட்டார்.

ஐயா அவர்கள் ஏதோ சொன்னார்கள், இவ்வளவு நேரம் இக் கூட்டத்தில் ஐயா அவர்கள் பேசியதைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். இப்போது கூட கோவை ராமகிருஷ்ண வித்யாலய ஹைஸ்கூல் பற்றி அதிகம் பேசினரே தவிர, என்சைக்ளோபீடியாவுக்கு தூரன் செய்த சேவையைப் பற்றி அவருக்கு ஞாபகம் குறைந்து விட்டது.

தூரன் அவர்கள் தேசத்திற்காகவும், தமிழுக்காகவும் பணி செய்தார்கள், அந்தப்பணி என்றென்றைக்கும் தமிழ் நாட்டில் நிலைத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இதனை மறப்பதென்பது தமிழையே மறப்பதாகத் தான் கருதப்படும்.

தமிழ்நாட்டில் 30 ஆயிரம் ஆரம்பப் பள்ளிகள் உண்டு. அவைகளுக்கெல் லாம் கலைக்களஞ்சியம் போய்ச் சேரவில்லை. பெரியார் ஜில்லாவில் உள்ள எல்லா ஆரம்பப் பள்ளிகளுக்கும் சக்தி சர்க்கரை ஆலையின் அன்பளிப்புகளாக நாங்கள் கொடுத்திருக்கின்றோம். இதேபோல ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள பெரிய தொழில் நிறுவனங்கள் இதை வாங்கி, எல்லா ஆரம்பப் பள்ளிகளுக்கும் கொடுக்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் நான் வேண்டிக்கொள்கிறேன்.

தூரன் அவர்களை தமிழ்நாட்டில் உள்ள பல்கலைக்கழகம் ஒன்றுக்கு துணைவேந்தராக நியமித்து சிறப்பித்திருந்தால், தமிழ்ப்பணி செய்தவரை தகுந்த முறையில் பாராட்டிய பெருமை நமக்கு ஏற்பட்டிருக்கும். ஏனெனில் அவர் ஒரு பல்துறை நிபுணராக இருந்தார். வெளியே சென்று கூட்டங்களில் அவர் அதிகமாகப் பேசவில்லை. அதனல் அவர் விளம்பரமாகவில்லை. அதற் கெல்லாம் அவருக்கு நேரம் இல்லை, செய்த பணியை அர்ப்பணிப்போடு செய்தார்.

அவருக்கு ஒரு டாக்டர் பட்டம்கூட கொடுக்கப்படவில்லை. நமது பல்கலைக் கழகங்கள் ஏனோ இதுபோன்ற நல்லகாரியம் செய்வதில் ‘மந்தமாக‘ இருந்து விடுகின்றன. அவரோடு — அவரைப் போலவே அர்ப்பணிப்போடு பணிசெய்த ½ ‘டஜன்’ பேருக்காவது டாக்டர் பட்டம் கொடுத்திருக்க வேண்டாமா? 10 வால்யூம் வந்ததென்று சொன்னல், 10 டாக்டர் பட்டங்கள் அல்லவா அவருக்கு கொடுத்திருக்க வேண்டும்.

உயர்திரு திரிகூடசுந்தரம் பிள்ளை அங்கு பணிசெய்தார். இதுபோன்ற பேரறிஞர்கள் அங்கு முழு நேரமாகப் பணிசெய்தார்கள். ஒருவருக்கும் ஒரு சிறப்பையும் நமது பல்கலைக்கழகங்கள் செய்யவில்லை. கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டு கல்விப் பணிபுரியும் நமது பல்கலைக் கழகங்களைப் பார்க்க கவலை யாகத்தான் இருக்கிறது.

நான் திரு. தூரனைச் சந்தித்தபோதெல்லாம், தமிழுக்கு புதிதுபுதிதாய் என்ன செய்ய வேண்டும் என்று தான் சிந்தித்துக் கொண்டிருப்பார். வெளி நாட்டிலிருந்து புதிய என்சைக்ளோபீடியா வந்த தென்றால், அதை வாங்கி வைத்துக்கொண்டு இரவுபகலாக படித்துக்கொண்டிருப்பார்.

அமெரிக்காவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் வருகின்ற என்சைக்ளோ பீடியாக்களில் உள்ள படங்களை அச்சுப்போட்டு வாங்கி, இந்தியா முழுவதும் பல மொழிகளில் நாம் வெளியிடுவது கூட நமது பொது அறிவு வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும்.

தூரனுடைய கவிதைகள் என்பவை அவருடைய உணர்ச்சிகளின் வெளியீடுகள். அதை சிலர் தான் படிப்பார்கள். ஆனால் கலைக்களஞ்சிய நூல்களை எல்லோரும் படிக்கலாம். கலைக் கல்லூரிகளில் பெரிய கலைக்களஞ்சியமும், பள்ளிக்கூடங்களில் சிறுவர் கலைக்களஞ்சியமும் அவசியம் இருக்க வேண்டும்.

பல்கலைக் கழகத்தின் ஒரு இலாகாவாகவே கலைக்களஞ்சியப் பணிசெய்யும் துறை செயல்பட்டு வரவேண்டும். என்பது எனது ஆசை.

ஐயா அவர்கள், தூரன் அவர்களுக்கு ஞாபகச் சின்னம் ஒன்று அவர்பணி யாற்றிய கோவை ராமகிருஷ்ண வித்யாலயத்தில் அமைப்பதைப்பற்றிச் சொன்னார்கள். தூரன் அவர்களுக்கு அவர் எழுத்துத்தான் சிறந்த ஞாபகச் சின்னம். அது இருக்கும்வரை அவர் ஞாபகம் இருக்கும்.

ஒரு கவிஞனுக்கு அவனுடைய கவிதையைவிட மேலான நினைவுச் சின்னத்தை எவரும் அமைத்திட முடியாது. வித்யாலயம் என்ற வட்டத்துக்குள் அந்த பெரிய சிந்தனைவாதியைக் கட்டிப்போட்டுவிடாதீர்கள். வித்யாலயத்தில் அவர் திருவுருவச் சிலையை நிறுவதைவிட கோவை நகரில் நிறுவினால் ஊருக்குத் தெரியும். இதைவிட சென்னையிலும் டெல்லியிலும் நிறுவினால் தூரன் தமிழுக்குச் செய்த தூய தொண்டினை எல்லோரும் அறிய வாய்ப்பு ஏற்படும்.

பாரதத் தலைநகரில் பாரதிக்கு சிலை வைத்தது போல தூரனுக்கும் வைக்கவேண்டுமென்பதுதான் தமிழ் நெஞ்சங்களின் ஆசை. இதில் பல்வேறு பேரறிஞர்கள் பங்குகொண்டு சிறப்பித்துள்ளார்கள். அவர்களுக்கு நான் நன்றி கூற கடமைப்பட்டிருக்கிறேன். இம்மலரில் தூரனைப்பற்றி தங்கள் படப்பிடிப்புகளை கவிஞர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், தமிழ் அறிஞர்கள் இசை மேதைகள் வழங்கியுள்ளார்கள்.

காவிரியின் அகண்ட சொரூபத்தை உள்ளே காணப்போகும் உங்கள் அனைவரையும் இந்நூலின் தலைக்காவிரியில் நின்று வரவேற்று எனது வணக்கங்களை உங்களுக்கு உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

அன்புள்ள

**நா. மகாலிங்கம்**



# கவிஞர் தூரனின்

# புகழ் பெற்ற கீர்த்தனை

| | | |
|---|---|---|
| இராகம் : ஹரிகாம்போதி | ஆ : ஸரிகமபதநிஸ | தாய் ராகம் |
| தாளம் : ஆதி | அ : ஸநித்பமகரிஸ | |

பல்லவி

எங்கே தேடுகின்றாய் - இறைவனை
இங்கே காணாமல் - இறைவனை (எங்கே)

அனுபல்லவி

கங்காதரா கார்வண்ணா முருகா
பங்கேருகத் துறைஅயனே எனக்கூவி (எங்கே)

சரணம்

மங்கும் பொழுதளவும் வாடித்தொழில் புரியும்
மக்களெல்லாம் இறைவன் வடிவல்லவோ
அங்கங் குறுகிநின்று ஐயா எனக் கையேந்தி
அகத்தின் கதவருகே அழைப்போன் அவனல்லவோ (எங்கே)

# உழைப்புக்குப் பொற்கிழி



கலைக்களஞ்சியத் தூரனுக்கு பணமுடிப்பளித்து பாராட்டிப் பேசுகின்ற தமிழக முதல்வர் மாண்புமிகு கு. காமராஜ் அவர்கள், அருகில் தமிழறிஞர் டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் ராஜா சர் முத்தைய செட்டியார், டாக்டர் சி. எஸ்.

# ஆசி வழங்கும் தருமை ஆதீனம்





தருமபுரம் ஆதீனம் குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் கவிஞர் பெரியசாமித் தூரனுக்கு பொன்னுடை அணிவித்து பாராட்டி ஆசிர்வதிக்கின்ற காட்சி. அருகில் நிற்பவர் இப்போதைய குருமகா சன்னிதானம்.

பாரத ரத்தினம்



டாக்டர் டி. எஸ். அவினாசிலிங்கம் ஐயா

# "தூரனின் மகத்தான சேவை"

இன்றைக்கு பெரியசாமி தூரன் அவர்களுக்காக இரங்கல் கூட்டம் நடைபெறுகிறது. 'தூரன்' என்பது அவர் விரும்பி வைத்துக்கொண்ட பெயர் அவர் உண்மைப் பெயர் ம. ப. பெரியசாமி.

என்னுடைய எண்ணம் வெகு தூரம் செல்கிறது. 1933ம் வருஷம் வித்யாலயம் ஒரு சிறிய ஸ்தாபனம். அதற்கு இடம் கூட இல்லை. எளிய முறையில் ஆரம்பித்து அது வளர்ந்து வந்தது. அது ஒரு சரித்திரம், அந்த வளர்ச்சியின் அடிப்படையாக இருந்தவர்களில் ஒருவர் ம. ப. பெரியசாமி தூரன் அவர்கள்.

அவரை முதலில் எனக்குத் தெரியாது. நான் அப்பொழுது சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டிருந்த காரணத்தினுல், ஒரு ஆர்வம் அதில் இருந்தது. பல இளைஞர்களை நமது சுதந்திர இயக்கம் கவர்ந்திருந்தது. அந்த இளமையிலே எனக்கு ஒரு முரட்டு தைரியம். அந்த தைரியத்திலேதான் இந்த வித்யாலயம் ஆரம்பிக்கப்பட்டது.

வித்யாலயத்தை ஆரம்பித்த 4 மாதத்திலே நான் சிறைக்குச் செல்ல நேர்ந்துவிட்டது. 'ஆண்டவன் அருள் இருந்தால் எதுவும் நடக்கும்' என்பார்கள். ஒருவர் வந்தார். '6 மாதத்திற்கு நான் பார்த்துக்கொள்கிறேன்' என்று சொன்னர். எனக்கு 6 மாதம் சிறைவாசம் விதிக்கப்பட்டிருந்தது. அப்பொழுது வித்யாலயம் மிகவும் கஷ்டத்திலிருந்தது. பிள்ளைகள் மிகவும் பயந்தார்கள்.

நமது சி.சுப்பிரமணியம், ஈரோட்டில் பிரபல டாக்டராக இருந்த எல்.கே. முத்துசாமி, தூரன் எல்லோரும் ஒன்றாகப் படித்தவர்கள். ஒரு முறை சுப்பிரமணியமும், முத்துசாமியும் என்னிடம் வந்து ''ஒரு இலட்சியமுள்ள இளைஞர் இருக்கிறர்; வித்யாலயத்திற்கு அவர் மிகவும் ஏற்றவர்'' என்றர்கள். இதே போல தூரனிடத்திலும் 'நீ இலட்சியமுள்ள இளைஞஞக இருக்கிறய்; வித்யாலயத்திற்குப் போய் சேவை செய்' என்று அவர்கள் பேசியிருக்கிறர்கள்.

வித்யாலயம் அப்பொழுது மிகவும் கஷ்டமான சூழ்நிலையிலிருந்தது. இப்பொழுதுள்ள வசதிகள் எதுவும் அப்பொழுது கிடையாது. ஒரு நாள் மாலைநேரம் பேரத்தனூருக்கு தூரன் வந்து சேர்ந்தார்.

யார் என்று கேட்டேன் 54 ஆண்டுகளுக்கு முன்னல் 1933ல் இது நடந்தது. 'நான் பெரியசாமி, சுப்பிரமணியமும் எல். கே. முத்துசாமியும் இங்கே வேலைசெய்யச்சொல்லி அனுப்பினர்கள்' என்றர். எனக்கு ரொம்ப சந்தோஷம். உண்மையில் ஊழியர்கள்தானே ஒரு ஸ்தாபனத்தைக் கட்டிக்காக்கின்றவர்கள். பெரியசாமி வேலை செய்வதற்காக வந்ததாகச் சொன்னது என்னைக்கவர்ந்துவிட்டது.

அந்தக்கால ஆசிரியர்களுக்கு சம்பளம் எவ்வளவு என்று உங்களுக்குத் தெரியுமா? பி.டி. அஸிஸ்டெண்டுக்கு வெறும் 50 ரூபாய்தான். தலைமை ஆசிரியருக்குத்தான் அதிகம். அதாவது 60 ரூபாய். பெரியசாமி தூரன் பி. டி. அஸிஸ்டெண்ட்டாக சேர்ந்தார். பின்னர் தலைமை ஆசிரியராக ஆனர்.

1933லிருந்து 1947வரை தூரன் வித்யாலயத்திற்கு செய்த சேவை மகத்தான சேவை. பக்தி மிகுந்த சேவை, ஆர்வம் மிகுந்த சேவை, 'டெடிகேஷன்' (Dedication) என்று சொல்வார்களே அப்படிப்பட்ட சேவை.

வித்யாலயத்தில் பிள்ளைகளோடு ஒட்டி உறவாடி பக்தியோடு அவர் செய்த சேவையை எவரும் மறக்கவே முடியாது. அதனல்தான் நான் இப்போதும் அவரை நினைக்கிறேன். வித்யாலயத்தில் அவர் ஞாபகார்த்தமாக ஏதாவது செய்யவேண்டும்.

மகாலிங்கம்அவர்கள்சென்னையில் செய்யவேண்டும் என்று சொன்னர்கள் சென்னையிலும் செய்யலாம் சின்ன ஊரிலும் செய்யலாம், பெரிய ஊரிலும் செய்யலாம். எங்கு நடந்தாலும் நடக்காவிட்டாலும் கோயம்புத்தூரில் கட்டாயம் செய்யவேண்டும்.

வித்யாலயத்தில் பாடப்படுகின்ற பாடல்கள் அனைத்தும் குருமகராஜ் இராமகிருஷ்ணரைப் பற்றியதாகத்தான் இருக்கும். ஆனல் ஒரு பாட்டு மட்டும் பொதுவான பாட்டு. அது எனக்கு மிகவும் பிடித்தமான பாட்டு.

''எங்கே தேடுகின்றய்—
இறைவனை''

என்ற பாட்டுத்தான் அது. ஏழையினிடத்தில் இறைவன் இருக்கின்றன்

என்ற கருத்தமைந்த பாடல் அது. அந்தப் பாட்டை எழுதியவர் நமது தூரன் தான்.

தூரன் பாட்டுக் கட்டுவது எப்படி என்று அவரே சொல்லுவார். 'காலையில் எழுந்ததும் பிரார்த்தனை செய்கிறேன். அந்தப் பிரார்த்தனை முடிந்த பிறகு பாட்டுஎழுதுகிறேன்' என்பார். தமிழ் மொழியில் கலைக்களஞ்சியம் ஒன்றை உண்டாக்கவேண்டும் என்று நான் சிறையிலிருந்தபோதே ஒரு யோசனை செய்துவந்தேன். எல்லா மொழிகளிலேயும் இருக்கிறதே தமிழுக்கும் ஒன்று வேண்டுமே என நினைத்து வந்தேன்.

யாரை வைத்து இதனை உருவாக்குவது என்பதே எனது சிந்தனை. திரிகூடசுந்தரம் பிள்ளையை நினைத்தேன். அவர் தமிழ் மட்டும் தான் படித்தவர். விஞ்ஞானமும், கணிதமும் படித்த ஒருவர் இருந்தால் நல்லது எனக் கருதினேன்.

ஆனந்த விகடன் ஆசிரியர் ஆர். கிருஷ்ணமூர்த்தி-அவர்தான் உங்களுக்கெல்லாம் தெரியுமே நமது கல்கி-அவர் தான் தமிழ் வளர்ச்சிக் கழகம் அமைக்கப்பட்ட போது காரிய தரிசியாக பொறுப்பேற்றவர். அப்பொழுதுதான் நான் தலைவர். கலைக்களஞ்சியப் பணியை எடுத்துச் செய்ய-முழுநேர வேலையாக எடுத்துச்செய்ய - தகுந்த ஒருவரைத் தேடிக்கொண்டு இருந்தோம்.

கல்கி சொன்னார்: ''வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவதுபோல்இருக்கிறீர்கள். உங்கள் பெரியசாமியைக் கூப்பிடுங்கள்'' என்றார். பெரியசாமிக்கு எழுதினேன். 'வித்யாலயத்தை விட்டு இங்கு வருகிறாயா? என்றேன். அவரும் சம்மதித்தார். பிறகு அவர் சென்னைக்கு வந்தார். அவர் வந்த பிறகே கலைக் களஞ்சியப் பணிகள் ஆரம்பமானது.

அவர் கலைக் களஞ்சியத்திற்குச் செய்த சேவை மிகப்பெரிது; வித்யாலயத்துக்குச் செய்த சேவை மிகமிகப் பெரிது. அவைகளைவிடப் பெரிது 100க்கணக்கான வருஷங்களுக்குப் பின்பு வரப்போகிற சந்ததியினருக்கு அவர் எழுதிவைத்துள்ள பாட்டுகள்.

அவருக்கு ஏதாவது ஞாபகமாகச் செய்ய வேண்டுமானால் - ஒரு இசை அரங்கம் வைத்து அதில் பல இசை வாணர்களை அழைத்து அவர் பாடிய பாடல்களை எல்லாம் பாடும்படி செய்யலாம்.

இன்றைக்கு நமது பெண்கள் கூட சினிமா பாட்டுத்தான் பாடுகிறார்கள். வேறு பாட்டு தெரியமாட்டேங்குது. நான் பிள்ளைகளைப் பார்த்து பாட்டுபாடு என்றால் சினிமா பாட்டுத் தான் பாடுகிறார்கள். இலட்சியத்தோடு, ஆன்மீக உணர்ச்சியோடு, தேச பக்தியோடு பாடப்படுகின்ற பாடல்கள் இப்பொழுது ரொம்பக் குறைவு.

தேவாரம் வளர்த்த தமிழ்நாட்டில், பிரபந்தம் வளர்த்த தமிழ் நாட்டில், பெரிய புராணம் உண்டான தமிழ்நாட்டில், கம்ப ராமாயணம் உண்டான தமிழ்நாட்டில் அந்தப் பரம்பரையில் வந்த நமது பிள்ளைகள் நழுவி எங்கேயோ போய் என்னமோ பாடிக்கொண்டிருக்கிறார்கள்.

மனதில் வீரத்தையும், பக்தியையும், தேசப்பற்றையும் ஊட்டக்கூடிய

பாடல்கள் இருக்கத்தான் இருக்கின்றன. அவைகளைப் பரப்புவதற்கு என்ன செய்ய வேண்டும் என்று சிந்தனை செய்யவேண்டும்.

தூரனுக்கு ஞாபகார்த்தமாக அவருக்கு அஞ்சலி செய்வது என்பது இந்த பாட்டுக்களைப் பாடுவதுதான். அவர் கொண்ட இலட்சியம் அப்பாடல்களில் இருக்கின்றன. அந்த இலட்சியங்களைக் கடைப்பிடித்து என்ன செய்யவேண்டும் என்று யோசிக்க வேண்டும்.

ஆண்டவன் அருளாலே நாடு வளர வேண்டும். நான் பல தடவை நினைக்கிறேன் இந்தநாட்டில் ஆன்மீக இலட்சியத்தைப் பரப்புவது தான் நமது இலட்சியம். உலகத்திற்கே பரப்பவேண்டும். நமது பெரியவர்கள் எல்லாம் இதைத்தான் சொல்லியிருக்கிறார்கள் வாழையடி வாழையாக வந்தவர்களின் இலட்சியத்தை நிறைவேற்ற இந்த இலட்சியங்களை நாம் உலகம் முழுவதும் பரப்ப வேண்டும். அநேகம் எதிர்ப்பு சக்திகள் இப்போது இருக்கின்றன. அதை மீறி நாம் இதை எப்படிச் செய்வது என்பதுதான் நம்முன்புள்ள ஒரு பெரிய சவால்.

இன்னொரு கவலையும் எனக்கு சமீபத்தில் வந்தது. இப்போது குழந்தைகள் என்ன பாடுகிறார்கள்.

'டிங் டாங் பெல்',

'ரெய்ன் ரெய்ன் கோ அவே'

எனப் பாடுகிறார்கள். என்ன கண்றாவி இது. இன்றைக்கு இருக்கிற இங்கிலீஷ் மோகம் வெள்ளைக்காரன் காலத்தில் கூட இல்லை. இன்றைக்கு கூலிக்காரன் கூட இங்கிலீஷ் பேச ஆசைப்படுகிறான். அவர்கள் பிள்ளைகள் எல்லாம் 'மம்மி, டாடி' என்று சொல்கிறார்கள்.

அதனால் ஒரு புரட்சி ஏற்பட வேண்டும். அதைப்பற்றி தனியாக யோசிக்கவேண்டும். கூட்டம் போட்டு யோசிக்க வேண்டும். தூரன் அவர்கள் எத்தனையோ நல்ல பாட்டுக்களைப் பாடியிருக்கிறார். அவர் பாடியபாடல்களில் 'நர்சரி சாங்ஸ்' பல உள்ளன.

அந்தப் பாடல்களை எல்லாம் குழந்தைகளுக்கு சொல்லிக்கொடுத்து அவர்களை பாடும்படி செய்தால், அது தான் நாம் தூரனுக்கு செய்யும் ஞாபகார்த்தமாகும் அதனால் அவர் ஆன்மா சாந்தி அடையும். △

"வாரத்திற்கு ஒருமுறை இரவு பட்டினியிருக்க வேண்டும் நாளைக்கு முழுப் பட்டினியிருக்கப் போகிறேன்.

எனது குறிக்கோள்களை அடைய வேகமாக முன் செல்ல வேண்டும்.

பட்டினியாயிருக்கும் இரவில் என்னைப் பைமையாகப் பார்க்கவேண்டும். முருகன் அருளை அடைய முயற்சிக்க வேண்டும்.

சந்திரனைப் பார்க்க வருத்தமாயிருக்கிறது. அவனது குழந்தை ஒளி போய்விட்டது தலையில் நரை மயிர் தோன்றுகிறது. நான் அவனுக்கு உதவி செய்ய வேண்டும்."

சித்திரை 5
தூரன் நாட் குறிப்பிலிருந்து



# உணர்ச்சிக் கவிஞர் தூரன்

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை

மறுமலர்ச்சி பெற்றுவரும் தமிழ் மொழிக்குப் பாட்டாலும் உரையாலும் பணி செய்யும் எழுத்தாளர் இந்நாளிற் பலராவர். அன்னவருள் முன்னணியில் உள்ளவர் திரு. பெரியசாமித்தூரன்.

*வீரப் பாட்டும், விடுதலைப் பாட்டும், காதற் பாட்டும், கதைப் பாட்டும் குழந்தைப் பாட்டும், குறிப்பாட்டும் இன்னோரன்ன பிறவும் எழுதியவர் கவிஞர் தூரன். இன்னும் அவர் கவிதைகளிலே காவிரியாற்றைக் காணலாம்; கார்த்திகைப் பிறையையும் காணலாம் என்றால் மேலும் சொல்ல வேண்டுமா?*

''வசந்தத்தின் தூதுவனை
மாஞ்சோலையின் விசையை
கசந்த மனம் கொதித்து
காக்கை மடித்த தந்தோ''

என்று பழிக்கின்ருர். இன்னும் ஆற்ருமை தீரவில்லை. காக்கையின் கடுஞ்செயல் அவர் கருத்திற் பாய்ந்து உறுத்துகின்றது.

காக்கையே உன் நிறம் கறுப்பு; நெஞ்சமும் கறுப்பு; மூக்கும் கறுப்பு குரலும் கறுப்பு;

''கருவண்ணக் கருமூக்கி
கருமனத்துக் கருங்குரலி''

என்று ஏசுகின்ருர்.

உலகம் போற்றும் உத்தமராகிய காந்தியடிகளை மனக்கோயிலில் வைத்து வழிபடும் தொண்டர் பல்லாயிரவருள் இக்கவிஞரும் ஒருவர். சத்தியத்தின் திருவுருவாய் விளங்கிய சாந்தமுனி காந்திமகான் செந்நீர் சொறிந்துமடிந்தபோது இக்கவிஞர் மனம் இடிந்து பாடிய பாடல் இறவாப் பெருங் கவிதையாகும்.

''கத்தியின்றி ரத்தமின்றி
யுத்தமிட்டு பாரதத்தாய்
கைத்த விலையைக் களைத்தெறிந்த
அத்தலைவன் திருமார்பில்
அறிவிழந்தான் சுட்டவுடன்
ஆ! ராமா எனும் போதே
சத்தியம் செத்ததோ
தருமம் ஒளி மங்கிற்ருே''

என்று அதிர்ச்சியால் மனங்கலங்கி மயங்குகின்ருர். பின்பு தெளிவு பிறக்கின்றது; உண்மை புலனுகின்றது. அவர் இறந்த நாள் அன்ருே என்றும் இறந்த நாள் என்றெண்ணி ஆறுதல் அடைகின்ருர்.

''காந்தி யெனும் சத்தியந்தான்
கார் ஈயக் குண்டேறிச்
சிந்தும் குருதியினுல்
சிரஞ்சீவி யாயிற்றே''

என்பது ஓர் அருமையான கவிதை. சிரஞ்சீவியாகிய காந்தியின் நெறியே உலகத்தைச் சீராக்கும் செந்நெறியென்பது இக்கவிஞர் கொள்கை.

அன்பைச் சுருக்கி, அறிவைப் பெருக்கி, அறத்தை வேரறுக்கும் அணுகுண்டு நெறியிலே செல்லாது காந்தி நெறியைக் கடைப்பிடித்தால் உலகம் வாழும் என்று உறுதியாகக் கூறுகின்ருர்.

புலவர் பாடும் புகழுடைய காவிரியாற்றின் கரையிலே நின்று,

"நந்தா எழில் அரசி
நாணமுடன் உடல் வளைத்துச்
சிந்தா முறுவலுடன்
செல்கின்ருய் காவிரியே"

என்று கவிஞர் பாடும்பொழுது சிலம்பும், மேகலையும் எழுதிக் காட்டுகின்ற காவிரியின் சித்திரம் நம் மனக் கண்ணெதிரே மிளிர்கின்றது.

இக்கவிஞர் பாடும் பிள்ளைப் பாட்டிலே நமது உள்ளங் கவரும் உயரிய சுவை அமைந்திருக்கின்றது. மாசற்ற மனமும் மழலைச் சொல்லும் உடைய பச்சைக் குழந்தையைப் பற்றிப் பாடுகின்ருர்; பாருங்கள்:

"பச்சைக் குழந்தை என்ருல்—எனக்கொரு
பாசம் பிறக்குதம்மா—அதன்
கொச்சை மழலையிலே—உளந்தான்
கொஞ்சிக் களிக்குதம்மா"

என்ற பாட்டிலமைந்த உணர்ச்சி நம் உள்ளத்தை அள்ளுகின்ற தன்ருே? சின்னஞ்சிறு குழந்தையொன்று வீதியிலே நின்று 'அம்மா அம்மா, என்றழைத்து விம்மி விம்மி விழிநீர் பெருக்கி, முத்து முத்தாகக் கண்ணீர் வடிக்கக் கண்ட போது, இக்கவிஞர் பாடிய பாட்டு நம்முள்ளத்தையும் கரைக்கின்றது.

"தெய்வச் சுடர்க் குழந்தை
சிரித்த முகம் பொலிவிழந்து
நையக் கண்டால் உள்ளம்
நடுங்குகின்றதென் செய்கேன்
கன்னத்தில் முத்து உதிரக்
கவலை யிருள் தான்படர
எண்ணத்துக் காக இந்த
இளங் குருத்து வாடினதோ".

என்று இரங்குகின்ருர் கவிஞர்.

அழுகின்ற குழந்தையைக் கண்டால் தெய்வமும் இரங்கி அருள் சுரக்குமே என்று கூறுகின்ருர். முன்னெரு நாள் குளக்கரையில் நின்று அழுத குழந்தையைக் கண்டு ஆற்ருது வெளிப்பட்டுப் பாலடிசில் ஊட்டிய பார்வதியம்மையின் செயலை அதற்கு ஒரு சான்ருகக் காட்டுகின்ருர்.

குழந்தையின் துயரம் கண்டு தணியாத கவிஞர் உள்ளம் ஒரு பறவைக் குஞ்சையும் கண்டு உருகுகின்றது. காக்கை கூடுகட்டியிருந்த மரத்தின் அடியில் மாண்டுகிடந்தது ஒரு குயிற் குஞ்சு. கரும் பட்டுப்போன்ற அதன் அருமையான உடலைக் கொத்தித் துளைத்திருந்தது காக்கையின் மூக்கு. இக்கொடுமையைக் கண்டு கொதித்தது கவிஞர் உள்ளம். இளவேனிற் காலத்தில் மாஞ்சோலையில் மறைந்திருந்து இங்கிதமாகப் பாடி எல்லோரையும் மகிழ்விக்கும் குயிற் பிள்ளையைக் கருங்காக்கை கொத்திக் கொன்றதே என வருந்துகின்ருர்.

" அறிவால் வளர்ந்தோங்கி
அணுவைப் படையாக்கும்
திறமாம் செருக்கினிலே
அன்புள்ளம் சிறுத்திட்ட
அவினிதான் அழியாமல்
அவன்வாக்கே காத்திடுமால் "

என்று கவிஞரைப்போல் நம்பியே கைதொழுவோம் நாமும்;

அறப் படையால் மறப் படையை வெல்லலாம் என்பதை உலகறியக் காட்டிய பெருமகனுகிய காந்தியைப் பின்பற்றி எத்தனையோ தியாகிகள் பாரத நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டார்கள். அன்னவருள் ஒருவர் திருப்பூர்க் குமரன்; அறப்போர்க்களத்தில் தகவிலர் கையால் தடியடிபட்டு, 'காந்தியின் ஆணையை மீறிடோம் பகைக் கைத்தடி தன்னையும் சீறிடோம்' என்று சொல்லிக் கொண்டே இன்னுயிர் துறந்த அவ்வீரன் தமிழகத்தின் பெருமையை முன்னிலும் ஒருபடி உயர்த்திவிட்டான் என்று கூறுதல் மிகையாகாது.

" உடலை நொறுக்கு அடக்கினுல் — நெஞ்சில்
ஓங்குபேர் ஆர்வம் ஒடுங்குமோ?
கடலின் கொதிப்பைக் குறுந்தடி — வீச்சில்
கட்டுப்படித்திட லாகுமோ "?

என்ற அறப்படையின் வெற்றியை முழக்குகின்ருர் கவிஞர்.

திருப்பூர்க் குமரனைப் போன்ற தியாகிகளைப் பெற்ற வீரத் தாய்மார்கள் இந்நாட்டில் விளங்கினர் என்பது பழந்தமிழ் நூல்களால் அறியப்படுவதாகும் அத்தகைய வீரத்தாய் ஒரு கவிதையிலே காட்சி தருகின்ருள். முதுமைசான்ற ஒரு மாது நரம்பெழுந்து உலர்ந்த கையள் — நாயகனையும், மைந்தர் நால்வரையும் போர்க்களத்திற் பறிகொடுத்த வீரப்பாவை — தன்நாட்டு மன்னனுகிய பிரதாப சிங்கனைச் சொல்லாலும் செயலாலும் ஊக்குவித்து மானங்காத்த விழுமிய வரலாறு 'கிழவியும் ராணுவும்' என்ற கதைப் பாட்டிலே அழகுற விளக்கப்பட்டுள்ளது.

" வள்ளுவனும் கம்பனுமே
வளர்த்த சுவைத் தீந்தமிழின்
தெள்ளமுதங் கொண்டவன் நீ
சீர்குலையக் காரணமேன் "?

என்று கேட்கிருர் கவிஞர், தெள்ளமுதம் வழங்கும் வள்ளுவரையும் கம்பரையும் மறந்ததுதான் காரணம் என்று சொல்லவா வேண்டும்?



# நான் கண்ட தீரன்

சி. சுப்பிரமணியம்
முன்னாள் மத்திய அமைச்சர்

1927-ஆம் ஆண்டு கு. சு. பெரியசாமி, ம. ப. பெரியசாமி என்ற இரண்டு மாணவர்கள் சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்து விக்டோரியா ஹாஸ்டலில் இடம் பெற்றார்கள். நானும் அப்பொழுது மாநிலக் கல்லூரி மாணவனாக அதே ஹாஸ்டலில் தங்கி இருந்தேன். இரண்டு பெரியசாமிகளும் ஈரோட்டுக்குப் பக்கத்திலிருந்து வந்தவர்கள். அதே சமயத்தில் ல. கி. முத்துசாமி அவர்களும் சென்னை மருத்துவக் கல்லூரி மாணவனாக அதே விடுதியில் தங்கியிருந்தார். புதிதாக வந்த இரு மாணவர்களையும் எங்கள் எல்லோருக்கும் அறிமுகம் செய்து வைத்தார். அப்போது ஆரம்பமானது எங்களுடைய நட்பு.

ம. ப. பெரியசாமி அடர்த்தியான குடுமியுடன் காட்சியளித்தார். பொதுவாக ஈரோட்டுப் பக்கத்திலிருந்து வந்தவர்களெல்லாம் குடுமி வைத்தவர்களாக இருந்தார்கள். சென்னைக்கு வந்த பின்புதான் குடுமியை அகற்றி கிராப் வைத்துக் கொள்வார்கள். இது ஒரு நாகரிக வளர்ச்சியாகக் கருதப்பட்டது. நாகரிகப் போக்கைவிடக் குடுமியை வைத்து ஹாஸ்டல்களில் சமாளிப்பது மிகவும் கஷ்டம். தலைக்குக் குளிப்பதும், தலையை உலர்த்துவதும் ஒரு காட்சியாகவே இருக்கும். இந்த அசௌகரியங்களைத் தவிர்ப்பதற்கே முடி வெட்டிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

ம. ப. பெரியசாமி எப்பொழுதும் தைரியமாகத் தன்னுடைய கருத்துக்களை வெளியிடுவார். ஒரு தடவை ஹாஸ்டலில் வருடாந்திர விருந்து வைத்திருந்தார்கள். அப்பொழுது ஹாஸ்டலில் வார்டனாக இருந்தவர் புகழ்பெற்ற ஆங்கிலப் பேராசிரியர் எஸ். இ. ரங்கநாதன் அவர்கள். அவரைக் கண்டால் யாரும் நடுங்குவார்கள். அவ்வளவு கண்டிப்பான பேர்வழி. விருந்தின் போது மாணவர்களை விருந்து எவ்வாறு இருக்கிறதென்று விசாரித்துக் கொண்டு வந்தார். எல்லோரும் விருந்து மிகவும் நன்ருக இருந்தது என்று சொல்லி வந்தார்கள். பெரியசாமியிடம் வந்து கேட்டதும் அவர் எல்லோரும் சொல்லியதற்கு மாருக ''சாப்பாடு ஒன்றுமே வாயில் வைக்க முடியவில்லை'' என்று முகத்தில் அடித்தமாதிரி சொன்னுர். ''நீதான் உண்மையைப் பேசினுய். என்னுடைய கருத்தும் அதேதான்'' என்று பெரியசாமியைத் தட்டிக்கொடுத்தார் திரு. ரங்கநாதன் அவர்கள்.

1929-ல் சென்னை மாநில அரசு ஒரு முக்கியமான நடவடிக்கையை எடுத்தது. அப்போது பர்மாவும் இந்தியாவுடன் இணைந்திருந்த காலம். அரசாங்கத்திற்கு விரோதமான கருத்துக்களைப் பரப்பக் கூடியவை என்கின்ற காரணத்தைக் கொண்டு பர்மா அரசாங்கம் பாரதியார் பாடல்களுக்கு தடை விதித்தது. அதையொட்டி சென்னை அரசாங்கமும் இந்தத் தடை உத்தரவைப் பிறப்பித்தது. இதைக் கண்டித்து சென்னை சட்டசபையில் சத்தியமூர்த்தி அவர்கள் ஒரு கண்டனத் தீர்மானம் கொண்டு வந்தார். அந்தத் தீர்மானத்தை ஒட்டி சத்தியமூர்த்தி அவர்கள் பாரதியைப் பற்றியும் அவருடைய பாடல்களைப் பற்றியும் ஒரு அருமையான சொற்பொழிவாற்றினுர். அதை எல்லாப் பத்திரிகைகளும் விரிவாகப் பிரசுரித்திருந்தன. இதுவரையிலும் பாரதியாரைப் பற்றியே அறியாமலிருந்த மாணவர்கள் மத்தியிலே பாரதியாரைப் பற்றியும் அவருடைய பாடல்களைப் பற்றியும் ஒரு புதிய ஆர்வம் ஏற்பட்டது. பாரதியாருடைய பாடல்களைத் தெரிந்து கொள்ள பலரும் முயற்சி செய்தனர். இந்த ஆர்வத்தைப் பூர்த்தி செய்வதற்கென்றே ம. பெரியசாமி, கு. சு. பெரியசாமி, ல. கி. முத்துசாமி, அ. அழகிரிசாமி, நானும் மற்றும் சில மாணவ நண்பர்களும் சேர்ந்து ''பித்தன்'' என்ற பத்திரிகை ஆரம்பித்தோம். அதற்கு ஆசிரியர் ம. பெரியசாமி.

சுப்ரமணிய பாரதியார் சுதேசமித்திரன் பத்திரிகையின் உதவி ஆசிரியராக ஒரு காலத்தில் இருந்தார். பாரதியாரின் பாடல்களும் கட்டுரைகளும் சுதேசமித்திரன் பத்திரிகையில் பல ஆண்டுகளுக்கு முன்பு வெளி வந்திருந்தன. சுதேசமித்திரன் ஆபீசிற்கு சென்று இந்தப் பாடல்களையும், கட்டுரைகளையும் தேடி எடுக்கும் பணியில் ம. பெ. பெரிதும் ஈடுபட்டார். அதை பித்தன் பத்திரிகையில் பிரசுரித்து பாரதி நூல்களை மாணவர்களுக்கு அறிமுகப் படுத்தினுர். அன்று ஆரம்பித்தது பெரியசாமி அவர்களின் பாரதி சேவை. அவர் வாழ்நாள் முழுவதும் பாரதி பக்தனுகவே விளங்கினுர். பாரதியைப் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சிகள் செய்து பல நூல்களை வெளியிட்டிருக்கிருர்.

மாணவராக இருந்த காலத்திலேயே தமிழ்ப் பணியில் ஈடுபட வேண்டுமென்ற பேரார்வம் கொண்டிருந்தார் பெரியசாமி. அவருடைய வாழ்க்கை முழுவதையும் அதற்காகவே அர்ப்பணித்துக் கொண்டார்.

கல்லூரிப் படிப்பு முடிந்து கணிதத்தில் பட்டம் பெற்றார். கோபி செட்டிபாளையம் வைரவிழா உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியராக சிலகாலம் பணியாற்றினர். கோவையில் திரு. தி. சு. அவினசிலிங்கம் அவர்கள் ராமகிருஷ்ண வித்யாலயத்தை 1930-ஆம் ஆண்டு ஆரம்பித்தார். சில வருடங்களுக்குப் பின் அந்த வித்யாலயம் போத்தனூருக்கு மாற்றப் பட்டு அங்கு நடைபெற்று வந்தது. வித்யாலயத்திற்கு ஒரு நல்ல தலைமை ஆசிரியர் தேவைப்பட்டது. நான் அக்காலத்தில் வித்யாலயத்தில் உதவி காரியதரிசியாகப் பணியாற்றி வந்தேன். பெரியசாமி அவர்களை தலைமை ஆசிரியராகப் போடலாம் என சிபாரிசு செய்தேன். ல. கி. முத்துசாமி அவர்களும் இதைப் பெரிதும் ஆதரித்தார்கள். கோபியை விட்டு போத்த-னூருக்கு வந்து வித்யாலயப் பணியில் ஈடுபட்டார்கள். ஆசிரியர் பயிற்சிக்கும் ஒரு வருடம் சென்னை சென்று பி. டி. என்ற பட்டத்தைப் பெற்ருர். வித்யாலயம் உயர்நிலைப்பள்ளியாக உயர்ந்தபொழுது தலைமை ஆசிரியராக பணியாற்றுவதற்கு இந்த பட்டம் அவசியமாக இருந்தது. மாணவர்களின் முழு அன்பையும் பெற்று சிறந்த ஆசிரியராக விளங்கி வந்தார் பெரியசாமி அவர்கள்.

1946-ஆம் ஆண்டில் சென்னை மாநிலத்தில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டது. அந்த மந்திரி சபையில் தி. சு. அவினசிலிங்கம் அவர்கள் கல்வி மந்திரி. தமிழ் முன்னேற்றமடைந்து போதன மொழியாக விளங்குவதற்கும் பல துறைகளிலும் முன்னேறுவதற்கும் வழிவகுக்க முன்வந்தார். அப்பொழுது தான் தமிழ் வளர்ச்சிக் கழகம் அமைக்கப்பட்டது. கழகத்தின் மூலம் தமிழ் கலைக் களஞ்சியம் ஒன்று தயார் செய்ய வேண்டுமென்று முடிவு செய்யப் பட்டது.

இந்தப் பணிக்கு யார் பொருத்தமானவர்கள் என்று ஆலோசனை செய்த பொழுது பெரியசாமி அவர்களின் பெயர்தான் முன்னணியில் வந்தது. களஞ்சியப் பொறுப்பை ஏற்று நடத்த ஆசிரியராக பெரியசாமி நியமிக்கப்பட்டார். இந்த வேலையில் கண்ணும் கருத்துமாக ஈடுபட்டு பத்து தொகுதிகளாக கலைக் களஞ்சியத்தை வெளியிட்ட சிறப்புப் பெருமை பெரியசாமியையே சாரும்.

அவரை அப்போது எல்லோரும் பெரியசாமி தூரன் என்றுதான் அறிவார்கள். தூரன் என்று அவர் பெயர் வைத்துக் கொண்டது பித்தன் ஆசிரியராக இருந்த காலத்திலேயே. தூரன் என்பது அவருடைய சமுதாய குலப்பெயர். தூரன் கூட்டம் என்று சொல்வார்கள் அந்தப் பெயரையே தனது சிறப்புப் பெயராக வைத்துக் கொண்டார். எத்தனையோ பேர் பெரியசாமி என்ற பெயர் கொண்டிருந்தாலும் பெரியசாமி தூரன் என்ருல் இவர் ஒருவரைத்தான் குறிக்கும். கலைக் களஞ்சிய வேலை முடிந்த பிற்பாடு, குழந்தைகள் கலைக் களஞ்சிய வேலையை எடுத்து, அதையும் பத்துத் தொகுதிகளாக வெளிக் கொணர்ந்தார். இந்த வேலைக்கு மத்தியில் தமிழிசைப் பணியிலும் பெரிதும் ஈடுபட்டார். எல்லா இசைக் கச்சேரிகளிலும் தெலுங்கு சமஸ்கிருத பாட்டுகளுக்குத்தான் முக்கியத்துவம்

கொடுத்து வந்தார்கள். இதற்குக் காரணம் தகுதிவாய்ந்த சாகித்யங்கள் தமிழில் இல்லை என்ற குறையை பலர் சொல்லி வந்தார்கள். இக்குறையைத் தீர்க்கின்ற முறையில் பல அருமையான சாகித்யங்களை இயற்றி அதற்கு இசையமைத்து நூல்களாக வெளிட்டார். தூரன் பாடல்கள் இன்று புகழ்பெற்றவை.

குழந்தைகளுக்கான பாட்டுக்களும் கதைகளும் எழுதுவதில் மிகவும் ஆர்வம் கொண்டவர். தமிழில் குழந்தை இலக்கியத்தை வளர்ப்பதிலே ஒரு சிறந்த பங்கு பெரியசாமிக்கு உண்டு. அவருடைய குழந்தைப் பாட்டுக்களும் கதைகளும் ரேடியோ மூலம் ஆயிரக்கணக்கான குழந்தைகளை மகிழ்வித்திருக்கின்றன. குழந்தைகள் அவரைக் கண்டாலே கதை சொல்லுங்கள் எனப் பிடித்துக்கொள்வார்கள். இவரும் சலியாமல் கதை சொல்லுவார்.

பாரதியாரைப் பற்றி அரிய ஆராய்ச்சிகள் செய்து பல நூல்களை வெளியிட்டுள்ளார். பாரதியாரின் விரிவான வாழ்க்கைச் சரிதம் எழுத வேண்டுமென்பது அவருடைய ஆசை. இந்த ஆசை ஒன்றுதான் அவரால் பூர்த்தி செய்ய முடியவில்லை.

தூரனின் வாழ்க்கை வெற்றியின் ரகசியம் அவருடைய தெய்வ பக்தி. முருகன்தான் அவருடைய இஷ்ட தெய்வம். முருகன் கோயில்களுக்குச் சென்றால் முருகனைக் கண்டதும் அவருக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகும். முருகனைப் பற்றிய பாடல்கள் உதயமாகும். முருகனைப் பற்றி மட்டும் அல்லாது மற்ற தெய்வ சொரூபங்களைப் பற்றியும் பாடல்கள் அமைத்திருக்கிறார். எப்பொழுதும் எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டார். வித்யாலயத்தில் தலைமை ஆசிரியராக இருந்தபொழுது அவர் எடுத்துக் கொண்ட சம்பளம் முப்பது ரூபாய்தான். அதில் பத்து ரூபாய் சாப்பாட்டிற்காக கொடுத்து விடுவார். இன்னொரு பத்து ரூபாய் தன்னுடைய செலவுகளுக்கு, பாக்கி பத்து ரூபாயை ஏழை மாணவர்களுக்குக் கொடுத்து உதவுவார், முப்பது ரூபாயில் எவ்வளவு பெரிய சிறந்த வாழ்க்கை! இத்தனை பெரிய சிறப்புக்களுக்கு மத்தியில் அவருக்கு ஏற்பட்ட தீராத தொல்லை உடல்நலக் குறைவு. காக்கா வலிப்பு என்று சொல்வார்கள்.

இறுதிக் காலத்தில் இது அவரை மிகவும் வாட்டியது. பத்து வருடங்களுக்கு மேல் படுக்கையிலேயே வாழ்க்கையைக் கழித்தார். தன்னுடைய நோயைப் பொருட்படுத்தாது தெய்வ வழிபாட்டிலும் தமிழ்ப் பணியிலுமே தன்னை ஆழ்த்திக் கொண்டார். பெரிய சங்கடங்களுக்கு மத்தியிலும் தெய்வ நம்பிக்கை சிறிதும் குறையாமல் வாழ்க்கையை நடத்தினார். தெய்வ பக்தி, வாழ்க்கையிலே நன்னெறி இதைக் கடைப்பிடிப்பவர்களுக்கும் வாழ்க்கையில் இவ்வளவு பெரிய சோதனையா? என்று தூரனைப் பார்க்கும் பொழுது தோன்றும். அவ்வளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பார். அவர் உயிர் துறந்த பொழுது அவருடைய மகள் சாரதா சொன்னது ''போய் விட்டீர்களா அப்பா. இன்றுதான் உங்களுக்கு விடுதலை''.



சிலம்புச் செல்வர்
ம. பொ. சி.

# தூரன் ஓர் இலக்கிய நிறைகுடம்

**என் அரிய நண்பர் திரு. பெரியசாமித் தூரன் அவர்களை நினைக்கும் போது, ''தமிழ்க் கலைக் களஞ்சியத்'' தொகுப்பு நினைவுக்கு வரும். அவருடைய சாதனைகள் பலவாயினும், கலைக் களஞ்சியத் தொகுப்பே தலையாயதாகும்.**

திரு. தூரன் அவர்கள், சிறந்த தேசபக்தர்; பழுத்த காந்தியவாதி; சொல்லாலும், செயலாலும் நடவடிக்கையாலும் இந்தப் பண்புகளைத் தம் வாழ்நாள் முழுவதும் கொண்டிருந்தார். ஆயினும், கட்சி அரசியலில் புகுந்து தம்மை விளம்பரப்படுத்திக்கொள்ள அவர் எந்த நாளிலும் விரும்பவில்லை. அந்த வகையிலே அவர் பெரிதும் அடக்கம் காட்டி வந்தார்.

இந்த இருபதாம் நூற்றுண்டிலே தமிழ் மொழியின் வளர்ச்சிக்கான பணிகள் எத்தனையோ நடைபெற்றிருக்கின்றன. அவற்றுள் தமிழிசை இயக்கமும் தமிழ்க்கலைக் களஞ்சியத் தொகுப்பும் தலைசிறந்தவையாகும். இந்த இரண்டிலுமே திரு. தூரன் அவர்கள் இரண்டறக் கலந்திருந்தார்.

பெரியவர் திரு. தி. சு. அவினுசிலிங்கம் செட்டியார், பழைய சென்னை மாகாணத்தின் கல்வி அமைச்சராக இருந்தபோது, 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தினுர். ஆரம்ப காலத்தில் அதன் செயற் குழுவிலே தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பிரதிநிதியாக நானும் அங்கம் பெற்றிருந்தேன்.

திரு. தூரன் அவர்களை முதல் செயலாளராகக் கொண்டிருந்த பெருமை அந்தக் கழகத்திற்கு உண்டு. கல்வி அமைச்சர் திரு. தி. சு. அவினுசிலிங்கம் அவர்களே அதற்குக் காரணமாவார். அவரும் தமது திறமையை வெளிப் படுத்தி, பல சாதனைகளைப் புரிந்து வந்தார்.

''தமிழால் எதுவும் முடியும்'' என்பதனை உலகுக்கு உணர்த்த திரு. தூரன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த தமிழ்க் கலைக் களஞ்சியம் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

ஒன்பது தொகுப்புக்களை வெளியிட்டதன் வாயிலாக விஞ்ஞானத் துறைக்குப் பயன்படத்தக்க பதினுயிரக்கணக்கான கலைச்சொற்களைத் தமிழில் தொகுத்துக் கொடுத்தார் திரு. தூரன். இது, சாதாரணப் பணியல்ல; 'எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!' என்று யான் கூறிவரும் கொள்கைக்கு விரைவில் வெற்றி கிடைக்கும் என்பதற்குத் தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் மூலம் கிடைத்துள்ள விஞ்ஞானக் கலைச் சொற்களே சிறந்த சான்ருகும்.

திரு. தூரன் அவர்களும், 'கல்கி' ஆசிரியர் திரு. ரா. கிருஷ்ணமூர்த்தியும் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் ஆரம்ப காலச் செயலாளர்களாக இருந்தனர்.

இவ்விருவருமாகச் சேர்ந்து ஒன்றிரு ஆண்டுக்கொரு முறை ''தமிழ் விழா'' நடத்தி வந்தனர். தமிழ்ச் சங்கம் நிலைபெற்றிருந்த மதுரையம்பதியிலே முதல் விழா நடைபெற்றது. இரண்டாவது விழா திருவாரூரில் நடைபெற்றது, ஆம்; தியாகேசர் கோயிலினுள்ளே!

பின்னர் கோவை நகரிலும், தமிழகத்தின் தலைநகரான சென்னையிலும் தமிழ் விழாவை நடத்தினர், தமிழகத்திற்கு வெளியே இந்தியாவின் தலைநகரான டில்லியிலும் நடத்தினர்.

இந்தியாவுக்கு வெளியே அயல்நாடு ஒன்றிலும் தமிழ் விழா நடத்தப் பட்டது. இலங்கையின் ஈழப் பகுதியான யாழ்ப்பாணத்திலேதான் அந்த மாநாடு நடத்தப்பட்டது. ''தமிழ் விழா'' என்னும் பெயரில் அந்த விழாக்கள் நடைபெற்றிருப்பினும், பிற்காலத்தில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு களுக்கு முன்னேடியாக அவை விளங்கினவெனலாம்.

திரு. பெ. தூரன் அவர்கள், ஒரு இயற்கைக் கவிஞராக விளங்கினர். தமிழிசை இயக்கம் தோன்றியபோது, அதனை விரும்பாதவர்கள், தமிழில் இசைப்பாடல்கள் உண்டா?'' என்னும் வினா எழுப்பினர். 'உண்டு' என்று விடையளிக்க முயன்றோர் கோபாலகிருஷ்ண பாரதி, இராமலிங்க சுவாமிகள், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, மாயூரம் வேதநாயகனார் ஆகியோரின் பாடல்களைத் தமிழிசைச் சங்க மேடைகளிலே பாட வழி செய்தனர்.

அப்போது, புதிதாக இசைப் பாடல்களைப் புனைந்து தமிழின் சிருஷ்டித் திறன் அழிந்து போய்விடவில்லை என்பதனைக் காட்டவும் கவிஞர்கள் பலர் தோன்றினர். அவர்களிலே தலைசிறந்து விளங்கினார் அமரகவி பெரியசாமித் தூரன். அவர் புனைந்தளித்த இசைப் பாடல்கள் தமிழிசைச் சங்க மேடைகளிலும் வேறு பல அமைப்புகள் ஆண்டுதோறும் நடத்தும் இசை விழாக்களிலும் இன்றளவும் பாடப்பட்டு வருகின்றன.

திரு. ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் முதல்வராக இருந்தபோது, 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி தூண்டியதன் விளைவாக, ''அரசவைக் கவிஞர்', நியமனம் ஆரம்பமாயிற்று. முதல் கவிஞராக நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் மூன்றாண்டுக் காலம் முடிவுபெற்றதும், 'அடுத்த அரசவைக் கவிஞர் யார்?' என்ற வினா எழுந்தது. 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தியும், வேறு சிலரும் கவிஞர் தூரன் பெயரைப் பரிந்துரைத்தனர். ஆனால், மூன்-றாண்டுகளுக்கு ஒருமுறை தரமான கவிஞர்கள் ''அரசவைக் கவிஞர்'' ஆசனத்திற்குக் கிடைப்பது அரிது என்று முதல்வர் ராஜாஜி கருதினார். அதனால் அரசவைக் கவிஞர் நியமனத்தையே அவர் கைவிட்டு விட்டார். இது நடக்கவில்லையெனில், அமரகவி பெரியசாமித் தூரன் அரசவைக் கவிஞர் பதவியையும் பெற்றிருப்பார்.

திரு. பெரியசாமித் தூரன் சிறந்த மேடைப் பேச்சாளராகவும் விளங்கினர். அமைதியான முறையில் தான் எடுத்துக்கொண்ட பொருளைப் பற்றித் திறம்படப் பேசும் நாவன்மை அவருக்கு இருந்தது.

மகாகவி பாரதியார் அவர்களிடம் திரு. பெ. தூரனுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. பாரதியாரின் வரலாற்றையொட்டி, முதன்முதலில் ஆராய்ச்சி நூல் ஒன்றைத் தயாரித்து வெளியிட்ட பெருமை திரு. தூரனுக்கே உரித்தாகும். ''பாரதி தமிழ்'' என்னும் பெயரைப் பெற்ற நூல் அது. மிகவும் அரும்பாடுபட்டு 'சுதேசமித்திரன்' 'இந்தியா' ஆகிய பழைய ஏடுகளையெல்லாம் தேடியெடுத்து, அவற்றிலிருந்த தகவல்களைச் சேகரித்துத் தயாரித்தார் திரு. தூரன். பிற்காலத்தில் பாரதியார் பற்றி என் போன்றவர்கள் இயற்றிய ஆராய்ச்சி நூல்களுக்கு திரு. தூரன் படைத்த ''பாரதி தமிழ்'' என்னும் நூல் பெரிதும் பயன்பட்டது.

பாரதியாரின் உரைநடைக் கட்டுரைகளைத் தலைப்புவாரியாகப் பிரித்து தனித்தனி நூலாக வெளியிட்ட பெருமையும் திரு. தூரனுக்கு உண்டு.

தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு அவரது தொண்டு முன்னைவிடவும் அதிகமாகத் தேவைப்பட்ட நேரத்தில் அவர் கண்மூடி விட்டார்! அவருடன் நெருங்கிப் பழகிய என் போன்ற நண்பர்களுக்கு அவரது பிரிவு ஆற்றொணாத் துயரைத் தருவதாகும்.

திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார், திரு. சி. சுப்பிரமணியம் ஆகியோர் கல்வி அமைச்சர் பொறுப்பை நிர்வகித்தபோது திரு. தூரன் அவர்களுடைய பெருமையை தமிழகத்தார் நன்கு அறியும்படி செய்தனர். திரு. சி. சுப்பிரமணியம் கல்வி அமைச்சராக இருந்த காலத்திலே, அவருடைய முயற்சியால் திரு. தூரன் அவர்களின் மணிவிழா கொண்டாடப்பட்டு அவருக்குப் பொற்கிழியும் வழங்கப்பட்டது.

டாக்டர் பொன்மனச் செம்மல் எம். ஜி. ஆர். அவர்களை முதல்வராகக் கொண்ட இன்றைய தமிழக அரசும், திரு. தூரனைப் பாராட்டிப் பரிசளித்தும் பெருமை செய்ததுண்டு.

இன்னும் பலப்பல பரிசுகளையும் பாராட்டுக்களையும் பெறுவார் என்று யான் நம்பியிருந்த நேரத்திலே, அவரது வாழ்வு முடிந்துவிட்டது.

திரு. தூரன் நோயுற்று ஆண்டுக் கணக்கில் படுக்கையில் இருந்தபோது எழுதுகோலை கையில் கொண்டு தமிழ் மொழிக்குத் தொண்டு செய்து வந்தார். அதனை கடைசி நாள் வரை அவர் கைவிடவில்லை

அவருடைய பூத உடல் மறைந்த பின்னர், புகழுடல் தமிழோடு கலந்துவிட்டது.



## கவியுள்ளத்தின் துடிப்பு

*உண்மையான கவிஞனின் உள்ளம் மிகமிக மென்மையானது. அதாவது ஒரு துன்பத்தை பூதக் கண்ணாடிபோல நூறு மடங்கு ஆயிரம் மடங்கு பெருக்கிக் காட்டும் இயல்புடையது.*

—*கவிஞர் தூரன்*



# பண்பில் சிறந்த தூரன்

நெ. து. சுந்தரவடிவேலு

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே. நல்லாரோடு இணங்கி இருப்பதுவும் நன்றே" இது ஆன்றோர் வாக்கு.

நான் நல்லார் பலரைக் கண்டதுண்டு. அத்தகையவர் பலரோடு நட்பு கொண்டிருக்கிறேன். அவர்களில் முன் வரிசையில் நிற்பவர்களில் ஒருவர் ம. ப. பெரியசாமித் தூரன் ஆவார்.

ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்து எட்டாம் ஆண்டு நான் சென்னை மாநிலக் கல்லூரியில் இண்டர்மீடியட் வகுப்பில் சேர்ந்தேன். அடுத்திருந்த 'விக்டோரியா மாணவர் விடுதியிலும்' சேர்ந்தேன். விடுதியில் ம. ப. பெரியசாமி தூரன் அவர்களைக் கண்டேன். அவர் அப்போது இண்டர்மீடியட் இரண்டாம் ஆண்டில் படித்துக் கொண்டிருந்தார்.

நான் அப்போது உருவில் 'பொடியன்'. அதிகம் கூச்சம் உடையவன். என் அச்சத்தைப் போக்கி, அரவணைத்து மூத்தவர்களோடு பழக வழி செய்தவர் பெரியசாமி தூரன் ஆவார். அப்போது விக்டோரியா மாணவர் விடுதியில் தங்கியிருந்து மாநிலக்கல்லூரியில் என் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவர்கள் குட்டப்பாளையம் கே எஸ் பெரியசாமி, முத்தாய்பாளையம் ஆயண்ணன், ஈரோடு வேணுகோபால், ஓ. வி. அளகேசன் ஆகிய பலர் ஆவர்.

மதிப்பிற்குரிய சி. சுப்பிரமணியம் அவர்கள் அப்போது பி. ஏ. வகுப்பில் முதல் ஆண்டில் படித்துக் கொண்டிருந்தார்.

முற்போக்குச் சிந்தனையுடைய இவர்கள் எல்லோரும் 'வனமலர்ச் சங்கம்' என்ற ஒரு சங்கத்தை நடத்தி வந்தார்கள். இச்சங்கம் ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்தைந்து முதல் ஈரோடு, திருச்சி, மதுரை, சென்னை, கொடுமுடி ஆகிய ஊர்களில் கிளைகளோடு செயல்பட்டு வந்தது. மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாகவும் இயங்கி வந்தது.

அச்சங்கத்தின் நோக்கங்களாவன கல்விக்கு இடையூறு இல்லாத வகையில் நாட்டுத் தொண்டாற்றுவது; தமிழை வளர்த்து அதற்குரிய இடத்தை பல துறைகளிலும் பெற்றுத்தர பாடுபடுதல்; சாதி வேற்றுமைகளைக் களைதல் முதலியன ஆகும்.

அச்சங்கத்தின் இந்நோக்கங்களை மாணவர்களிடையே பரப்புவதற்காக 'பித்தன்' என்கிற மாத இதழ் ஒன்றை சென்னை 'வனமலர்ச் சங்கம்' நடத்தி வந்தது. தொடக்கத்தில் கையேட்டுப் பிரதியாக வந்த 'பித்தன்' ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்தெட்டு, இருபத்து ஒன்பதாம் ஆண்டுகளில் அச்சில் வெளிவந்தது.

அண்ணன் பெரியசாமி தூரன் என்னை வனமலர்ச் சங்கத்தில் உறுப்பினர் ஆக்கினர். 'பித்தனுக்கும்' உறுப்பினராக்கினர்.

'பித்தனில்' திங்கள்தோறும் எழுதிவந்த சிலரில் பெரியசாமி தூரன் ஒருவர் ஆவார். 'பித்தன்' வாயிலாக அரும்பிய தூரனின் இலக்கியப் பணி பல்லாண்டு காலம் தொடர்ந்தது. அவர் நடை எளிய நடை. உளவியல், நாட்டுப்பற்று, சமுதாய நலன் ஆகியவை அவரது இலக்கியங்களில் இழை ஓடி உயிரூட்டின.

நாட்டுப்பற்றின் காரணமாக தூரன் அவர்கள் அந்நிய அரசில் பணிபுரிய விரும்பவில்லை. எனவே பெரியநாயக்கன்பாளையத்தில் திரு. தி. சு. அவினாசி லிங்கனார் நிறுவிய இராமகிருஷ்ண வித்யாலயப் பள்ளியில் ஆசிரியராக வாழ்க்கையைத் தொடங்கினர். குழந்தைகளோடும், சிறுவர்களோடும் நெருக்கமான உறவு ஏற்பட்டது. அவ்வுறவு அவரை குழந்தைப் பாடல்கள் இயற்றத் தூண்டியது.

தலைமை ஆசிரியரான தூரன் அவர்களை சக ஆசிரியர்களும் மாணவர்களும் அன்பு சொட்ட 'அண்ணு' என்றே அழைப்பர்.

பள்ளிக்கூட வேலைகளைத் திறம்படக் கவனித்துக்கொண்டே, இலக்கியப் பணியிலும் ஈடுபட்டார். கவிதைகள், கட்டுரைத் தொகுதிகள், சிறுகதைகள் ஆகியவற்றை எழுதி தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்தார். இசை அரங்குகளில் கச்சேரி செய்வதற்கேற்ற கீர்த்தனைகள் பலவற்றை எழுதி வெளியிட்டார். அவரது கீர்த்தனைத் தொகுப்புகளைப் பாராட்டி சென்னை தமிழிசைச் சங்கம் தூரன் அவர்களுக்கு 'இசைப் பேரறிஞர்' பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

தூரன் அவர்கள் ஆற்றிய பணிகளில் எல்லாம் சிறந்ததும், கடினமானதும் பல்லாண்டு வேலை வாங்கியதும் தமிழில் வெளிவந்த பத்து பாகங்கள் கொண்ட 'கலைக் களஞ்சியம்' ஆகும்.

ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்து ஆறில் திரு. ஓ. பி. ராமசாமி ரெட்டியார். முதல் அமைச்சர் ஆக விளங்கியபோது அரசின் தூண்டுதலால், திரு. அவிஞசிலிங்கனுரைத் தலைவராகக்கொண்டு 'தமிழ் வளர்ச்சிக் கழகம்' அமைக்கப்பட்டது. அதன் சார்பில் 'கலைக் களஞ்சியம்' வெளியிட முடிவு செய்யப்பட்டது. அதற்கு ஆன ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

தொகுப்பு ஆசிரியராக திரு. தூரன் அவர்களைத் தேர்ந்தெடுத்தது நல் வாய்ப்பாக அமைந்தது. கலைக் களஞ்சியம் உருவாக்கும் பணி பகீரத முயற்சியாகும். எவ்வளவு பேரறிஞரானுலும் ஒருவரோ, ஒருசிலரோ கலைக் களஞ்சியத்தைத் தொகுத்து வெளியிட்டுவிட முடியாது. பல்வேறு துறைகளில் வல்லுனர்களுடைய ஒத்துழைப்பு அதற்குத் தேவை. அவ் ஒத்துழைப்பைப் பெற, ஊக்கப்படுத்தும் திறமையும், பிழை பொறுக்கும் பொறுமையும் வேண்டும். பெரியசாமி தூரனிடம் இரண்டு தன்மைகளும் சேர்ந்து இருந்தன. தூரன் அவர்கள் சிற்றெறும்பு போன்ற சுறுசுறுப்பும், தேனி போன்று தேர்ந்து எடுக்கும் நுட்பமும், பளு சுமப்பதில் வேகமாகவும் செயல்பட்டார். எனவே எடுத்த காரியம் வெற்றி பெற்றது.

இந்திய மொழிகளிலேயே தமிழ் மொழியில்தான் கலைக் களஞ்சியம் முழுமையாக வெளிவந்தது என்ற சிறப்பைப் பெற்றேம். அளவில் மட்டும் அல்லாது தரத்திலும் சிறப்பாக அமைந்தது கலைக் களஞ்சியம்.

''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்பதை தனது வாழ்க்கை நெறியாகக் கொண்டவர் தூரன் அவர்கள். அச்சீரிய தொண்டரை நாடி தக்கதோர். சிறப்பு வந்து அடைந்தது. ஆயிரத்துத் தொளாயிரத்து அறுபத்து எட்டாம் ஆண்டு குடியரசு நாளன்று பெரியசாமி தூரன் அவர்களுக்கு 'பத்ம பூஷன்' விருது வழங்கப்பட்டது. தமிழ் எழுத்தாளர்களில் முதலில் பத்மபூஷன் விருது பெற்றவர் பெரியசாமி தூரன் அவர்கள் ஒருவரே என்பது குறிப்பிடத் தக்க பெருமையாகும். அதை அவர் நாடிப் பெறவில்லை. அது அவரைத் தேடி வந்தது என்பதே அதில் உள்ள தனிச் சிறப்பாகும்.

பெரியசாமி தூரன் மகாகவி பாரதியாரிடம் தணியாத காதல் கொண்டவர். மாணவப் பருவத்திலேயே பாரதியாரின் பாடல்களைப்பாடி எங்களுக்குக் கற்றுத்தந்தவர் அவர்.

தூரன் அவர்கள் எழுதிய 'பாரதி தமிழ்' என்ற நூல் பாரதி பற்றிய ஆராய்ச்சிக்கு எல்லாம் ஊற்றாக அமைந்தது என்பது மிகை அல்ல. சில ஆண்டுகளுக்கு முன்னரும் 'பாரதியின் பெண்மை', 'பாரதியும் தமிழும்' 'பாரதியும் நாடும்' ஆகிய தலைப்புகளில் பாரதி எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து சிறப்பாக வெளியிட்டிருக்கிறார்.

'சென்னை வானொலி நிலையத்தின் ஆலோசகர் குழு', 'தில்லி வானொலி நிலையத்தின் ஆலோசகர் குழு', 'சென்னை பாரதியார் சங்கம்' 'தமிழ் நாடு இயல் இசை நாடக மன்றம் ஆகிய அமைப்புகளும் அவரது சிறந்த சேவையைப் பயன்படுத்திக் கொண்டன.

தாய்மொழியாம் தமிழின் பேரில் ஆழ்ந்த பற்று கொண்டிருந்த தூரன் அவர்கள்—நாட்டுப் பற்றிலும் உறுதியாக நின்று வாழ்ந்தவர். தன் இல்லத்திற்கு 'சுதந்திர நிலையம்' என்று பெயர் சூட்டியவர். தனது மூத்த மகனுக்கு 'சுதந்திர குமார்' என்று பெயர் சூட்டி அழைத்து மகிழ்ந்தவர். நாட்டுப் பற்று தாய்மொழிப்பற்று ஆகிய இரண்டும் ஒன்றோடு ஒன்று இணைந்தவை' என்னும் தெளிவைப் பெற்றுப் பணிபுரிந்தவர் தூரன் அவர்கள். அவர் கொள்கைகள் உயர்ந்தன; சாதனைகள் பெரியன; பண்பும் உயர்ந்தது. படாடோபம் என்பதை அறியாத பெரியசாமி தூரன் அவர்கள் காட்சிக்கு எளியவர்; இன்சொல்லினையும் உடையவர். மனிதத் தன்மையில் சிறந்தவர்.

பெரியசாமி தூரன் அவர்களின் நினைவு, நாட்டுப்பற்றை வளர்ப்பதாக! தமிழ் அறிவை வளர்ப்பதாக! தமிழ்ப்பற்றினை விளைவிப்பதாக! இடையறா முயற்சிக்குத் தூண்டுவதாக! சாதனைகளுக்கு முந்துவதாக! அடக்கத்தைத் தழைக்கச் செய்வதாக!



**பைபிளில் எத்தனை அற்புதங்கள் சொல்லப்படுகின்றன. குஷ்டம் தீர்ப்பது, மற்ற நோய்களைத் தீர்ப்பது, கண்ணில்லாதவனுக்கு கண் கொடுப்பது, ஊமையைப் பேச வைப்பது, செத்தாரைப் பிழைப்பிப்பது.**

**இவற்றால் எனக்கு பைபிளின் மேல் உள்ள மரியாதை குறையவில்லை. யாரும் தாழ்வாக மதிக்கக் கூடாது.**

**ஆனால் நமது அடியார் ஒருவர் ஒரு அற்புதம் செய்துவிட்டார் என்று கதை இருந்தால் நாம் உடனே புஸ்தகத்தை கிழித்தெறிந்து விடு என்கிறோம்.**

28—10—1929

**தூரன் நாட் குறிப்பிலிருந்து**



கீதாபோதகர் **நா. கிரிதாரிபிரசாத்**

# பூரண வாழ்வு

மனிதன் எவ்வளவு உயரத்துக்கு செல்லலாம் என்று வேதத்திலே ஒரு குறிப்பு வருகிறது ஒரு மனிதன் உயர்வதற்கும் தாழ்வதற்கும் அவனே பொறுப்பு. ஆண்டவனைப் பொறுப்பாக்கக் கூடாது. நம்முடைய உயர்வும் தாழ்வும் நம் கையிலே தான் இருக்கிறது. இவ்வகையில் நெடிது உயர்ந்து வாழ்ந்த தூரன் அவர்களுடைய வாழ்க்கை நமக்கு ஒரு மேற்கோளாக இருக்கிறது. சிலர் நினைக்கிறார்கள் படிப்பால் மனிதன் உயர்ந்து விடலாம் என்று. வள்ளற்பெருமான் குறிப்பிடுவதைப் பாருங்கள்:- "படிப்படக்கி கேள்வியெலாம் பற்றற விட்டடக்கி" என்று பெருமானே கூறுகின்றார். இந்த அடக்கம் வந்த பிறகுதான் அமரருள் கிடைக்கும்.

வில்லியம் பிளேக் என்ற கவிஞன் ஒரு நல்ல கருத்தைச் சொல்லியிருக்கிறான். "சிலர் இவ்வுலகத்தில் வாழுகின்ற போதே செத்துப் போகிறார்கள். ஆனால் சிலரோ இந்த உலகத்தை விட்டு மறைந்தபிறகும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்" எனக் கூறியுள்ளான். சாகாத சிரஞ்சீவிகளின் வரிசையிலே வந்து காட்சி கொடுக்கும் பெருமை பெற்றவர்களில் தூரன் ஒருவர் ஆவார்.

அவர்களை நான் சந்தித்ததெல்லாம் சென்னையில் காந்தி—வள்ளலார் விழாவில்தான். அவர்கள் தள்ளாடிக் கொண்டு தளர்ந்து வருவார்கள். நிகழ்ச்சிகளை எல்லாம் கேட்பார்கள். கேட்டபிறகு திரும்பிப் போவார்கள். மறுநாள் வரும்பொழுது முதல்நாள் நிகழ்ச்சிகளைப் பற்றி என்னிடம் சொல்லுவார்கள்.

அவர்கள் என்னை தன் வீட்டிற்கு அழைத்துப்போய் மகிழ்ந்து உரையாடி என்னை அன்போடு ஆசீர்வதித்தார்கள். அவர் வாழ்ந்த காலத்தில் அவரை நேரில் கண்டோம் என்ற பெருமை எனக்கு இருக்கிறது.

இதையே சாக்ரடீஸ் என்ற பெருமகன் சொன்னர்; அவரை நீதி ஸ்தலத்துக்கு அழைத்துப் போனர்கள். நீதி ஸ்தலத்தில் 500 பேர்கள் இருந்தார்கள். அவர்களில் 280 நீதிபதிகள் அவருக்கு தூக்குத் தண்டனை கொடுத்தார்கள். 220 பேர் அவரை விடுதலை செய்தார்கள். 220 பேர்களாக இருந்ததால் மெஜாரிட்டி இல்லை. மைனரிட்டிதான். அதனல் அந்த நாட்டின் சட்டப்படி அவரை தூக்கிலிட வேண்டும். அதனை அவர்கள் நிறைவேற்றினர்கள்.

அப்பொழுது அவர் சொன்னர்; "இன்று என்னை தூக்கிலிடுவதற்கு முடிவு செய்தவர்கள் எல்லோரும் செத்துவிடுவார்கள். மக்களும் அவர்களுடைய பெயர்களை மறந்துவிடுவார்கள். ஆனல் நான் மாத்திரம் வாழ்வேன். என்பெயர் எல்லோராலும் உச்சரிக்கப்படும்" என்ருர். இப்படித்தான் பலபேர்கள் செத்துக் கொண்டிருப்பார்கள். ஆனல் தூரன் மாத்திரம் வாழ்ந்து கொண்டிருப்பார்.

அவரைப் பற்றி முழுவிமர்சனம் செய்து எழுதி உள்ள நூல் இன்னும் வரவில்லை. அவர் என்ன நினைத்தார், என்ன சொல்ல விரும்பினர் என்று தெரியமுடியவில்லை. அவருடைய 70 நூல்களை படித்ததிலிருந்து எனக்குப்பட்டது, அவருக்கு மூவரிடத்தில் மிகப் பெரிய ஈடுபாடு இருந்தது

ஒன்று பகவான் - ஸ்ரீ ராமகிருஷ்ணர்
இரண்டாவது - காந்தியடிகள்
மூன்ருவது - மகாகவி பாரதியார்

இந்த மூவரும்தான் அவருடைய மிகப்பெரிய வழிகாட்டிகளாக இருந்தனர்.

காந்தியடிகளை விட ஒரு உயர்ந்த மனிதர் இந்த 2000 ஆண்டுகளில் பிறந்தவர் எவரும் இல்லை என்பார்கள். உலகத்திலுள்ள அறிவையெல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து ஒரு சிறிய காந்தி என்னும் உடலில் வைத்து அதனுள் பல அற்புதங்களை நடத்தி வைத்த ஆண்டவனின் திருவுளத்தை அறிவார் யார்?

ஒரு மனிதனுடைய உயர்வுக்குக் காரணம் அவன் எண்ணுகின்ற எண்ணமும் வாழுகின்ற வாழ்க்கையுமேயாகும். ஒருவன் பேசுகின்ற பேச்சால் அவனை மதிப்பிடவே கூடாது.

கார்ல் மார்க்ஸை ஒருமுறை கேட்டார்கள்; "நீங்கள் சொல்லுவதற்கும் கல்லூரிகளில் பேராசிரியர்கள் கூறுகின்றதற்கும் என்ன வேற்றுமை?" கார்ல் மார்க்ஸ் சொன்னர் "நான் பேச மாத்திரம் வரவில்லை; பேசியதை செயலாக்க வந்துள்ளேன்" என்ருர்.

நமது வேதம் நன்ருகச் சொல்கிறது. வெறும் ஞானம் மாத்திரம் படைத்தவன் உலகத்திற்குப் பயனற்றவன். அவன் விஞ்ஞானம் தெரிந்தவனக இருக்க வேண்டும். விஞ்ஞானம் என்ருல் என்ன? கற்றவைகளை எல்லாம் காரியங்களாக்க வேண்டும். அதுதான் விஞ்ஞானம் அந்தத் துறையிலே பெரியசாமிதூரன் அவர்களுடைய வாழ்க்கை - ஞானத்தை, விஞ்ஞானத்தை, காந்தியத்தை பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரை—கடைசியாக பாரதியாரின் கவிதா சக்தியை வழிபட்ட ஒரு பூரண வாழ்க்கை.



டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி

# உணர்ச்சிக் கவிஞர் தூரன்

*கவிஞர்கள் உணர்ச்சி மிகுந்தவர்கள். அவர்களின் உணர்ச்சி வெளிப்பாடு கவிதையாக மலர்கிறது. இயல்பாகப் பொங்கி வழியும் ஆற்றல்மிக்க உணர்ச்சியே கவிதை என்பர் வேட்ஸ்வொர்த்து என்ற மேனாட்டுக் கவிஞர். தன் உணர்ச்சியைக் கவிஞன் நேரடியாகப் பிறருக்கு உணர்த்த முடியாது. எனவே அவன் அதற்கெனப் பல உத்திகளை மேற்கொள்கிறான். அவற்றுள் உவமை, உருவகம், கற்பனை, ஒலிநயம் ஆகியன குறிப்பிடுதற்குரியவை.*

திரு. தூரன் அவர்கள் கவிதைகள் அவற்றுக்குரிய பண்புகள் அனைத்தும் பெற்று நம் சிந்தையை அள்ளுகின்றன.

## அன்புநெறி

திரு தூரன் 'அன்புவழி' என்ற கவிதையில் அன்பின் ஆற்றலை நன்கு உணர்ச்சி பூர்வமாகத் தெளிவு படுத்துகிறார்.

''அன்பரசு வீற்றிருக்க
அருளாட்சி மேல்நிலையில்
அவ்வாட்சி ஓங்கிவிட்டால்
அனைத்துலகும் இன்பமன்றோ
''அன்புசெய்தால் தேவநிலை
அதையழித்தால் விலங்
காவோம்''

என்ற அடிகளில் அன்பினால் உலகம் நிலைத்த இன்பம் எய்தும் என்றும், உலகில் அன்பு அழிந்தால் மக்கள் விலங்கினமாகி உலகம் அழியும் என்றும் அறிவுறுத்துவதை உணரலாம்.

**எளியோர்க்கிரங்கல்**

சேரிச் சிறுவனும் சிறுமியும் மண் வீடு கட்டி விளையாடுவதைச் ''சேரி விளையாட்டு'' என்ற கவிதை விளக்குகிறது. இதன் வாயிலாகச் சேரியில் வாழும் மக்களின் ஏழ்மை நிலையையும் அடிமை வாழ்வையும் கவிஞர் புலப்படுத்துகிறார். சேரிக் குழந்தைகள் இருவரும் மண்ணினால் சிற்றில் கட்டி, நான்கு பனங் கொட்டை, பாதையில் கண்டெடுத்த ஒரு லாடம், இரண்டு கண்ணாடித் துண்டு, ஓடையிலிருந்து எடுத்து வந்த உருண்டைக் கற்கள் ஆறு, ஒரு ஓடு இவைகளைக் கொண்டு கூழ் காய்ச்சுகிறார்கள்.

இக்கூழைக் குடித்துவிட்டு மண் வெட்டப் போக வேண்டும் என்றும், இல்லையேல் பண்ணையார் ஏசுவார் என்றும், அச்சிறுவர்கள் கற்பனை செய்து விளையாடுகிறார்கள். அவர்கள் கற்பனை இதற்கு மேல் செல்வதில்லை என்றும், காரணம் ஏழ்மையும் அடிமையுமே அவர்கள் அறிந்த வாழ்க்கை என்றும் கவிஞர் உள்ளம் பெரிதும் இரங்குகிறது.

''இடிந்த சுவர் விழுகூரை
எறும்புவளை பழங்கஞ்சி
மடிந்தவால் பன்றியலால்
மற்றென்ன கண்டுள்ளார்?'',

என்ற அடிகள் நம் நெஞ்சை உருகச் செய்கின்றன. உலகம் இன்பநிலை எய்த இத்தகைய ஏழ்மை வேரோடு அழிய வேண்டும் என்பதை இப் பாடல் குறிப்பாக உணர்த்துகிறது.

''மக்களெலாம் ஓர் குலமாம்
மானிலமே ஒரு வீடாம்''

என்ற அடியிலிருந்து கவிஞர் தூரன் அவர்களின் சமரச உள்ளமும் உலக ஒருமைப்பாட்டு உணர்ச்சியும் நன்கு தெளிவாகின்றன.

**குழந்தைபால் பேரன்பு**

குழந்தை உள்ளம் மாசற்றது; தூய்மை பொலியும் தன்மை வாய்ந்தது. இதனை உணர்ந்த கவிஞர் தூரனின் உள்ளம் குழந்தைகளிடத்து அன்பினைப் பொழிகிறது.

''தெய்வப் புதுமலரை என்றுமே
சீறி விழிக்காதீர்''

என்று அவர் அறிவுறுத்துகின்றார்.

ஒரு நாள் மாலையில் கவிஞர் உலாவச் சென்றபோது வீதியில் ஒரு குழந்தை தனியாக நின்று அழுது கொண்டிருந்ததைக் கண்டார். அவர் உள்ளம் அக்குழந்தைபால் பேரிரக்கம் கொள்கிறது. அப்போது அவர் பாடிய கவிதை நம் நெஞ்சை உருகச் செய் கிறது.

''ஆருடைய குழந்தையிது
அழுதுகொண்டு நிற்கிறதே!
.. .. .. .. .. ..
மையிற் படர்ந்த இருள்
மாய்க்க வரும் ஞாயிறு போல்
வையத்திருள் வாழ்வை
வளரின்ப மாக்க வரும்
தெய்வச் சுடர்க் குழந்தை
சிரித்த முகம் வாடிமிக
நையக் கண்டால் உள்ளம்
நடுங்குகின்ற தென்செய்வேன்''

என்று வருந்துகின்றார்.

## வடிவ சக்திகள்

தூரன் அவர்களின் கவிதைகளில் உவமை, உருவகம், கற்பனை; ஒலிநயம் போன்றவை ஆங்காங்குப் பொருத்த முற அமைந்து சுவையூட்டுகின்றன. இங்கு சில சான்றுகளைக் காண்போம்.

''பூவுலகைப் பார்க்க வந்த
பொன்னாட்டுத் தூ தெனவே
மேவுமிளங் குழந்தையழ
விடலாமோ? . . . .''

வீதியில் தனியாக நின்று அழும் குழந்தை தூய்மை உள்ளமும் தெய்வ நீர்மையும் உடையது என்பதைப் ''பூவுலகைப் பார்க்க வந்த பொன் னாட்டுத் தூது'' என்ற உவமை விளக்குவதாகும்.

## கற்பனை

கற்பனையாவது படிமங்களின் இணைப்பு எனலாம். புலனுணர்வுப் பொருள்களைத் தனித்தனியாக மனத்தால் படைத்து மொழியால் புலப்படுத்துவது படிமம். இப்படிமங்களை ஒருநிலைப்படுத்தி இணைப்பதும் அவை ஒவ்வொன்றையும் மாற்றிப் பொருத்தமுற இணைப்பதும் சீரிய கற்பனைகளாகும்.

''முல்லைப் பூ என்று சொல்லி
முல்லை நகைதான் மலர
மெல்லியலாள் அன்னம் போல்
வீதிவழி தானடைந்தாள்
சாயம்விட்ட பழஞ்சேலை
தையல் மிகக் காணுகின்ற
தேயும் முகிற் கந்தையிலே
சேர்ந்தசைந்தே மின்போன்றாள்

பூக்காரியின் எழிலும் அவள்தன் வறுமைத் தோற்றமும் கவிஞர் தூரன் அவர்களின் உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி வழிகின்றன. அவ்வுணர்ச்சிப் பெருக்கின் வடிவமே இப்பாடல். பூக்காரி விற்கும்போது முல்லை முகைகள் போன்ற தன் பற்கள் விளங்கும்படி வாய்திறந்து 'முல்லைப் பூ' என்று கூறுதல், சாயம் போன பழஞ்சேலை, அது பல இடங்களில் கிழிந்ததனால் தைக்கப்பட்டிருத்தல், அழுக்கேறிய அச்சேலையை அணிந்து அசைந்து நடத்தல் ஆகிய இக்கட்புல படிமங்கள் பொருத்தமுற இணைக்கப் பட்டு இப்பாடலில் சீரிய கற்பனை யாக அமைந்திருத்தலை உணரலாம்.

கவிஞர்கள் மனத்தில் பதிந்த படிமங்கள் ஒவ்வொன்றையும் வேறொன்றாக மாற்றி ஒன்றோ டொன்று பொருத்தமுற இணையு மாறு செய்து கற்பனையாகப் படைப் பதுண்டு. இது உயர்தரக் கற்பனையின் பாற்படும்.

''நந்தா எழில் அரசி
நாணமுடன் உடல் வளைத்துச்
சிந்தா முறுவலுடன்
செல்கின்றாய் காவிரியே!''

காவிரியாறு வெள்ளப் பெருக்குடன் ஓடுதலை 'நந்தா எழிலரசியாகவும்' அவ்வாறு நீண்டு வளைந்து செல்லு தலைக் காவிரியாகிய நங்கை நாணத் தால் உடல் வளைந்து செல்வதாகவும் நீர்த்திவலைகள் சிதறலை நங்கையின் முறுவலாகவும் கவிஞர் மாற்றிப் பேரெழில் வாய்ந்த பாவையாகப் படைத்துள்ளார். தூரனின் கவிதை கள் எத்துணைக் கற்பனை வளம் சான்றவை என்பதை இவ்விரு சான்றுகளிலிருந்து அறியலாம். மேலும் அவருடைய கவிதைகளில் பொருளுக்கேற்ற ஒலிநயங்கள் அமைந்து கவியின்பத்தை மிகுவிக் கின்றன.

தூரன் அவர்களின் கவிதைகள் அவருடைய சீரிய வாழ்க்கை அனுப வத்தால் முகிழ்ந்து மலர்ந்தவை. அவைகள் கவிதைக்குரிய பண்புகள் அனைத்தும் நிறைந்தவை. அவை நிலைபேறுடைய வாழ்வியல் உண்மை கள் பொதிந்து என்றும் மக்களுக்குப் பயன் அளிக்க வல்லவை. தூரன் அவர்களை அவர்தம் கவிதைகளில் நாள்தோறும் கண்டு மகிழலாம். உண்மையில், என்றும் புகழொளி வீசும்சிறந்த தமிழ்க்கவிஞர் அவர். □



கி. வா. ஜகந்நாதன்

# தூரன்: பாரதி பித்தன்

**திரு. பெரியசாமித் தூரன் அவர்கள் ஆசிரியராக இருந்து நல்ல புகழைப் பெற்ருர்கள். தமிழில் கலைக் களஞ்சியத்தின் பதிப்பாசிரியராக இருந்து அவர்கள் ஆற்றிய தொண்டு இமய மலையைப் புரட்டுவது போன்றது. பல துறைகளில் வல்லு நர்கள் எழுதிய கட்டுரையினை நல்ல முறையில் திருத்தி வெளியிட்டார்கள்.**

முருகப் பெருமானிடம் அவர்களுக்கு அளவிறந்த பக்தி இருந்தது. ஒவ்வொரு நாளும் அந்தப் பெருமானைப்பற்றி ஒரு கீர்த்தனை இயற்றி வந்தார்கள்.

பாரதியாரிடம் அவருக்கு இருந்த அன்பைப் பித்து என்றே கூற வேண்டும். சுதேசமித்திரன் நாளிதழ் நடைபெற்ற அலுவலகத்துக்குச் சென்று முந்திய பல ஆண்டுகளில் அந்தப் பத்திரிகையில் பாரதியார் எழுதிய கட்டுரைகளைப் பொறுமையாகத் தேடிப் பார்த்துத் தொகுத்து, ''பாரதி தமிழ்'' என்ற நூலை வெளியிட்டார்கள்

'பாரதியும் பெண்ணின் பெருமையும்' என்பது போன்ற பொருள் பற்றிச் சில நூல்களை எழுதியிருக்கிருர்கள். அவர்கள் இன்னும் வாழ்ந்திருந்தால் அவற்றைப் போல வேறு பல நூல்களை எழுதியிருப்பார்கள். காலன் அவசரப்பட்டு விட்டான். தமிழ்த் தாயின் வாயில் மண்ணைப் போட்டு விட்டான். அவர் இல்லாமல் போனது தமிழ் இலக்கியத்திற்கு இழப்பு.

○

# தூரனும் பாரதியும்

ஜஸ்டிஸ் மு மு. இஸ்மாயில்

சமீப காலத்தில் தமிழ் மொழியில் பெரும் புரட்சி செய்தவர்களில் தலையானவர் காலம் சென்ற கவிச் சக்ரவர்த்தி சுப்ரமணிய பாரதியார் ஆவார். ஒரு கவிஞனைப் பற்றிப் பலமாதிரியாக எண்ணுபவர்கள் உண்டு. ஆனால் எந்தக் கவிஞனையும் தன்னுடைய படைப்பின் மூலமாக அமரத்துவம் பெறவேண்டுமானால் அவனுடைய படைப் பினுடைய கருவூலம் பிரபஞ்சத்தினுடைய பரந்த நன்மையாக இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட மனிதயினத்தினுடை யவோ அல்லது ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பினுடையவோ தன்மையை மாத்திரமோ கருத்தில் கொண்டு, இலக்கியமோ கவிதையோ படைக்கும் எவனும் அமரத்துவம் பெற்றுவிட முடியாது.

திரு. பெரியசாமி தூரன் அவர்கள் பாரதியாருடைய கவிதைகளையும், வசனங்களையும் பல தலைப்புக்களில் தொகுத்து, அவற்றிற்கு முன் தன்னுடைய குறிப்பையும், கருத்துக்களையும் கொடுத்துப் பாரதியார் சமூகச் சீர்திருத்த வாதியாகவே தமது எழுத்துப்பணியைத் தொடங்கினார் என்று தூரன் அவர்கள் நிரூபிக்க முயல்கிறார்கள். பாரதியாருடைய படைப்புக்களை முழுமையாகவும், ஆழ்ந்தும் படித்தவர்கள் தூரன் அவர்களுடைய இந்தக் கருத்திற்கு இணங்கவே செய்வார்கள் மேலெழுந்தவாரியாக அவருடைய தேசீயப் பாடல்களைப் படித்த வர்களும் கூட இந்தக்கருத்தை ஏற்றுக்கொள்ளவே செய்வார்கள் என்பதில் ஐயமில்லை. உதாரணமாக நாம் அனைவரும் பாரதியாருடைய பாப்பாப் பாட்டினை நன்றாக அறிவோம். அந்தப் பாப்பாப் பாட்டிலும்கூட அவருடைய சமூகச் சீர்திருத்த நோக்கமே வெளியாகிறது என்பதைச் சற்று உற்றுக் கவனித்தால் விளங்கும். இதற்கு உதாரணம்.

'' சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்:
நீதி, உயர்ந்தமதி, கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்''

என்ற ஒன்றே போதும். அது போலவே 'முரசு' என்ற பாடல் தொகுதியிலும், அடியிற்கண்ட பாடல் இந்த நோக்கத்தை எடுத்துக்காட்கிறது.

'' சாதிப் பிரிவுகள் சொல்லி—அதில்
தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்,
நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார்.''
'' சாதிக் கொடுமைகள் வேண்டாம்—அன்பு
தன்னில் செழித்திடும் வையம்;
ஆதர வுற்றிங்கு வாழ்வோம்;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம்''
'' பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்—புவி
பேணி வளர்த்திடும் ஈசன்;
மண்ணுக் குள்ளே சிலமூடர்—நல்ல
மாத ரறிவைக் கெடுத்தார்''

இந்த நோக்கில்தான் பாரதியாருடைய பாடல்களையும், வசனங்களையும் தூரன் அவர்கள் ஆராய்கிறார்கள். பாரதியைப் பற்றி பெரும்பாலோருக்குத் தெரியாத பல விஷயங்களை தூரன் கூறியுள்ளார். அவ்வப்பொழுது பாரதியாரைப் பற்றி வெளிவந்த நூல்களில் இவைகள் காணப்படுவது உண்மைதான். இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட கோணத்திலிருந்து இவற்றைத் தொகுத்து இப்பொழுது தூரன் அவர்கள் தான் நமக்கு வழங்கியுள்ளார்கள்.

இவற்றைப் படித்து சுமார் 60,70ஆண்டுகளுக்கு முன்னால் பாரதியார் எழுதியது நம்முடைய இன்றைய சமுதாயத்தின் நிலைக்கும் கூடப் பொருந்தும் என்பதை உணரும்பொழுது ஆச்சரியமேயுண்டாகும். ஆனால், எந்த உண்மைக் கவிஞனும் ஒரு தீர்க்கதரிசியே என்பதை உணரும்பொழுது இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை என்பது தானாகவே புலப்படும்.

உலக வாழ்க்கையின் பயனைப்பற்றியும், மனிதன் எதற்காகப் பிறந்தான் என்பதைப்பற்றியும் பேசுகின்ற பாரதியார், ஜப்பான் நாட்டினுடைய தொழிற் கல்வியைப் பற்றியும், இந்திய நாட்டிற்குத் தேவையான தேசியக் கல்வியைப் பற்றியும் எழுதத் தயங்கவில்லை. இப்படியெல்லாம் இவர் எழுதியிருப்பதைப் படிக்கும்பொழுதுதான் இன்று வாழ்வதைப்போல வாழ்கின்ற காலம் ஒன்று வரும் என்று முன் கூட்டியே எதிர்பார்த்து, அதற்காக அவர் நம்மை எச்சரித்து வழிகாட்டியிருக்கிறார் என்று சொல்லவே தோன்றும். உண்மையில் பாரதியாருடைய கருத்திலும், எழுத்திலும் அகப்படாத சமுதாய வாழ்க்கையின் அம்சம் எதுவுமேயில்லை என்று சொல்லக்கூடிய அளவுக்கு, அவருடைய வசனமும், கவிதையும் எல்லாவற்றையும் உள்ளடக்கியவையாக அமைந்திருக்கின்றன.

பாரதியாருடைய படைப்புக்களை இந்தக் கோணத்திலிருந்து நாம் படிப்பதற்குப் பெரியசாமித் தூரன் அவர்கள் பேருதவி செய்திருக்கிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். ஆரம்பக் காலத்திலிருந்தே பாரதியாரின் படைப்புகளில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள் தூரன் அவர்கள். பாரதியாருடைய படைப்புக்கள் அனைத்தையும் படித்து, அவற்றைப் பலவாறுகத் தொகுத்து வெளியிட்டிருப்பதுடன், அவற்றைப்பற்றித் தம்முடைய குறிப்பையும், கருத்துக்களையும் அவ்வப்பொழுது வெளியிடவே செய்திருக்கிறார்கள்.

அத்தகைய பணியினைச் செய்கையில் தம் உடல்நிலை முழுமையான நலத்துடன் இல்லாதவிடத்துங்கூடத் தம்முடைய கவனத்தை இத்துறையில் அவர்கள் செலுத்தினார்கள் என்பதே, பாரதியாரிடத்தில் அவர்களுக்கு எத்தகையஈடுபாடு இருக்கிறது என்பதை உலகுக்கு உணர்த்தப் போதுமானது.

அவர்களை தமிழுலகம் பெரிது வரவேற்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆகவே, தமிழ் மக்கள் தூரன் வெளிப்படுத்திய பாரதியார் வெளியிட்ட கருத்துக்களை ஆழ்ந்து கூர்ந்து கவனித்து, அவை நிரந்தரமான பலனைத் தரக்கூடியவை என்பதை உணர்ந்து, வெறுமனே பாரதியாரைப் புகழ்வதோடு நின்றுவிடாமல்' அவருடைய கருத்துக்களைத் தங்களுடைய வாழ்க்கையில், அனுபவத்தில் கொண்டுவர முயல்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன், அப்படியே வேண்டிக் கொள்ளவும் செய்கிறேன்.

∴



# தூரன் ஓர் விந்தை மனிதன்

ஜஸ்டிஸ் எஸ். மகராஜன்

*கவிஞர் பெரியசாமித் தூரன் அவர்கள் ஓர் விந்தை மனிதர். பல ஆண்டுகளாக அல்லலுறுத்தும் பல உடல் நோய்களோடு வீரப் போராட்டம் செய்து வருகிறார்கள். அவ்வாறு போராடுவதற்கான உடல் தெம்பும் மனத் தெம்பும் அவர்களுக்குக் கொடுப்பது அவர்களுடைய கவிதை.*

மனித மனம் இரு வேறு மண்டலங்களில் சஞ்சாரம் செய்கிறது. தவளை நீர் மண்டலத்திலும் நில மண்டலத்திலும் சஞ்சாரம் செய்வது போல, காலம்-இடம் என்ற சிறையில் அகப்பட்டிருக்கும் உடலோடு சேர்ந்திருக்கும்போது, மனித உள்ளமும் கட்டுப்பட்டு வருந்துகிறது. ஆனால், காலம்—இடம் அற்ற ஆன்மாவோடு சேர்ந்திருக்கும்போது, மனித உள்ளம் சிறையை விட்டு விடுதலையான பூரண சுதந்திரத்தோடு உலாவுகிறது. உடலோ உப்புக்கும் கூழுக்கும் அடிமைப்பட்டிருக்கிறது. ஆனால் உயிரோ விஸ்வ வெளிக்கே நம்மை இழுத்துச் சென்று விடுகிறது. தூரனுடைய உடல் தொல்லையோடு தூரனுடைய கவிதை ஒய்யாரத்தை ஒப்பிட்டுப் பார்ப்பவர்களுக்கு இந்த உண்மை நன்றாகத் தெளிவாகும்.

சுண்டுவாதத்தால் அல்லலுறுகிறது தூரனுடைய உடம்பு. ஆனால் வெறும் உடம்பா தூரன்? வேதனை தருகின்ற வாதத்தைத் துணிச்சலோடு புறக்கணித்து விட்டு, கவிதை செய்யும் ஆனந்த ரஸவாதத்தில் ஈடுபட்டுத் துள்ளி விளையாடுகிறது தூரனுடைய உள்ளம்.

இதோ ஒரு பாடல்:-

''ஆடியெழும் நாகமதை
அடிமிதிக்கும் பருவம்
அளவில்லா உயர் எண்ணம்
அனல்வீசும் பருவம்
தேடறிய கலையெல்லாம்
நாடுகின்ற பருவம்
தீஞ்சுவைசேர் கவிக்கனலில்
சிறந்திருக்கும் பருவம்

இடையூறு என்ற சொல்லே கவி தூரனுடைய கற்பனை அகராதியில் கிடையாது. மேலும் சொல்லுகிறார்:-

''எண்ணிலா இடையூற்றை
எதிர்த்தேகும் பருவம்
எட்டாத கொம்பெனினும்
ஏற எழும் பருவம்
வெற்றியெலாம் பற்றிக்கை
வீசுகின்ற பருவம்
விண்ணுடாய் உலகாக்க
விரும்புகின்ற பருவம்.

கிழவர்களுக்கே இளமையூட்டும் வீறுகொண்ட பாடல்கள் இவை.

இனி, காதலைப்பற்றிச் சில பாடல்கள். கருக்கரிவாள் கையிலேந்தி, கழனி செல்லுகிறாள் ஒருமங்கை, அவளுடைய இயல்பான அழகிலே உள்ளத்தைப் பறிகொடுக்கிறார் காதற் கவிஞர். அவளுடைய பச்சைச் சேலை இயற்கையான எழிலோடு சரிந்தாடுகிறது:

''பாச்சான் கொடி இலைமேல்
பசுமைகொண்ட நல்லாடைக்
கற்றைக் கொசுவமது
கலைந்தே சரிந்தாட
ஒற்றைவடச் செம்பவளம்
உவந்தேறி ஆடிவரும்''

இந்தக் காட்சியைக் கண்டு மையல் கொள்ளுகிறார் கவிஞர். அவள் போகுமிடமெல்லாம் போய் நின்று அவள் அழகைப் பாடுகிறார்.

''எட்டிக் களை பறிக்கும்
இட மெல்லாம் நிற்கேனோ?''

என்று ஏங்குகிறார். கைத்தடியால் கட்டிமண்ணை உடைக்கிறாள் அவள், 'அந்தக் கைத்தடியாக நான் மாறிவிட்டால், அவள் என்னைத் தொடும் பேறு கிடைக்குமல்லவா? என்று மறுகுகிறார்.

" கட்டிமண்ணை நீ உடைக்கக்
கைத்தடியாய் ஆகேனோ?"

என்று கவிஞர் அலமரும்போது, காதல் வெறி உச்சநிலையை அடைந்துவிடுகிறது.

உத்தமக் கவிஞனுக்கு இன்றியமையாதது எல்லையற்ற பரிவுதான்; தன் எண்சாண் உடம்பைவிட்டு வெளிவந்து மற்றவர்களுடைய உடலுக்குள்ளும் உள்ளத்திற்குள்ளும் புகுந்து, அவர்களோடு இரண்டும் ஒன்றறக் கலந்து, உலகத்தை அவர்களுடைய கண்கள் வாயிலாகப் பார்க்கத் தெரியவேண்டும். "குழந்தை விளையாட்டு" என்ற பாடலில் தூரனின் பரிவும், இரக்கமும் நம் உள்ளத்தைத் தொட்டுக் கனிய வைக்கின்றன.

வறுமை மண்டிக்கிடக்கும் பாழும் குடிசை; அதில் வாழும் ஒரு சிறுவனும் சிறுமியும் விளையாடுகிறார்கள். குடிசை எப்படி இருக்கிறது?

"உப்புப் பொரிந்து உதிரும்
உவர்மண், இடிந்தசுவர்!
தப்பி நிமிர்ந்தெழுந்தால்
தலையிடிக்கும் தாழ்கூரை"

பக்கத்தில் விளையாடுகிறான் ஒரு பாலகன். அதனை வருணிக்கிறார் கவிஞர்;

"கந்தலொரு கோவணமே
கண்டவுடல்; மற்றும் அனல்
சிந்தும் வெயில், கடுங்குளிரே
சிறுவனுக்கு மேற்போர்வை."

அவன் கூவியழைக்க ஒரு சிறுமி ஓடி வருகிறாள். அவள் வந்த வரிசை எப்படி இருக்கிறது.

"கந்தல் அவன் ஆடை
கன்னிக்கு அதுவுமில்லை
இந்த உலகில் வந்த
இயல் வடிவாய்க் காட்சி தந்தாள்."

இருவரும் கூடி விளையாடுகிறார்கள், எளிய விளையாட்டு அது. மரக் குதிரையோ பொம்மைக் காரோ அவர்களுக்கேது?

அன்புடனே கூடி அர்
அரிதாக மண் சேர்த்துச்
சின்னச் சுவர் எழுப்பிச்
சிற்றில்ல மாக்கியதில்
பனங்கொட்டை யொரு நான்கு
பாதையிலே கண்டெடுத்த
கனங்கெட்ட லாடமொன்று
கண்ணுடித் துண்டிரண்டு
ஓடையிலே போயெடுத்த
உருண்டைக்கல் இருமூன்று

செல்வந்தன் வீட்டுக் குழந்தைக்குக் கற்பனைச் செல்வமும் இருக்கும்.

சிந்தை கவர் ஓவியங்கள், செயல்மிக்க சிற்பங்கள், சுந்தங்கமழுகின்ற காமன் மகிழ் பள்ளியறை, நல்ல நல்ல உண்டிவகை, காலுக்குச்சோடு காசிநகர்ப் பட்டுடைகள். ஆனல் வறுமையின் குழந்தைகள் இவர்கள். கற்பனையும் அவர்களுக்கு வறண்டு போயிருக்கிறது. ஆகவே சிறுமி என்ன செய்கிருள்.

''சிறுமியவள் அந்தச்
சிறுவீட்டின் உள்ளிருந்து
உரைத்தாள் ஒருசொல்தான்,
ஓடிவா, கஞ்சிகுடி
மண்வெட்டப் போகணுமாம்
பண்ணையார் ஏசுகிருர்''

இந்தக் காட்சியை நாடகப் பாங்கில் தீட்டிவிட்டு, கவிஞர் நம்மைப் பார்த்துக் கேட்கிருர்:

''துன்பத்திலே தோன்றித்
தொழும்பே வடிவானேர்க்(கு)
இன்ப விளையாட்டும்
இல்லையோ இவ்வுலகில்?''

வாய்ப்பான பாடல் இது, படிப்போர் இதயத்தை இளக்கும் பாடல்.

கடைசியாக, 'நாணம்' என்ற நயமான பாடலைப்பற்றி இரண்டொரு வார்த்தை. காதலனைக் காணுதிருக்கும் போது காதலி, ''அவரைச் சந்தித்தால் என்னுடைய காதலையெல்லாம் அவர்மீதுகொட்டுவேன். இப்படிச்சொல்லுவேன்· அப்படிச் சொல்லுவேன்'' என்றெல்லாம் விண்ணுரைப் பேச்சுப் பேசுவாள். ஆனல், அவனைக் கண்டவுடன், கூச்சம் வந்து அவள் வாயை அடைத்துக் கொள்ளுகிறது. இந்தப் பரிதாப நிலையை நினைந்து வருந்துகிருள். இதனைக் கவிஞர் கூறுகையில்,

''நேற்றும் தயங்கினேன் இற்றைநாள் திண்ணமாய்
உள்ளந் திறந்தென் அன்பெலா முரைப்பேன்
என்றே நாள்தொறும் நாளெலாம் எண்ணியும்
அந்தியிற் காதலர் வந்திடும் வேளையில்
மொழியறியாது மூங்கையாய்
குழல் வளை திருத்தி நிற்கிறேன் தோழி''

இந்தப் பாடலுக்குள்ளிருக்கும் மென்மையும் கூச்சமும் காதலின் திண்மையை அழகுபட எடுத்துரைப்பதை கண்டு கண்டு சுவைக்கலாம். ○

சத்திய சோதனையை முடித்துவிட்டேன். காந்திஜி சிறு விஷயங்களிலும் மிக ஜாக்கிரதையுடன் இருக்கிருர். அதுவே அவரை மகானுக்கி விடுகிறது.

சித்திரை-20
தூரன் நாட்குறிப்பிலிருந்து



டாக்டர் அ. ச. ஞானசம்பந்தன்

# நான் கண்ட கர்மயோகி

**அண்மையில் இறைவனடி எய்திய பெரியசாமித் தூரன் அவர்களைப் பலரும் அறிவர். பள்ளி ஆசிரியப் பணியில் தொடங்கிக் கலைக்களஞ்சிய ஆசிரியப் பணியில் வாழ்வை நீத்தார். உயர்நிலைப் பள்ளி மாணவர்கட்குக் கல்வி புகட்டுபவர்களும் ஆசிரியர்கள் என்றுதான் அழைக்கப்பெறுகின்றனர். கலைக்களஞ்சியம் தயாரித்தல் என்ற இமயம் ஒத்த பெரும் பணியைச் செய்கின்றவர்களையும் ஆசிரியர் என்ற சொல்லால் குறிப்பது எவ்வளவு விந்தை! வேறு வழியே இல்லை. மொழி என்பது எவ்வளவு சிறந்ததாக இருப்பினும் ஒருவருடைய கருத்தை வெளியிட முற்றிலும் தகுதியுடைய கருவி என்று மொழியைக் கூற முடியாது. அதனால் தான் மேலே கூறிய இரண்டு வெவ்வேறான பணிகளைச் செய்கின்றவர்களையும் ஆசிரியர் என்று ஒரே சொல்லால் குறிப்பிடுகின்றோம்.**

நண்பர் தூரன் அவர்களிடம் போற்றத் தகுந்த எத்தனையோ நற்பண்புகள் இருந்தன என்பதை அனைவரும் அறிவர். இறையுணர்வில் ஈடுபட்டுக் கவிதை வடிக்கும் அதேதூரன் தான் விஞ்ஞானக் கட்டுரைகளையும் மனையியல் தொடர்பான கட்டுரைகள், நூல்கள் என்பவற்றையும் எழுதுகிறார். உணர்வின் துணைகொண்டு மட்டும் வடிக்கப்படுவது கவிதை. அதிலும் இறைத் தொடர்பான கவிதைகள் எழுத வேண்டுமானால் இந்த உணர்வுங்கூட, ஒருமுகப்பட்ட நெறியில் செலுத்தப்பட்ட நிலையில் இருத்தல் வேண்டும். இவ்வாறு உணர்வுலகில் ஈடுபடுபவர்கள் அதை விட்டு

விட்டு அறிவுலகில் நுழைவது கடினம். அதிலும் விஞ்ஞானத்திலும், மனவிய லிலும் நுழைவது மேலும் கடினமான தாகும். ஆகவேதான் இந்த'இரண்டு வகையினரும் அன்றும் இன்றும் நம் நாட்டிலும் ஏன்? எல்லா நாடுகளி லும் தனித்தே இலங்குகின்றனர். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற முறையில் அறிவுலகில் புகுந்த வர்கள் இது தவிர வேறு ஓர் உலகம் (உணர்வுலகம்) இருக்கமுடியும் என் பதை நம்புவதும் இல்லை; ஏற்றுக் கொள்வதும் இல்லை. மேனாட்டு அறிஞ ருள் ஒருவராகிய 'ஜான் ஸ்டுவர்ட் மில்' என்பவர் இந்த வகையினர்க்கு எடுத்துக் காட்டாவார்.

இதன் எதிராக உணர்வுலகில் புகுந்தவர்கள் அறிவுலகம் என்ற ஒன் றைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. இந்த இரண்டு உலகிலும் கூடிய ஒரு சிலரும் உண்டு. அவர்கள் புறநடை களே தவிர, பொது நியதியல்லர். நண்பர் தூரன் இந்தப் புறநடை இனத்திற்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்து, உழைத்து, எழுதி மறைந்த வர். பள்ளி ஆசிரியர், நூல் ஆசிரியர், கலைக் களஞ்சிய ஆசிரியர் என்ற வளர்ச்சியின் உள்ளே, ஆழத்தில் தூரன் என்ற மனிதர் வளர்ந்தார். இங்கே கூறப்பெறுவது அவருடைய வயது, உடல், குடும்ப. பொருளா தார, வளர்ச்சியை அன்று. இவை அனைத்துக்கும் அப்பாற்பட்டு அந்த மனிதரின் அகமனத்தில் நிகழ்ந்த வளர்ச்சியைத்தான் இங்கே குறிப்பிடு கிறேன்.

கலைக்களஞ்சியம் என்பது அதற்கு முன்னர் தமிழ் மொழியில் செய்யப் பெறாத புது முயற்சியாகும். ஆயிரக் கணக்கானவர்களை எழுதுமாறு வேண்டி, மன்றாடி அவர்கள் எழுதி யதை ஓரளவு செப்பஞ் செய்து பொருள் வாரியாகப் பிரித்து அச்சிடும் பணியாகும். இத்தகைய பணி செய் வதற்கு அதன் ஆசிரியருக்குப் பல் வேறு துறைகளில் ஓரளவு அறிவும், விஷய ஞானமும், ஆற்றலும் தேவை என்பதை யாவரும் அறியமுடியும்.

இவை அனைத்தையும் விட அதிக மாகத் தேவைப்படுவது கடல்போன்ற பொறுமை எத்தகைய பண்பாடு உடையவர்களும் இம்மாதிரிப் பணி களில் ஈடுபடும்போது பொறுமை இழந்துவிடுவர். ஆனால் கலைக்களஞ்சிய ஆசிரியர் தூரன் அவர்களிடம் பொறு மை நிரம்ப இருந்தது என்று கூறுதல் தவறாகும். அவர் பொறுமையே வடி வாக இருந்தவர் என்று கூறுவதுதான் உண்மை. எந்த நிலையிலும் பொறுமை யுடன் இருப்பவனை 'ஸ்திதப் பிரக் ஞன்' என்று கீதை பேசுகிறது.

இது எப்படி முடியும்? என்று நாம் சந்தேகப்பட்டால் அது நியாய மானதேயாகும். இவ்வாறு ஒருவர் பொறுமையுடன் இருப்பதற்குக் கார ணம் அல்லது அடிப்படை என்ன என் பதைத் தெரிந்து கொண்டால்தான் இவ்வாறு இருக்கமுடியுமா என்ற வினாவிற்கு விடை கூறமுடியும். முத லாவது ஒருவர் செய்யுந் தொழிலை தன்மேல் திணிக்கப் பெற்ற பணியா கக் கருதாமல் தாமே விரும்பி மேற் கொண்ட அன்புப் பணியாகக் கருத வேண்டும். அப்பொழுதுதான் இரவு பகல் இருபத்திநான்கு மணி நேரமும் அதற்கென்றே செலவிடமுடியும். அவ்வாறு செலவிடும்பொழுது வெறுப் புக் காட்டாமல், பிறர்மேல் சினமோ, வெறுப்போ கொள்ளாமல் அப்பணி யில் ஈடுபட முடியும். இந்தநிலை ஏற் பட்டால் ஓரளவு பொறுமை வந்து விடும்.

ஆனல் பிறரை வேண்டி, எழுது மாறு தூண்டி, எழுதப்பெற்றதை வாங்கிச் செப்பஞ் செய்து சேர்க்க வேண்டிய பணியில் மற்ருெரு வகை யான பிரச்னே தோன்றும். எழுது கிறவர் அத்துறையில் வல்லவராக இருக்கலாம். ஆனல் எழுதும் ஆற்றல் இல்லாதவராக இருக்கலாம். அதிலும் சாதாரண மக்களுக்கும் புரிய வைக் கின்ற முறையில் கலேச்சொற்களே அதிகம் பயன்படுத்தாமல் எழுதத் தெரியாமல் இருக்கலாம். ஆனல் தமக்கு இவற்றில் வழக்கம் இல்லே என்பதை எழுதும் அறிஞர் ஏற்றுக் கொள்ளமாட்டார். எனவே தாம் எழுதியதை அப்படியே போடவேண் டும் என்று கூறுவார். இத்தகைய மனிதர்களிடம் ஊடாடி அவர்களிடம் எழுதி வாங்கும்பொழுது ஒருவர் பொறுமையின் எல்லேக்கே செல்ல வேண்டி இருக்கும். ஆசிரியர் பொறு மையை இழந்தால் களஞ்சியப்பணி நடைபெருமல் நின்றுவிடும். இத் தகைய நேரங்களில் பெரியசாமித் தூரன் என்ற அறிஞர் மறைந்துவிடு வார். எப்படியாவது களஞ்சியப் பணி நடைபெற வேண்டும் என்ற குறிக்கோளில் தம்மைக் கரைத்துக் கொண்டு பொறுமையின் எல்லேயில் நின்று பணியை நிறைவேற்றும் குறிக் கோள் வீரர்தான் அங்கு இருப்பார்.

இவை எல்லாவற்றையும் கூடப் பொறுத்துக் கொள்ளலாம். இப்பணி யையும் அதன் சிறப்பையும் அறிந்து இதனேச் செய்து முடிக்கின்றவரை பாராட்டிப் போற்றும் பண்புடைய வர்கள் நிறைந்திருந்தால் அந்தப் பணியை மேற்கொண்ட ஆசிரியர் இப்பாராட்டுதலின் எதிரே தம் துயரத்தையும் துன்பத்தையும் மறந்து விட முடியும்.

தூரனேப் பொறுத்தவரை இந்த வகையில் அவர் இராசி இல்லாதவர் என்றுதான் கூறவேண்டும். அவர் செய்யும் பணியின் ஆழத்தையோ, சிறப்பையோ ஒரு சிறிதும் அறியாத, அறிய முடியாத நிர்வாகத்தார், தப்பித் தவறி இதன் சிறப்பை அறிந்த ஒருவர், இருவர் அல்லது பத்திரிகை பாராட்டி விட்டால் அதுகண்டு சீறும் பண்பினர்கள் இடையே ஒரு மனிதர் செயல்பட்டு அந்தக் காரியத்தையும் வெற்றிகரமாகச் செய்து முடித்தார் என்றல் அவருடைய பொறுமைக்கு ஓர் அளவே இல்லே என்றுதான் சொல்லவேண்டும்.

மனித நிலேக்கு அப்பாற்பட்ட இத்தகைய ஒரு பொறுமையை, விருப்பு வெறுப்பற்ற சமதிருஷ்டியை தூரன் என்ற மனிதன் எவ்வாறு பெற முடிந்தது? விவேகானந்தரையும், கீதையையும் கரைத்துக் குடித்ததாக மார்தட்டித் திரியும் எவருக்கும் இந் தச் சமதிருஷ்டி வரவில்லே. பிறர் அடையும் நியாயமான புகழைக்கண்டு சகித்துக் கொள்ளும் மனநிலே இல்லே. ஆனல் இந்தத் தனி மனிதருக்குள் இந்தப் பேராற்றல் எவ்வாறு வந்தது? தம்முடைய விருப்பு வெறுப்புக்களுக்கு இடம் கொடுக்கத் தொடங்கினல் எடுத்த காரியம் நிறைவேருது என்ற மனப்பான்மையில் இவ்வாறு இருந் தாரா? அப்படியானல் ஒரு குறிப் பிட்ட அளவு வளரத்தான் அந்தப் பொறுமை இருக்க முடியும்.

தூரனின் இந்த மனநிலே ஆழ மான தெய்வபக்தியின் அடியில் தோன்றிய ஒன்ருகும். நடப்பவை அனேத்தும் இறைவன் செயல் என்ற எண்ணம் வலுவாக ஒருவருக்கு வந்து விடுமானல் தனிப்பட்ட விருப்பு

வெறுப்பு என்பவை அங்கே நுழைய முடிவதில்லை. எந்த ஒன்றைச் செய்யும் பொழுதும் அதனை இறை பணியாக மதித்துச் செய்யும் பொழுது யார் போற்றுகிறார்கள், யார் தூற்றுகிறார்கள் என்ற பிரச்னைக்கும் அங்கு இடம் இல்லை.

இறையுணர்வு ஒன்று மட்டுமே சம திருஷ்டியையும் அதன் விளைவான பிற பயன்களையும் தரமுடியும். இந்த மன நிலை உடைய ஒருவர் கவிதை எழுதினாலும், விஞ்ஞானக் கட்டுரை எழுதினாலும், கலைக் களஞ்சியப் பணிபுரிந்தாலும் ஒரே மனநிலையில்தான் அப்பணியில் ஈடுபடுவர். இத்தகைய மனிதர்களின் வளர்ச்சி என்பது அவர்கள் வகிக்கும் பதவியைக் கொண்டோ, பெறும் ஊதியத்தைக் கொண்டோ, எத்தனை பேர்களை அவர்கள் அறிவார்கள் என்பதைக் கொண்டோ கணக்கிடப்படுவதில்லை.

இவர்கள் வளர்ச்சி என்று கூறும் பொழுது இவர்களின் ஆன்மீக வளர்ச்சியைத்தான் குறிப்பிடுகிறோம். மேலே குறிப்பிட்ட அத்தனை இடையூறுகள் இருந்தும் யார் பேரிலும் வெறுப்போ சினமோ கொள்ளாமல் தூரனால் எப்படி இருக்க முடிந்தது? அப்படி இருந்தமையால் தான் அவருடைய வளர்ச்சி ஆன்மீகவளர்ச்சி என்று கூறுகிறோம். அவரைப் போலக் கவிதை எழுதியவர்கள் பலர் உண்டு. அவரைப் போல ஆய்வு நூல்கள் எழுதியவர்கள் உண்டு. தமிழில் இல்லை என்றாலும் பிற மொழிகளில் கலைக் களஞ்சியம் தயாரித்தவர்கள் உண்டு. இவர் செய்த பணியின் சிறப்பைப் பாராட்டாமல் எடுத்தெறிந்து பேசியவர்களைப்போல மேலே கூறப்பெற்ற துறைகளில் எழுதியவர்களைப் பிறர் பேசியதும் உண்டு.

ஆனால் இவை அனைத்தையும் பொறுத்துக் பிறர்மேல் பகை, காழ்ப்பு, சினம் முதலிய எதுவுங் கொள்ளாமல் தம் பணியை முடித்த ஆன்மீக வளர்ச்சியும், சமதிருஷ்டியும் உடையவர்களாய் இருந்தவர்கள் மேலே கூறிய தொகுயில் யாரும் இல்லை. ஆனால் நம்மிடையே வாழ்ந்து மறைந்த தூரன் ஒருவரே இதற்கு இலக்கணமாக வாழ்ந்தார். ○

## காதல்

"கொன்றை அனல்பூத்து
குயில்வாடுங் கார்காலம்
கன்றி உளம் நைந்து
காதலர் தம் பிரிவஞ்சும்
இருளுக்கு இருள் போர்த்த
இறுதியிலா இரவு ஒன்றில்...."

— கவிஞர் தூரன்

# நாவன்மையில் ஒரு நகைச்சுவை



கோவை அவிநாசிலிங்கம் மனையியல் கல்லூரியில் தூரன் பேசுகின்றார்.
அவருடைய பேச்சை ரசித்து சிரித்துக் கொண்டிருக்கும்
உயர்திரு. அவிநாசிலிங்கம் ஐயா அவர்களும்,
கல்லூரி இயக்குநர் டாக்டர் ராஜம்மாள் தேவதாஸ் அம்மா அவர்களும்.

# பண் ஆராய்ச்சி மாநாட்டில்



23—12—1972ல் இந்து அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன் தலைமையில் கவிஞர் தூரன் அவர்கள் பண் ஆராய்ச்சி மாநாட்டை துவக்கி வைத்துப் பேசுகின்றார். இடதுகோடியில் அமர்ந்திருப்பவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை



தீபம் நா. பார்த்தசாரதி

# தூரனின் சிறுகதைகள்

அறிஞர் பெரியசாமித் தூரன் அவர்களைக் கவிஞர், இசைப்பாடலாசிரியர், கட்டுரையாளர், மகாகவி பாரதியாரின் சிந்தனைத் துறைகளை ஆராய்ந்தவர், கலைக்களஞ்சியப் பதிப்பாசிரியர் என்றே நாடு அறியும். காந்தியவாதி எனவும் அறியும்.

ஆனால் மறக்கப்பட்ட திறமை ஒன்றும் அவரிடம் இருந்தது. மிகச் சிறப்பாகவே அத்திறமை அமைந்திருந்தது. அதுதான் கதை எழுதும் திறன்.

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் கல்கி முதலிய இதழ்களிலும், பின்பு நூல் வடிவிலும் அவரது சிறு கதைகள் வெளிவந்திருக்கின்றன. அந்தக் கதைகளில் சிலவற்றை இன்று படித்தாலும் தூரனின் திறமையை வியவாமல் இருக்க முடியவில்லை. புகழாமல் இருக்க இயலவில்லை.

கொங்கு நாட்டு மக்கள்—குறிப்பாக அடித்தளத்து மக்கள்-கொங்கு நாட்டு வாழ்க்கை, கொங்கு நாட்டு வயல் வரப்புகள் தோட்டங்கள் இவை அவர் மனத்தில் சித்திரங்களாகப் பதிந்து போயிருப்பதைக் கதைகளிலிருந்து நன்ருக அறிய முடிகிறது.

1. பிள்ளை வரம்
2. தங்கச் சங்கிலி
3. காளிங்கராயன் கொடை
4. மாவிளக்கு
5. உரிமைப் பெண்

ஆகிய நான்கு சிறந்த சிறுகதைத் தொகுதிகளைத் தூரன் எழுதி வெளியிட்டிருக்கிருர் என்ருலும் அவரது இலக்கியப் போக்கை அறியச் சில சிறுகதைகளில் அவர் பதித்துள்ள முத்திரையே போதுமானது.

மாடுமேய்க்கும் சிறுவர், ஓவியர்கள், காதலர்கள், குடும்பத் தலைவன் தலைவி, கொங்கு நாட்டுப் பண்ணை உரிமையாளர்—பண்ணையாள், ஆடு மேய்க்கும் சிறுவர்கள், பழக்கத்திற்கு அடிமையாகும் குடிகாரர்கள், பட்டுத் திருந்தும் குடிகாரர்கள் என்று பல விதமான கதாபாத்திரங்களை அவர் கதைகளில் காணமுடிகிறது. ஒவ்வொன்றும் நல்ல வார்ப்படம் பெற்றுள்ளது.

நிகழும் கதைப் பிரதேசம் என்று வரும்போது அவரை அதிகம் கவர்ந்துள்ள கொங்கு நாட்டுப் பிரதேசங்களே வருகின்றன.

'கரடிப்பாளையம், புதுப்பாளையம் பெரியநாய்க்கன்பாளையம் கரட்டுப் பாளையம், தட்டுப்பாளையம், செங்காளிபாளையம், எழுமாத்தூர், கவுண்டம்பாளையம், வேட்டைக்காரன் புதூர், துடியலூர், சிங்காநல்லூர் கோயமுத்தூர், கோட்டுப்பாளையம், மாரப்பம்பாளையம், தவுட்டுப் பாளையம்' என்று கதைகளில் வரும் ஊர்கள் நம்மை ஈரோட்டைச் சுற்றியும் சேலத்தைச் சுற்றியும் கோவையைச் சுற்றியும் கொண்டு போய் நிறுத்திவிடுகின்றன. அத்தனை தத்ரூபம்.

''அஞ்சு ரூபாதானே எச்சு? அதையே வாங்கிக்கிட்டு வாரத்துக் கென்ன?''

''என்னமோ ஏமாந்து போச்சு நான் விலை எச்சுன்னு வாங்காமெ வல்லே. இதே நல்லதுன்னு அல்லாருஞ் சொன்ஞங்கோ, எனக்கும் பிடிச்சுது; எடுத்து வந்தேன். உடுத்திக்கச் சொல்லு'' என்று வரும் (பிள்ளைவரம் தொகுதி 170 சிறுகதை) குரங்கு மனம்/உரையாடலில் கொங்கு நாட்டுப் பேச்சுத் தமிழ் சரளமாக வருகிறது.

'எச்சு' என்ற ஒரு வார்த்தையின் அழகு போதுமே? இதைவிட அதிகம் என்ற பொருளில் வருகிற வார்த்தை அது. கொங்கு நாட்டு மக்கள் பேச்சு வழக்கில் இயல்பாக அந்த வார்த்தை வந்து விழுகிறது. 'அல்லாரும்' (எல்லாரும் 'சொன்ஞங்கோ' (சொன்ஞர்கள்) எனப் பிற சொற்களிலும் அவ்வழகு பளிச்சிடுகிறது.

தூரனின் கிராமப்புறக் கதைகளில் (RURAL STORIES) வட்டார வண்ணம் (LOCAL COLOUR) பளிச்சிட இச்சொற்ருெடர்கள் பேருதவி புரிகின்றன.

மாடு மேய்க்கும் சிறுவர்கள் மேல் அவருடைய பரிவும் பார்வையும் சற்றே அதிகமாகப் பட்டிருக்கின்றன.

அவர்கள் அன்பு நிரம்பியவர்களாகவும் பாசஉணர்வு உள்ளவர்களாகவும் அப்பாவிகளாகவும் சித்தரிக்கப் பட்டிருக்கிறார்கள்.

தான் மிகவும் பிரியமாக வளர்த்த 'செம்பட்டை' என்ற ஆட்டைப் பலி வாங்கிய 'சாமிக்கல்லை' வேரோடு பிடுங்கி எறியும் வீரன் என்ற சிறுவன் 'சாமிதரிசனம்' என்கிற கதையில் வருகிறான். மறக்க முடியாத உருக்கம் நிறைந்த-அருமையான சிறுகதை இது.

'ரங்கபோயன்' யதார்த்த அழகு நிரம்பிய ஒரு கதை.

''நீ இந்த உலகத்தில் இருந்தால் பண்ணைக்காரர் போன்ற மனிதர்கள் கொஞ்சம் அடங்கியிருப்பார்கள். நான் இருந்து யாருக்கு லாபம்? நம்மைத்தான் இந்தக் கோர்ட்டுகள் தண்டிக்குமே ஒழிய அவர்களை ஒன்றும் செய்யாது. அதனால் நீ இருப்பது நான் இருப்பதை விட நல்லது. உனக்கு இருக்கிற தைரியம் எனக்கு இல்லை''—என்று கதையின் இறுதியில் ரங்கபோயன் நாச்சியப்பனிடம் கூறும்போது நமக்கு ஆகா! இந்த ரங்கபோயனுக்குள் இப்படி ஒரு தெளிவும் தீர்மானமும் உண்டா? என்று வியக்கத் தோன்றுகிறது.

ஓவியக் கலையிலும், ஓவியக் கதாபாத்திரங்கள் மேலும் தூரனுக்கு அதிக ஈடுபாடு இருந்திருக்கவேண்டும் அவர்களுடைய குணச்சித்திரங்களை அலசிப் பல சிறுகதைகளை அவர் எழுதியிருக்கிறார்.

பெண்ணின் கன்னிமை எழில் தான் உயர்வு என நினைத்து அதே பிரமையில் இருந்த ஓர் ஓவியன் தாய்மை அழகு கன்னிமை அழகையும் விடப் புனிதமானது என்று புரிந்து கொண்டதைச் சித்திரிக்கும் சிறுகதை தான் தூரனின் ஓவியர் மணி.

கலைஉள்ளம், ஓவியன் ஆகிய மற்ற சில கதைகளும் கூட ஓவியர்களைப்பற்றியவையே.

இராணுவ உடைக்கு மக்களிடம் இருக்கும் மரியாதையையும் பயபக்தியையும் கண்டு அதை அணிந்து ஏமாற்ற முயலும் மருதப்பன் ஈரோடு சந்திப்பில் மாட்டிக் கொண்டு முழிக்கும் கதை நயமானது. உள்ளடங்கிய நகைச்சுவை கொண்டது. 'சிப்பாய் மருதப்பன்' ஒரு சுகமான கதை. 'பிள்ளைவரமும்' ஒரு குத்த-லான சிறுகதை தொழில்திறனோடு (CRAFTMANSHIP) எழுதப் பட்டு உள்ளது.

மதுவின் கொடுமையையும் ஏழை விவசாயிகள் பண்ணைக்கூலியாட்கள் மதுப் பழக்கத்தால் சீரழிவதையும் நயம்படச் சித்திரித்து உயிரோவியங்களான பல சிறுகதைகளைத் தூரன் எழுதியிருக்கிறார். அவற்றில் மதுப் பழக்கத்தில் சீரழிகிற குடும்பத்தின் பெண்கள் படுகிற அல்லல்களை அவர் சித்தரிக்கிற விதம் நெஞ்சை நெருடுவதாக அமைந்திருக்கிறது என்றே கூற வேண்டும். தூரன் கவிஞராகையினால் வருணனை வருகிற இடங்களில் உரைநடையிலேயே கவிதை அழகு பொங்க எழுதுகிறார்.

மறுநாள் காலை; கதிரவனோடு தூங்கிக் கதிரவனோடு விழிக்கும் பறவைகள் தங்கள் இணையுடன் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருக்கின்றன. இன்துயில் விட்டுப் புத்து-யிருடனும் புது மகிழ்ச்சியுடனும் மரத்துக்கு மரம் கிளைக்குக் கிளை பறந்து திரிகின்றன. இயற்கைத் தேவி அருளிய மந்த மாருதத்தில் நீந்தி உணவைத் தேடி உண்டு ஊறும் தீஞ்சுவைத் தண்ணீரைப் பருகி வாழும் அப்பறவைகளுக்கு அடக்க

முடியாத மயக்கந்தரும் களிப்பும் கிடையாது. அவற்றின் இன்பம் அழியா இன்பம் அமைதியான இன்பம்.

புதுக்கடை என்கிற கதையில் வருகிற மேற்படி வைகறை வருணனையை எவ்வளவு சரளமாக அமைந்திருக்கிருர் பாருங்கள்!

மதுவிலும்-இருமனப் பெண்டிர் உறவிலும் கட்டிய மனைவியை-முத்தம்மாளைப் புறக்கணிக்கும் கணவனை பற்றிய முத்தம்மாள் என்ற கதையை ஒரு சோகச் சித்திரமாகவே தீட்டியிருக்கிருர் தூரன்.

காளிங்கராயன் கொடை, கூலிக்கார வீரப்பன், சின்னுன் பண்ணையாள் ஆகிய சிறுகதைகள் கொங்கு நாட்டு மண்மணம் கமழும் கதைகள் கொங்கு நாட்டுக் கதைகளிலும்கூட விறகு வெட்டும் தொழிலாளி, ஆடுமாடு மேய்க்கும் சிறுவர்கள், பண்ணைகளில் கூலி வேலை செய்வோர் ஆகியோர் மீதுதான் தூரனின் பார்வையும் பரிவும் சென்றுள்ளமை குறிப்பிடத் தக்கது.

கோர்ட்டுகளில்கூட ஏழைகளுக்கு நீதி கிடைப்பதில்லை - உண்மையிலிருந்து விலகிய வழக்குகளே தெரிகின்றன என்பதை ரங்கபோயன் என்கிற கதையில் உறைக்க உறைக்கச் சொல்லியிருக்கிருர். சாமி தரிசனம் கதையில் தான் பிரியமாக மேய்த்த ஆட்டைப் பலி கொண்டுவிட்ட சாமி சிலையைச் சிறுவன் வீரன் பிடுங்கி எறிகிறபோது நமக்கு அவன் மேல் கோபம் வரவில்லை. பரிவுதான் பெருகுகிறது. அவ்வளவு அருமையாக அதை எழுதியிருக்கிருர் தூரன்

காதல் கதைகளைமிகமிக நாசூக்காக எழுதுவதிலும் அவர் கெட்டிக்காரர் என்பதை சாரதாவின் காதல், காதல்வழி முதலிய கதைகள் மூலம் நிரூபித்திருக்கிருர்.

குதிரைப் பந்தய ஆசையும் பழக்கமும் ஒரு நாணயமான நடுத்தரக் குடும்பத்து மனிதனை என்ன பாடு படுத்திவிடும் என்பதை ''ஒரே ஒரு தடவை'' என்ற கதையில் சித்திரித்திருக்கிருர். விடைபெருத கேள்வி நம்மைக் கொஞ்சம் மருட்டக் கூடிய பேய்க்கதைதான் என்ருலும் இரசமாக எழுதியிருக்கிருர் தூரன்.

ஒரு நூறுக்குக்குறைவாக அல்லது அதிகமாக அவர் சிறுகதைகளின் எண்ணிக்கை வரலாம். ஆர். சண்முக சுந்தரத்தை எப்படிக் கொங்கு நாவலாசிரியர் என்கிருேமோ, அப்படிக் கொங்கு நாட்டு வாழ்வின் அழுத்தம்படச் சிறுகதைகளைத் தீட்டியவர் என்ற பெருமை தூரனுக்கே கிடைக்கிறது.

1965 க்குப் பின் சிறுகதைகள் எழுதுவதைக் குறைத்துக் கொண்டு விட்ட-அநேகமாக எழுதாத தூரன் அவர்களை இன்றைய தமிழகம் கலைக் களஞ்சிய ஆசிரியராக மட்டுமே அறிந்திருக்கலாம். ஆனுல் அது தூரனின் பிழையில்லை. தமிழ் மக்களின் அறியாமைப் பிழைதான். 1940 க்கும் 1960 க்கும் இடைப்பட்ட இருபதாண்டுக் காலத் தமிழ் இலக்கிய வரலாறுஎழுதப்படும்போது-அக்கால கட்டத்தின் சிறுகதை இலக்கியப் பரப்பிலே தூரனின் கதைகள் முக்கிய இடம் பெற்றிருக்கும். அவருடைய 'சாமி தரிசனம்' என்கிற கதை உலகச் சிறுகதை இலக்கியத் தரத்தில் நிற்கக் கூடியது. ஆடுமாடு மேய்க்கும் ஓர் அப்பாவிச் சிறுவனின் உள்ளுணர்வையும் அவலங்களையும் சித்திரிக்கும் அச்சிறுகதையைத் தமிழில் வெளிவந்திருக்கும் மிகச் சிறந்த சிறுகதைகளில் ஒன்ருக நான் எண்ணுவேன். அந்தக் கதையில் காணும் நயமும், சோகமும் அதைத் தூரன் எழுதியிருக்கும் விதமும் மறக்க முடியாதவை. மறக்க கூடாதவை என்று கூறுவேன். ☐



# பத்மபூஷண் தூரன்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியம்
தமிழ்த்துறைத் தலைவர்
சென்னைப் பல்கலைக் கழகம்

**இருபதாம் நூற்றாண்டில் தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு நிலையான தொண்டு செய்த மக்கள் சிலருள் சிறப்பாகக் குறிக்கத் தக்கவர் அமரகவி தூரன் ஆவர். இந்திய மொழிகளுக்குள்ளேயே முதன் முதலில் தமிழ் மொழியில்தான் கலைக்களஞ்சியம் வெளிவந்தது. இதனைச் சிந்தித்தவர் பேசியவர் அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்களும், திட்டமிட்டுச் செயலாற்றி அயராது உழைத்து வெற்றி கண்டவர் தூரன் அவர்களும் ஆவர். தமிழ் மொழிக்கு முற்றிலும் புதியதாக அமைந்ததொரு பணியில் நன்கு திட்டமிட்டு வெற்றி பெறுவதென்பது எளிய செயலன்று. ஆனால் உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? என்றபடி, சிறந்த குறிக்கோளை நோக்கி உள்ளத்து ஒளியுடன் உறுதியாக உழைத்தால் முன்னேற்றம் என்பது உறுதி.**

மாநிலக் கல்லூரியில் பயிலும்போதே 'பித்தன்' என்றொரு கையெழுத்துப் பிரதியொன்று நடத்தி தம் மனத்தகத்தே எழுந்த எண்ண அலைகளுக்குக் கவிதை வடிவம் தந்தவர் தூரன். 'தூரன் கவிதைகள்' என்ற அவர்தம் கவிதைத் தொகுதியில் அமைந்துள்ள கவிதைகள் எளிமையும் இனிமையும் கொண்டு உயரிய கருத்துக்களின் இருப்பிடமாய் இலங்கக் காணலாம். 'இளந்தமிழா' என்னும் கவிதைத் தொகுதியும் இவ்வாறே சிறந்த கவிதைகளின் தொகுதியாக அமைந்திருக்கக் காணலாம்.

இருபது ஆண்டுகளுக்கு முன்னர் யான் குடும்பத்துடன் பழநி திருத்தலம் சென்றிருந்தேன். நான் சுவாமி பிரகாரத்தை வலம் வந்து கொண்டிருக்கும் பொழுது, சுவாமி சந்நிதிக்கு நேர் எதிரில் நின்று, தானே எழுதிய முருகன் மேல் அமைந்துள்ள பாடல்களை வாய்விட்டு நெக்குருகப் பாடித் தம்மை மறந்து பரவச நிலையில் நின்ற தூரன் அவர்களைக் கண்டு நானும் என்னை மறந்து நின்றிருக்கிறேன். பழநி முருகனிடத்தில் அவருக்கு ஒரு தனி ஈடுபாடு.

அடுத்து, இளைஞர்களைத் தட்டிக் கொடுத்து ஊக்கம் அளித்து ஆதரிக்கும் அவர் பண்பைப் பலமுறை கண்டு நான் வியந்திருக்கிறேன். 1966-ல் தமிழ் விரிவுரையாளராகச் சேர்ந்தபொழுது, என்னைக் கலைக்களஞ்சியத்துக்கு எழுதும் படி ஆர்வமூட்டினார்கள்.

கடைசித் தொகுதி வேலை அப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஜகவீர பாண்டியனார் பற்றி நான் ஒரு கட்டுரை எழுதினேன். இதற்கென மதுரை சென்று நேரே வயது முதிர்ந்து தளர்ந்திருந்த அப்பெரியவரைக் கண்டு வந்தேன்.

நிற்க, தமிழிசை வளர்ச்சிக்கு தூரன் ஆற்றிய பங்கும் அளவிடற்கரியது. தமிழில் இசையரங்கிற் பாடப் பாடல்கள் இல்லை என்ற குறை அவரால் பெருமளவு குறைக்கப்பட்டது. கீர்த்தனங்களை எழுதியும் வெற்றி பெற்றார். தமிழிசைச் சங்கத்தில் டிசம்பர்த் திங்கள் இசை விழாவில் அவருடைய பாடல்கள் இடம் பெறாத கச்சேரியினைக் காண முடியாது. மேலும் ஆண்டுதோறும் நடைபெறும் பண் ஆராய்ச்சிக் கூட்டங்களில் தவறாது கலந்து கொண்டு தம் கருத்துக்களை வழங்கி வந்தார். ஓர் ஆண்டில் இசைப் பேரறிஞர் பட்டம் பெற்றார். தமிழிசைப் பணி ஆராய்ச்சிக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கினார். மேலும் பண் ஆராய்ச்சியின் வெள்ளி விழாவின் போது அதுகாறும் நடைபெற்ற பண் ஆராய்ச்சிக் கூட்ட முடிவுகளைத் தொகுத்து ஒரு நூலாகத் தந்தார்.

மைய அரசு இவர்தம் பணியினைப் பாராட்டி பத்ம பூஷண் பட்டத்தினை வழங்கியது. பாரதி பாடல்களில் பேரீடுபாடு கொண்டவர் இவர். பாரதியார் நூல்களை ஆராய்ந்து இவர் எழுதியிருக்கும் நூல்கள் பலவும் இவர்தம் ஆராய்ச்சிப் புலமைக்குச் சான்றாய்த் திகழ்கின்றன. நாடகங்கள் சிலவும் இவரால் எழுதப் பட்டுள்ளன. நாற்பதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவர்தம் பல்துறைப் புலமையைக் காட்டும்.

அறிஞர் பெரியசாமித் தூரன் கவிஞர், சிறுகதை எழுத்தாளர், நாடக எழுத்தாளர், ஆராய்ச்சியாளர். அனைத்திற்கும் மேலாக உயர்ந்த மனிதர். எளிமையான வாழ்வினை மேற்கொண்டவர். தூய கதராடையும் தூய தொண்டுள்ளமும் இவரை என்றும் நினைக்க வைப்பனவாகும்.



# இப்படியும் ஒரு நினைவு

டாக்டர் ம. ரா. போ. குருசாமி

**பல அரசியல், வரலாற்றுக் காரணங்களால் பொது வாகப் பாரத நாடும் குறிப்பாக பல்வேறு மொழிவழிப் பட்ட இந்திய இனங்களும் வளர்ச்சி குன்றி முடங்கிக் கிடந்தன. அதிலும் குறிப்பாக வெள்ளையர் ஆதிக்கத்தின் கீழ்ப் பாரதம் சிக்கியபின் வளர்ச்சி முடக்கம் மட்டுமன்றி எதற்கும் மேற்குத் திசையை நோக்கும் அடிமையுணர்வும் ஓங்கலாயிற்று. மேற்குத் திசை கதிரவன் மறைவுக்கும் இரவின் செறிவுக்கும் உரிய திசை என்பது நிலவியல்; மேலைத் திசையையே எதற்கும் எதிர்பார்த்துப் பண்பாடு முதலான பல துறைகளிலும் இருட்டை வரவழைத்துக் கொண்டது நம் அடிமை வாழ்வின் வரலாறு.**

நம்முடைய நாகரிகம், நம்முடைய பண்பாடு, நம்முடைய இலக்கியம்' நம்முடைய தத்துவம், சமயம்...... என்றெல்லாம் உரிமையுணர்வோடு பற்றும் பாசமும் கொண்டு நிமிர்ந்து நிற்கும் வீறு தொலைந்துபோன நிலையில் சுவாமி விவேகானந்தர், வள்ளற்பெருமான், காந்தியடிகள் போன்ற சான்றோர்கள் இந்த மண்ணின் பெருமையை உலகுக்கு உணர்த்திடத் தோன்றினார்கள். நூறு, ஆயிரம், நூறாயிரமாக இந்தச் சான்றோர்களின் வழித் தொண்டர்கள் நம் நாடி நரம்பு களுக்கு உணர்வும் உரமும் ஊட்டி, உரிமையுணர்வு கிளர்ந்து பொங்கிடச் செய்தனர்.

ஒருவாறு பாரதம் விடுதலை பெற்றது. ஆனால் பல்வேறு துறையிலும் வறட்சியே எங்கணும் பரவிக் கிடந்தது. வறட்சி அகல்வதற்கு அடிப்படையான ஆக்கப் பணிகள் ஏராளமாகச் செய்ய வேண்டிய தேசியக் கடமை இந்நாட்டு மக்களுக்கு அறைகூவல் விட்டுக் கொண்டிருந்தது.

உரிமை பெற்ற பாரதத்தின் நிர்வாகப் பொறுப்பேற்ற நம் தலைவர்கள் ஏறத்தாழச் சுடலையிலிருந்து சுதந்திர பாரதத்தை உருவாக்கும் பகீரதர்களாகப் பணியாற்றினார்கள்.

பாரதப் பெருநாடு உரிமை பெற்ற அதே 1947 ஆகஸ்டு 15-ல் தமிழ் வளர்ச்சிக் கழகம் உருவாயிற்று; தமிழிலே கலைக் களஞ்சியம் வெளியிட வேண்டும் என்ற முயற்சி அரும்பிற்று. 1947 அக்டோபரில் கலைக் களஞ்சியப் பணி தொடங்கிற்று. ஆறு ஆண்டுகள் அரும்பணி கொண்டு ஏழாம் ஆண்டில் 1954 ஏப்ரலில் தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் முதல் தொகுதி வெளிவந்தது. 1968 டிசம்பரில் பத்தாம் தொகுதி வெளிவந்தது. ஆக, பதினான்கு ஆண்டுக் காலத்தில் தமிழ்க் கலைக் களஞ்சியம் நிறைவுற்றுச் சிறந்தது.

கலைக் களஞ்சியத்தின் முதல் தொகுதியில் 'ஆங்கிலத்தில் சேம்பர்ஸ் என்சைக்ளோபீடியா' வெளியிடுவதற்கு 10 ஆண்டுகளும், என்சைக்ளோபீடியா பிரிட்டானிக்காவின் 9-ம் பதிப்பைத் திருத்தி அமைப்பதற்கு 15 ஆண்டுகளும் ஆகியிருக்கின்றன. ஜப்பான் மொழியில் 10 தொகுதி கொண்ட கலைக்களஞ்சியம் வெளியிட 12 ஆண்டுகளும் இத்தாலிய மொழியில் கலைக்களஞ்சியம் வெளியிட 9 ஆண்டுகளும் ஆகியிருக்கின்றன. என்று வித்தியாலயம் ஐயா திரு. தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள் எழுதியுள்ளார்கள்.

மேற்கு நாட்டு மொழியினர்க்கு இருக்கும் வசதிகளையும் ஜப்பானியரின் முயற்சி மேன்மையும் கருதிப் பார்த்தால்தான் தமிழிலே கலைக் களஞ்சியத்தைப் பதினான்கு ஆண்டுகளில் நிறைவு செய்த பெருமை புலப்படும்.

பாரத நாட்டிலேயே தமிழில்தான் முதன் முதலாகக் கலைக் களஞ்சியம் வெளியாயிற்று என்பதைப் பெருமிதத்தோடு நம் நினைவிலே கொள்ள வேண்டும் கல்வியமைச்சராயும் தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவராயும் இருந்து இந்தத் திட்டத்துக்குக் கால்கோள் செய்து, தொடர்ந்து இயக்கியும் வந்த ஐயா தி. சு. அ அவர்களின் பணி இராசராசேச்சுரத்தை உருவாக்கிய இராசராசன் பணிக்கு நிகரானது.

ஏவுதற்கருத்தாவாக வித்தியாலய ஐயா அமைந்தார்கள். ஆனால், இயற்றுதற் கருத்தாவாக அமைந்து, திட்டம் இடைமுறிவு படாமல் கொண்டு செலுத்தி, இமாலயச் சாதனையாக முடித்துக் காட்டியவர் ம. ப. பெரியசாமித் தூரன் தான். தமிழ்நூல் பதிப்புத் துறைக்கு ஓர் ஐயரவர்கள் வாய்த்தது போலக் கலைக் களஞ்சியத் துறைக்கு ஒரு தூரன் என்று உணர்த்துமளவுக்குத் தொண்டர் நாதனாகத் தமிழ்ப் படையின் தனி நாயகனாகத் திகழ்ந்தவர் பெ. தூரன் அவர்கள்.

தமிழகத்து மக்களின் மனப் பாங்கு, தமிழகத்து அறிஞர்களின் 'நவக்கிரகப் பார்வை, புலவர் பெருமக்களின் தடுப்பு, எடுப்புத் திறம் முன்னேக்கும் முற்போக்கும் கண்டால் காலே வாரிவிடத் தயங்காத திரை மறைவுத் திருப்பணிகள்....என்று நீண்டுகொண்டே போகும் ஒரு முடிவிலா எதிர்மறைப் பட்டியல் தமிழகம் போலப் பிற மாநிலங்களில் காணமுடியாது. இந்த முடிவிலாப் பட்டியலின் உணர்வு மோதல்களிடையே ஒருவன் சிக்கினுல் ஒரு வார காலத்தில் கீழ்ப்பாக்கத்து நிரந்தரவாசியாகிவிடுவான்; அல்லது ஆண்டவன் திருவடியை அவனுகவே வலியத் தேடிப் போய்விடுவான். தமிழகத்தில் ஆக்கப் பணி செய்வோர் அடையும் நிலே இது. இந்தச் சூழலிலே ஏறத்தாழ ஒரு தலேமுறைக்காலம் ஈடு கொடுத்து நின்று, வெற்றியும் பெற்றுர் ஒருவர்—அதிலும் பெரும்பாலும் எல்லாச் சார்பினரின் ஒருமுகமான பாராட்டு தலேயும் பெற்றுர் ஒருவர்—என்றுல் அது அண்மைக்கால வரலாற்றில் பெரியசாமித் தூரன் ஒருவர்தான்.

எவ்வகையிலும் இந்த மண்ணிலே காணமுடியாத இவ்வரும்பெருஞ் சாதனேயை அவரால் எப்படிச் சாதிக்க முடிந்தது?

பொறுமை

அளவிறந்த பொறுமை

தன் உணர்ச்சியை அடக்கிக்கொண்ட பொறுமை

தன்னேயே அழித்துக்கொண்ட பொறுமை

''தெய்வத்தின் கட்டளேயை ஏற்று, ஒரு ஆக்கப் பணியிலே இறங்கிவிட் டோம்'' என்ற உணர்ச்சிக்கு மட்டுமே இடம் கொடுத்து - வேறு எந்த உணர்ச்சிக்கும் ஆசைக்கும் இடம் கொடாமல் - துருவப் பார்வையுடையவர் களேயும் தன் பணிவால் இசையச் செய்து....தான் தனது என்ற பாவனே களேப் புதைத்துவிட்டு,..ஆற்றிய அரும்பணி நாயகர் நம் பெரியசாமித் தூரன்

வேறு வழி இல்லாமல் — பஞ்சத்துக்கு ஆண்டியாய் — இந்தப் பணியை ஏற்றிருந்தால் 'விதியே' என்று ஒரு வேளே பொறுமை பேணியிருப்பார்கள், மற்றவர்கள் திரு தூரன் நல்லாசிரியமணி, எழுத்தாளர், இசைவாணர்.... இப்படிப் பல்திற ஆற்றல் உடையவர். வயிற்றுப்பாட்டுக்காக 'உத்தியோகம்' பார்க்க வேண்டுமென்ற கட்டாயமும் இல்லாதவர்.

நாலணுப் பணி ஆற்றியவன்களெல்லாம் அரியாசன ஆசையால் ஆட்டம் போடும் காட்சிக்கிடையே இருக்குமிடம் தெரியாமல்—தெரிந்துவிட்டால் திரை போட்டுக்கொண்டு தமிழுக்கு ஆக்கப்பணி செய்த ஒரு பெருமானேக் கண்டோம் ஆம் பெரியசாமித் தூரனே அடையும் பெரும் பேறு தமிழ் அன்னேயின் தவப் பேறு.

பொதுக் கலேக் களஞ்சியம் வெளியிட்டு முடித்த கையோடு, பாலர் கலேக் களஞ்சியமும் வண்ணக் கோலத்தில் வருமாறு முயன்று, அந்த முயற் சியிலும் வாகை சூடினுர் பெரியசாமித் தூரன்.

'பாரதி தமிழ்' என்ற அவருடைய ஆய்வுத் தொகுப்பு நூல் பாரதி ஆய்வாளர்க்கு கலங்கரை விளக்கம். அதற்கான பணி மேற்கொண்டு சுதேசமித்திரன் அலுவலகத்தின் பழைய ஆவணக் குவியலிடையே பாரதியைத் தேடியபோதுதான் பெரியசாமித் தூரன் பொறுமைக் களஞ்சியமாக மாறியிருப் பாரோ! அப்படித்தான் என்றால், பாரதி நேரிடையாகத் தன் படைப்புகளால் தமிழ்ப் பணி செய்தது போலவே பொறுமைக் களஞ்சியமாகத் தூரனை ஆக்கியதில் மறைமுகமாகவும் தமிழ்ப் பணி செய்தவனாகின்றான்.

தூரன் அவர்களின் பல துறைத் திறமைகளையெல்லாம் எடுத்துரைத்து இக்கட்டுரையினை நீட்ட விரும்பவில்லை. அதற்கான திறமைத் தகுதியும் இருப்பதாக எண்ணவில்லை.

ஒன்றை மட்டும்-இந்த இனத்தின் கையாலாகாத்தனத்தை மட்டும் சொல்லி முடிக்காவிட்டால் அமைதி ஏற்படாது.

தென்காசியிலே அற்புதமான சிலைகளைக் கொண்ட திருப்பணியைப் பராக்கிரம பாண்டியன் முடித்தான். முடித்தவனுக்கு ஓர் ஐயம் எழுந்தது, இந்தத் திருப்பணியைத் தமிழ் மக்கள் பேணிக் காப்பார்களா? இப்படி ஓர் ஐயம் அவன் மனத்தில் எழுந்தது. 'இதனைப் பேணப்போகும் எதிர்காலத்து மக்களின் திருவடிகள் என் தலைமேல்' என்ற கருத்துப்பட ஒரு பாட்டை எழுதிவைத்துப் போனான்.

கலைக் களஞ்சியத்தின் கடைசித் தொகுதி 1968-ல் வெளிவந்தது. இருபது ஆண்டுக்காலம் நிறைவுறப் போகிறது. களஞ்சியத்தில் ஒரு தொகுதியும் கிடைப்பதில்லை. இரண்டாம் பதிப்பு வெளியிடுவதற்கு 'நாதி' இல்லை தடைக் கற்சுவர் (கள்) எழுப்புகிறவர்கள் இருக்கிறார்களோ என்று எண்ணத் தோன்று கிறது.

தூரன் இல்லை. அவர் தந்த கலைக் களஞ்சியமும் இல்லை! 'இல்லை, என்பதுதான் அவர் நிறைவுக் குறியோ!



**மனிதா! எழுந்திரு, சோம்பலை உதறித்தள்ளு.**
**நேர்வழியில் நட. குறுக்கு வழியை நோக்காதே!**
**பிறரைத் துன்புறுத்தி, வஞ்சித்து, அடிமைப்**
**படுத்தி இன்பம்கொள்ள நினைக்காதே!**

**—அமரர் தூரன்**



# பாரதி வழியில் தூரன் அண்ணா...

டாக்டர் மு. அறம்

கோவை ராமகிருஷ்ண வித்யாலயத்தில் உள்ள கோயிலில் தொடர்ந்து ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் பிரார்த்தனை நடந்துகொண்டிருக்கும். அந்தப் பிரார்த்தனையில் பெரியசாமித் தூரன் அவர்கள் இயற்றிய; "ஜெய் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவா" என்ற பாடல் தினமும் எல்லோராலும் பாடப்படும்.

இந்தப்பாடல் மூலம் அண்ணன் பெரியசாமித் தூரன் அவர்களின் நினைவு வித்யாலயம் இருக்கும் வரை இருந்து கொண்டே இருக்கும் என்பதில் எவ்வித ஐயமும்இல்லை.

பெரியசாமித் தூரன் அண்ணா அவர்கள் வித்யாலயத்தில் இயற்றிய இறவாப் புகழுடைய பாடலைப் போல நான் காந்தி கிராம பல்கலைக் கழகத்தில் இருந்த பொழுது, பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேராசிரியர் ரங்கராஜன் அவர்கள் 'எங்கள் காந்தி கிராமம்' என்ற அழகான பாடலை இயற்றினார். எப்போதும் நாங்கள் அதைப்பாடிக் கொண்டேயிருப்போம்.

இத்தகைய பாடல்களும்கூட ஒரு ஸ்தாபனத்தை உருவாக்க உதவுகிறது என்பதும் உண்மையே.

பெரியசாமி அண்ணா அவர்கள் பாரதியார்பால் மிக்க பக்தி உள்ளவர்கள். பாரதியாரைப்பற்றி அவர்கள் நிறைய எழுதியிருக்கிறார்கள். திருவள்ளுவருக்குப் பிறகு தமிழ் இலக்கிய வரலாற்றில் பாரதியாருக்கு ஒரு பெரிய இடமுண்டு. சுதந்திர இயக்க காலத்தில்—சுதந்திரம் வந்த பிறகு நம்நாட்டை நாம் நிர் மாணித்துக் கொண்டிருக்கிறோமே இந்தக் காலத்தில் இந்த நிர்மாண வேலை

தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கிறது அல்லவா. இவற்றுக்கெல்லாம் வழிகாட்டியவர் பாரதி.

கடந்த 40 ஆண்டுகளாக நம் நாட்டில், ஒரு தெளிவான தேசிய இலட்சியம் இல்லாவிட்டாலும் கூட, பெரியசாமித் தூரன் அவர்கள் பாரதியார் வழியில் நின்று அவர் பாடல்களின் மூலமாக நமக்கு வழிகாட்டியிருக்கிருர்கள். தூரன் அண்ணு பாடல்கள் தொடர்ந்து நம் நாட்டுக்கு வழிகாட்டும். அவருடைய எழுத்துக்களை எல்லாம் ஒரு நல்ல தொகுப்பு நூலாக மலிவு விலையில் கொண்டுவந்தால், அதன் மூலமாக அவருடைய தேசிய சேவை தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும்.

இளம்பிள்ளையாக இருக்கும்போது மனதில் பதியும் ஒன்று, தொடர்ந்து ஒருவனை வழிநடத்தும் என்பார்கள். நான் சிறுவனுக இருக்கும்போது முதலில் படித்த பாரதியார் பாடல் இதுதான்;

"அறிவிலே தெளிவு நெஞ்சிலே உறுதி
அகத்திலே அன்பினோர் வெள்ளம்"

தமிழ் மொழியில் உள்ள ஆர்வம், இலட்சியத்தில் தெளிவு, தனி மனித முயற்சி அதுபோல எண்ணற்ற கருத்துக்களை கடந்த 40 ஆண்டுகளாக தூரன் அண்ணு அவர்களும் பாரதியாரைப் போலவே தமது கவிதைகள், கட்டுரைகள், கதைகள் வாயிலாக நாட்டு மக்களுக்கு வழங்கியிருக்கிருர்கள்.

கடைசியாக ஒரு வார்த்தை; எனது மனைவி மீனுட்சி வந்திருக்கிருள். காசியில் எங்கள் திருமணம் ஜெயப்பிரகாஷ் அவர்களின் முன்னிலையில் நிகழ்ந்தது. திருமணம் முடிந்து சென்னை வந்தபோது, தூரன் அவர்கள் எங்களை அழைத்துச் சென்று அவரது இல்லத்தில் விருந்துவைத்து உபசரித்து புத்தகங்கள் எல்லாம் பரிசுகளாகத் தந்து எங்களை மகிழ்வித்தார்கள். அந்தக் காட்சிகள் எல்லாம் இப்போது பசுமையாக என் நினைவில் தெரிகிறது.

அவர் அன்பும் பண்பும் உடையவர். அத்தகைய அவரது ஆன்மா சாந்தி அடைய பிரார்த்திக்கிறேன்.

---

பூக்காரி

வானத்திலே தோன்றும்
மணிவில்லும் கீழிறங்கி
மாநிலத்து நடந்ததுவோ?
வடிவுகொண்ட பேரெழிலோ?

—தூரனின் "இளந்தமிழா" கவிதைநூல்

---



# தூரனின் கதைகளுக்குள் ஒரு தரிசனம்

ஏ. நடராஜன்
இயக்குநர்
கோவை வானொலி நிலையம்

கதை சொல்வதிலே ஏதாவது ஒரு நீதி இருக்க வேண்டும். சிறுகதை என்றால் என்ன? அதற்கு இலக்கணம் என்ன? உருவம், உள்ளடக்கம், உத்தி என்ற தராசை வைத்துக்கொண்டு நான் இங்கே தூரன் அவர்களுடைய கதைகளை ஆராய்ச்சி செய்யப்போவதில்லை.

இங்கே நான் செய்யப்போவதெல்லாம் தூரனுடைய சிறுகதைகள் என்னை எப்படி பாதித்தது, என்னை எப்படி சிந்திக்க வைத்தது. அதை மட்டுமே நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

சிறு கதைகள் அமைக்கும்போது - எப்படி அமைப்பது என்றால்: இசைப் பேராசிரியர் இராமனுதன் அவர்கள் இருக்கின்றார் அவருக்குத் தெரியும்; ஒரே ஒரு மூச்சினைக் கட்டி நான் ஆரம்பிக்கும்போது எந்த ராகமோ அந்த ராகத்திற்கு அனுசரணையான ஸ்வரத்தைதான் செய்ய வேண்டும். ஒரு ஸ்வரம் அதிகமானாலும் கூட வேறு ராகத்தின் இயல்பு அதில் உண்டாகிவிடும்.

அதே போல எந்தக்கருத்தை சொல்ல வந்தோமோ அதை வலியுறுத்தி அதைத் தழுவி சிறுகதைகள் அமைக்க வேண்டும்.

இப்பொழுது சிறுகதைகள் எழுதுகிறவர்கள் அவைகளை எல்லாம் நோக்கமாக வைத்துக்கொண்டு அநேகம் பேர் எழுதுவது கிடையாது. ஆனால் அந்தக் காலத்தில் சிறுகதை எழுதியவர்கள் சிறுகதைக்கு ஒரு நோக்கம் இருக்க வேண்டும் என்று எழுதியிருக்கிறார்கள்.

அந்த வகையில் பார்த்தால் அமரர் தூரனுடைய சிறுகதைகள் நமது சமுதாயத்தினுடைய வாழ்க்கையை நன்றாகப் படம் பிடித்து நமக்குத் தந்துள்ளது.

அவர் சிறுகதை எழுத ஆரம்பித்த காலம் 1938-40 களில் எழுதியிருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அவர் எழுதிய பல கதைகளில் மது விலக்கைப்பற்றி - மதுவின் கொடுமைகளைப்பற்றி மிகத் தெளிவாக அப்போது எழுதியிருக்கிறார்.

வெகுஜன எதார்த்தமாக சராசரியாக பேசுவதுபோல் எழுதியிருக்கிறார். ஒருவன் திருந்துவதற்கு - திருத்துவதற்கு ஏற்றாற்போல் எழுதியிருக்கிறார்.

இரண்டு நண்பர்கள் கடற்கரையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள். "என்ன இவன் இப்படி அயோக்கியத்தனம் செய்து விட்டானே" என்கிறார் ஒருவர். மற்றொருவர் சொல்கிறார்; "தப்பு செய்வது இயற்கைதாம்பா, அவன் திருந்துவதற்கு வாய்ப்புண்டு. "இல்லை இல்லை தப்பு செய்து விட்டால் அதிலிருந்து மீள முடியாது, அவ்வளவுதான்" என்கிறார். அவர்களுக்கு சற்று தூரத்தில் இருந்த ஒரு பெரியவர் "இதற்கு நான் விடை சொல்லட்டுமா" என்று கேட்கிறார். இருவரும் சரி என்கிறார்கள். இந்த முன்னுரையோடு தனது மதுவிலக்குக் கதையை தொடங்குகிறார் தூரன் அவர்கள்.

மேலும் தூரன் அவர்களுக்கு ஓவியத்தில் மிகுந்த ஈடுபாடு இருந்திருக்க வேண்டும். பல கதைகளில் பல இடங்களில் ஓவியத்தைப்பற்றி குறிப்பிடுகின்றார். "ஓவியர் மணி" என்றே ஒரு கதை எழுதியிருக்கின்றார்.

நான் பார்த்தவரைக்கும் அவருடைய கதைகளில் என்ன தெரிகிறது என்றால் ஒரு கவிதையுள்ளம், தேசப்பற்று மிக்க கவியுள்ளம், இந்த நாட்டை சீர்திருத்த வேண்டும் என்று மிகுந்த ஆர்வம் கொண்ட ஒரு தாயுள்ளம்-அதைத்தான் அவர் கதைகளில் நான் தரிசித்தேன். அவருடைய நூல்களைப் படிக்கும் மற்றவர்களுக்கும் தூரனின் இந்த சிறப்புகள்தான் தெரியும் என்று நினைக்கிறேன்.





# குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கும் தூரனின் கதைக் குறட்டை

ஒரு பெரிய செல்வர் வீட்டுத் திருமணத்திற்குச் சென்று நான் மிகப் பெரிய சங்கடத்திற்குள்ளானேன் என்று சொன்னால் நீங்கள் யாரும் எளிதில் நம்ப மாட்டீர்கள். 'திருமணம் என்றாலே குதூகலமான நிகழ்ச்சி அல்லவா? அதிலும் பணம் படைத்தவர் நடத்தும் திருமணத்தைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?' என்று இப்படிக் கேள்விகள் உடனே உங்கள் உள்ளத்தில் உதயமாகிவிடும். மெய்தான் அந்தத் திருமண வைபவத்தில் குதூகலத்திற்குக் குறைவே கிடையாது. எதிர் பார்த்ததற்கும் அதிகமாக இருந்ததென்று தான் சொல்ல வேண்டும்.

நள பாகத்தை எளிதில் தோற்கடிக்கும் அறுசுவை உண்டிகள், முதல்தர இசைவாணர்களின் இசையரங்குகள், பரத நாட்டியம், கும்பகோணத்துக் கொழுந்து வெற்றிலை, நெய்யில் வறுத்தெடுத்த களிப்பாக்கு என்று இப்படி நாளெல்லாம், ஏன் இரவு பதினொரு மணி வரையில், மாறி மாறிக் கிடைத்துக் கொண்டே இருந்தன. எங்கே பார்த்தாலும் விருந்தைப் பற்றியே பேச்சு; அது முடிந்தால் இசை விருந்துப் பேச்சு; பரத நாட்டியப் பேச்சு 'ஆஹா! மிக நல்ல ஏற்பாடு; முதல்தர ஏற்பாடு' என்று வெற்றிலையை மடித்து வாயில் போட்டுக் குதப்பிக்கொண்டே அனைவரும் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

இத்தனை கோலாகலங்கள் இருந்ததால்தான் அன்று இரவு நான் மிகவும் தொல்லைப்பட வேண்டியதாய் விட்டது. பகலெல்லாம் ஒரே களியாட்டம், கண்ணுக்கு விருந்து, செவிக்கு விருந்து, இவை தப்பினால் வயிற்றுக்கு விருந்து என்றிருந்தால் உள்ளத்திலே கவலைக்கு இடமிருக்க முடியுமா? நான் அன்று உறங்கப் போகும்வரையில் இன்ப லோகத்திலே மிதந்து கொண்டிருந்தேன். அதனால் திருமண அமர்க்களமெல்லாம் முடிந்த பிறகு இரவு பதினொரு மணிக்கு எனக்கு என்றும் இல்லாத அளவில் உறக்கம் தள்ளிக்கொண்டு வந்தது.

வந்திருந்தவர்களுக்கெல்லாம் படுக்க வசதியாக ஏற்பாடு செய்திருந் தார்கள். கூடம் முழுவதும் ஒழுங்காக மெத்தைகள் விரிக்கப்பட்டிருந்தன. நான் அப்படியே ஒரு பட்டுத் தலையணையின்மேல் சாய்ந்தேன். அன்றைய நிகழ்ச்சிகளெல்லாம் ஓர் இன்பப் படக்காட்சி போல மனத்தின்முன் தோன்றித் தூக்க மயக்கத்தோடு கலந்து எனக்கு ஆழ்ந்த அமைதியை அளிக்கலாயின.

அந்த நொடியில்தான் என் துன்பம் தொடங்கலாயிற்று.

எனக்குப் பின்புறத்திலிருந்து எருமைக் கடா பெருமூச்சு விடுவதுபோல ஒரு இரைச்சல் கேட்டது. உறுமுவது போலும் குரல் வந்தது. எனக்கு ஐயம் கிளம்பிற்று. யாராவது எருமையையோ அல்லது பன்றியையோ கொண்டு வந்து இப்படி வேடிக்கை செய்யத் தொடங்கி விட்டார்களா என்று முதலில் நினைத்தேன். ஆனால் சற்றுநேரத்தில் உண்மை வெளியாயிற்று. அந்த இரைச்சல் எனக்குப் பக்கத்திலே ஒரு வெண்பட்டு மெத்தையிலே சயனித்திருந்த பேர் வழியின் மூக்கிலோ அல்லது குரல் வளையிலோ எங்கேதானென்று திட்டமாய்க் கூறமுடியாதபடி முரைச்சலிட்டுக் கொண்டு புறப்படுகிறதென்று தெரிய வந்தது.

அது போன்ற முரைச்சலை நான் அதுவரையில் கேட்டதில்லை. மனிதனால் அது போன்ற ஒலி அலைகளை உண்டாக்க முடியுமா என்று எனக்கு இன்னும் ஐயமாகவே இருக்கின்றது. இத்தனை பெரிய மனிதன் குழந்தைகளுக்கு அச்சங் காட்டுவதுபோல ஏன் இப்படி என்னிடம் வந்து நடு இரவிலே 'கொர்முர்' என்று உறுமுகிறான் என்று திரும்பிப் பார்த்தேன். அந்த வேளையில் என் உள்ளத்திலே கொடுஞ்சினம் கொதித்துக் கொண்டிருந்தது. அந்த ஆள் மட்டும் நான் எண்ணியபடி குறும்பு பண்ணிக் கொண்டிருந்தானானால் என்ன செய்திருப் பேனோ சொல்ல முடியாது. ஆனால் அந்த மனிதனோ வாயைத் திறந்துகொண்டு ஆழ்ந்த உறக்கத்திலிருக்கிறான்.

அத்தனை கொர்முர்ரிலும் உறங்குகிறானே மனிதன்! அந்த ஆன்மாவின் திறமையைக் கண்டு எனக்கு வந்த கோபமெல்லாம் எங்கேயோ மறைந்து விட்டது; ஒரு வியப்புணர்ச்சிதான் உள்ளத்திலே நிறைந்து நின்றது. உண்மையில் அவன் கும்பகர்ணஜீயாகத்தான் இருக்க வேண்டுமென்று நான் முடிவு கட்டினேன்.

இங்ஙனம் சிறிது நேரம் அவனை உள்ளூறப் பாராட்டி விட்டுக் கண்ணை இறுக மூடிக்கொண்டு படுத்தேன்; கையை வைத்துக் காதுகளையும் அடைத்துக்

கொண்டேன். என்ன செய்தும் எப்படியோ அந்த உறுமல் எனக்குள்ளே புகுந்து மூளையில் தாக்கிக் கொண்டே இருந்தது.

உறுமலென்றாலும் ஒரே வகையாக வந்து கொண்டிருந்தால் கேட்பவருக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும். நொடிக்கு நொடி நினைக்க முடியாத வெவ்வேறு ஒலி வடிவத்தில் வெளிப்பட்டால் யாரால்தான் அதைப் பொறுத்துக்கொள்ள முடியும்?

குர் ர் ர் ர் . . . . என்று ஆரோகணம்; இஸ் ர் . . இ . . ஸ் ஸ் . . அஹ் ஹ என்று இப்படி அவரோகணம். மறுகணத்திலே கரியால் ஓடும் பஸ்போல டப டப என்று கிளம்பி டபக்கென்று நின்று விடுகிறது. பிறகு திடீரென்று திருப்பதி ஆண்டவன் கோயில் குரங்கு போல உர் என்று தொடங்குகிறது, உச்சஸ்தாயிக்குச் சென்று பலூன் வெடிக்கிறது போல ஓலமிட்டு அடங்கி விடுகிறது.

இப்படி அடங்கும்போதுதான் வேதனை பொறுக்க முடிவதில்லை. அடுத்த விநாடியில் என்ன புதிய அரக்க வடிவிலே புறப்படப் போகிறதோ என்று அஞ்சி உள்ளம் வெடித்துப் போவது போல அடித்துக் கொள்ளுகிறது.

என்னால் கொஞ்சமும் பொறுக்க முடியவில்லை. இவர் போன்ற ஆட்களை எதற்காகத் திருமணத்திற்கு அழைக்கிறார்கள் என்று மாப்பிள்ளை, பெண் வீட்டார்களைச் சீறி வைது கொண்டிருந்தேன். அதனால் ஒரு பயனும் ஏற்படவில்லை.

பிறகு சற்று உரத்த குரலில் 'ஏன் காணும் இப்படி உறுமுகிறீர்?' என்று சொன்னேன். அத்தனை நாத பேதங்களுக்கும் ஈடு கொடுக்கிற பேர்வழி எனது முணவலுக்கா செவிசாய்க்கப் போகிறார்? இது கூடத் தெரியவில்லையே என்று என்னை நானே கடிந்துகொண்டேன்.

அந்த வேளையிலே மனதை அடக்கும் ஆற்றலைப் பற்றி நினைவு வந்தது. யோகிகள் தங்கள் மனதை அடக்கி உலகத்தையே மறந்து விடுவதைப்பற்றி எண்ணிப் பார்த்தேன். உள்ளத்தை ஏதாவதொன்றில் ஆழ்ந்து ஈடுபடச் செய்துவிட்டால் அருகில் என்ன நடந்தாலும் தெரியாதென்று சொல்லுகிறார்கள். இடிமுழக்கங்களும் செவியில் பாயாது என்கிறார்கள். யாரோ ஒரு தத்துவ ஞானிக்குப் பகைவர் நகரிற் புகுந்து சூறையாடியது கூடத் தெரியவில்லையாம். வால்மீகருக்குத் தம்மைச் சுற்றிப் புற்று வளர்ந்து மூடியதே புலனாகவில்லையாம்.

ஆமாம், அவையெல்லாம் மெய்யென்றாலும் என்னுடைய மனம் அப்படி அடங்கவேணுமே! அவர் அப்படிச் செய்தார், இவர் இப்படிச் செய்தார் என்று பேசி என்ன பயன்?

அந்த மனிதனை எழுப்பி அமைதியாக விளக்கிச் சொன்னால் என்ன என்று ஒரு எண்ணம் உதயமாயிற்று. ஆமாம், அதுதான் நல்லது என்று அவரை எழுப்பலானேன். ''ஐயா; உங்களைத்தானையா, ஏன் இப்படி குறட்டையிட்டு மற்றவர் தூக்கத்தைக் குலைக்கிறீர்?'' என்றேன்.

அவர் மெதுவாக விழித்து எழுந்து உட்கார்ந்தார். கண்ணைப் பிசைந்து விட்டுப் பார்த்தார். வாய் கிழிந்து போகுமோ என்னவோ என்று அஞ்சும்

படியாக அண்ணுந்து ஆ . . ஹ் . . என்று ஒரு நீண்ட கொட்டாவியும் விட்டார் பிறகுதான் அவர் மூளைக்கு எனது கேள்வி எட்டியிருக்கும் போலிருக்கிறது, ''என்ன?'' என்று பதில் வினு எழுப்பினுர். ''ஏனையா இப்படிக் குறட்டை யிட்டுத் தொந்தரவு செய்கிறீர்?'' என்று இரங்கிய குரலில் கேட்டேன்.

''நானு குறட்டை போடுகிறேன்? சும்மா தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்பி நடு ராத்திரியிலே ஏன் வாயைப் பிடுங்குகிறீர்? கல்யாண விருந்து ஆட்டி வைக்கிறதாக்கும்'' என்று பேசிவிட்டு மறுபுறம் திரும்பி உடனே படுத்துவிட்டார். நான் திகைத்துப் போனேன்; என்ன பதில் கூறுவது என்று தோன்றவில்லை. குறட்டை போடுகிறவர்களுக்குத் தாங்கள் செய்யும் சப்த ஜாலங்களைப் பற்றித் தெரிகிறதே இல்லை; பிறர் சொன்னுலும் அவர்கள் நம்பமாட்டார்கள் என்று எனக்குத் தோன்றிற்று.

அதனுல் அவருடன் வாதாடுவதைவிட அவர் உறங்குமுன்பே நானும் உறங்கிவிட்டால் ஒருவாறு தொல்லை தீர்ந்து விடும் என்று எண்ணி மறு பேச்சுப் பேசாமல் சாய்ந்தேன். ஆனுல் அந்த மகானுபாவன் படுத்ததும் நான்கு மூச்சுத்தான் நேராக வந்தன. மறுபடியும் பழையபடி குறட்டை தொடங்கிவிட்டது.

அவரை மேலும் எழுப்புவதில் ஒரு பயனும் ஏற்படாது என்று தோன்றியதால் வேறு எங்காவது இடம் பார்த்துக் கொள்ளலாம் என்று கிளம்பினேன். ஒரே இருட்டு, எங்கே பார்த்தாலும் மனிதர்கள் படுத்துக் கொண்டிருக்கிருர்கள். மின்சார விளக்கைப் போடுவதற்கும் இடம் தெரிய வில்லை. ஓர் இரண்டடி எடுத்து வைத்ததும் யாரோ ஒருவர் காலை மிதித்து விட்டேன். அதனுல் அவர் என்னவோ முணுமுணுக்கத் தொடங்கி விட்டார். இனி எச்சரிக்கையோடு நடக்கவேண்டுமென்று அடிமேல் அடி வைத்துப் பம்பிப் பம்பி நகரத் தொடங்கினேன். அந்த நிலையில் யாரோ ஒருவர் விழித்துக் கொண்டார் போலிருக்கிறது. ''டேய்! யாரது? ஏன் இப்படி இருட்டிலே பதுங்குகிருய்? கல்யாண வீட்டிலே முடிச்சவிழ்க்கவா?'' என்று முழங்கத் தொடங்கினுர்.

மற்றவர்களும் விழித்துக்கொண்டால் நிலைமை ஆபத்தாய்விடுமே என்று சட்டென்று மறுபடியும் பழைய இடத்திற்கே வந்து படுத்துவிட்டேன். 'சரி' இன்று எனக்கு வேறு வழியில்லை. இங்கேயே கிடந்து பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான் என்று முடிவு செய்து கொண்டேன். ஓர் இரவுக்கே இந்தப் பெருந்தொல்லையென்ருல் அந்த மனிதன் வீட்டிலே மனைவி மக்கள் ஆண்டு முந்நூற்றறுபது நாளும் இதை எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்கிருர்களோ என்று அவர்கள்பால் பரிவு கொள்ளலானேன்.

எவ்வளவு நேரம் நான் அவர்களுடைய அவல நிலைமையைப் பற்றி எண்ணிக்கொண்டிருந்தேனே தெரியாது. எப்படியோ அந்த எண்ணத்தோடே உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டேன். மறுநாட் காலையில் யாரோ ஒருவர் அதட்டி அதட்டி எழுப்பியிராவிட்டால் எப்பொழுது விழித்திருப்பேனென்று திட்ட மாகச் சொல்ல முடியாது. ''ஒய், யாரையா நீர்? மணி எட்டாகியும் இப்படிக் குறட்டை போட்டுக் கொண்டு தூங்குகிறீரே; எழுந்திரும்'' என்று அதட்டும் குரல் காதில் புகுந்து என்னைத் திடுக்கிடச் செய்தது. எழுந்து சுற்று முற்றும் பார்த்தேன். அப்பொழுது உறங்கிக்கொண்டிருந்தவன் நான் ஒருவன் தான்!

வே. அப்பாக்குட்டி
வேதராண்யம்

# எனது நோக்கில் அமரகவி தூரன்

நான் கோவை ஸ்ரீ இராமகிருஷ்ண வித்யாலயத்தில் 1934-ஆம் ஆண்டில் படிப்பதற்காகச் சேர்ந்தேன். அப்போது வித்யாலயம் போத்தனூரில் இருந்தது. சுமார் 40 மாணவர்கள் இருந்தோம்.

திரு. பெரியசாமி தூரன் அவர்கள் அங்கு ஆசிரியராகப் பணியாற்றி வந்தார்கள். அவர்கள் அப்போது மாணவர்களிடத்திலே காட்டிய பெரும் பரிவு ஊக்கம், கண்டிப்பு இவை எங்களை உருவாக்குவதிலே சிறப்பாக இடம் வகித்தது.

எங்களிடத்தில் மிக அன்பாக வாத்ஸல்யபாவத்துடன் நடந்து கொள்வார்கள். அப்போது படித்த மாணவர்களின் சராசரி வயது 10, 12 இருக்கும். வீட்டை விட்டுப் பிரிந்து வந்திருக்கிறோம் என்ற உணர்வு தோன்றாமல் எங்களுக்கு பெற்றோர்களின் அன்பை ஈடுசெய்யும் வகையில் ஊக்குவிப்பார்கள். அதேசமயம் நாங்கள் எங்கள் படிப்பில் கவனம் செலுத்தவும் மற்ற கடமைகள் செய்வதிலும் குறை ஏற்படாவண்ணம் கண்டிப்பும் காட்டுவார்கள்.

இரவு தினந்தோறும் நல்ல இலக்கிய நூல்களிலிருந்து கதைகள் சொல்வார்கள். அதில் சிறப்பாக 'விக்டர் ஹியூகோ' வின் 'LAW MISERABLE' என்ற சரித்திர நாவலை தொடர்ச்சியாக சொல்லி வந்தது பசுமையாகவே இன்னும் என் நினைவில் நிற்கிறது. இடையில் சில காலம் அவர்கள் ஆசிரியர் பயிற்சி பெறுவதற்காக பணியிலிருந்து விலகிச் சென்று மீண்டும் வித்யாலயத்திற்கு வித்யாலயம் பெரியநாயக்கன்பாளையம் சென்றபிறகு வந்து தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.

இந்த சமயங்களிலெல்லாம் ஈரோட்டில் அவர்கள் நடத்திவந்த இலக்கிய சங்கங்கள் பற்றியும் புதுமைப்பித்தன், சாத்தூர் யோகி இவர்களுடைய கவிதைகளைப்பற்றி யெல்லாம் சொல்வார்கள்.

வித்யாலயத்தில் கையெழுத்துப் பத்திரிகையாக நடந்து வந்த பாலபாரதி' என்ற பத்திரிகையில் எங்களை கட்டுரைகள், கவிதைகள் எழுதவும் ஊக்குவிப்பார்கள்.

பின்னால் நான் வித்யாலயப் படிப்பை விட்ட பிறகும் ஊரில் வந்து குருகுலப் பணியைத் தொடங்கி நடத்தி வந்த காலத்தில் என் தந்தை சர்தார் வேதரத்னம் அவர்கள் காலமானபின் தமிழ் வளர்ச்சிக் கழகத்தில் ஒரு பொதுக் குழு உறுப்பினராக ஆன சந்தர்ப்பத்திலும் எனக்கு மிகவும் ஊக்கத்தைக் கொடுத்து வந்தார்கள்.

எங்கும் ஆங்கில மோகத்தினால் சிறு குழந்தைகள் ஆங்கிலக் கல்வியை நாடிச் செல்வதைப் பார்த்து குருகுலத்தின் மூலம் குழந்தைகள் மூலம் மழலையர் பள்ளி ஒன்றும் தோற்றுவித்தோம். அக்குழந்தைகள் பாடுவதற்காக எளிய நடையில் குழந்தைகளுக்கான பாடல்கள் வேண்டுமென்று கேட்டுக் கொண்டேன். உடனே அவர்கள் மகிழ்ச்சியுடன் 'மழலை அமுதம்' என்ற தலைப்பில் சிறு குழந்தைகளுக்கான பாடல் தொகுப்பு ஒன்று எழுதிக் கொடுத்தார்கள். அப்புத்தகத்தையும் குருகுலத்தின் மூலம் வெளியிடவும் அனுமதி கொடுத்தார்கள்.

இந்த வகையில் அவர்கள் தமிழ் மீது கொண்டிருந்த ஆழ்ந்த பற்றும் குழந்தைகளுக்கு பயன்படும் வகையில் நூல்கள் தயாரிக்க வேண்டும் என்கின்ற தணியாத ஆவலும் கொண்டவர்களாக இருந்தார்கள்.

அவர்கள் என்றும் ஒரு சிறந்த ஆசிரியராகவே வாழ்ந்து மறைந்த பின்னும் தனது சிறந்த இலக்கிய படைப்புக்களால் ஒப்புயர்வற்ற ஆசிரியராகவே திகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ●



கே. எஸ். பெரியசாமி
கொளாநல்லி-638155

# என்
# உயிர்த் தோழன்

எனது உயிர்த் தோழன் ம. ப. பெரியசாமித் தூரனும் நானும் எங்கள் பிள்ளைப்பிராயம் முதல் நெருங்கிப் பழகியவர்கள். நாங்கள் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் காலத்தில் அவர் ஈரோட்டிலும், நான் கொடுமுடியிலும் படித்துவந்தோம்; ஆனால் விடுமுறை நாட்களில் ஒன்றாக இருப்பது வழக்கம். தூரனுக்குக் காவிரியாற்றுக் கரையில் உட்கார்ந்து இயற்கை அழகைக் கண்டு களிப்பதில் மெத்த விருப்பம். காவிரியாறு எங்கள் ஊருக்கு வெகு அருகாமையில் ஓடுவதால் அவர் பெரும் பகுதியான விடுமுறை நாட்களில் என் வீட்டிற்கு வந்து இருப்பதுண்டு. நாங்கள் காவிரிக் கரையில் உட்கார்ந்து கொண்டு வீண் அரட்டை அடிக்கமாட்டோம். 'தேசப்பற்று,' 'தாய் மொழிப்பற்று' இவற்றை வளர்க்கும் முறையில்தான் எங்கள் பேச்சு இருக்கும்.

அந்தக் காலத்தில் எங்களுக்கு ஒரு முன்னோடி கவிஞர் பாலபாரதி சா. து. சு. யோகி என்பவர் பாரதியாருடைய பாடல்களை உரத்த குரலில் பாடுவார். அதைக் கேட்டு நாங்களெல்லாம் பாரதியாருடைய பக்தர்களானோம். எல்லோரையும்விட தூரனுக்கு பாரதியாருடைய பாடல்களில் அதிக ஈடுபாடு. பாரதியாரைப்போலத் தானும் பாடல்கள் எழுதவேண்டும் என்ற ஆசையும், ஆர்வமும் கொண்டிருந்தார்.

1928-29ம் ஆண்டுகளில் எங்களுடைய கல்லூரிப் படிப்புச் சென்னையில் மாகாணக் கல்லூரியில் தொடங்கியது. அங்குள்ள ' விக்டோரியா ஹாஸ்டலில் ' தங்கியிருந்தோம். அப்பொழுது தேச பக்தியிலும், இலக்கிய வளர்ச்சியிலும் பெரிதும் நாட்டம் கொண்டிருந்த மாணவர்களில் பலர் ஒன்று சேர்ந்து, '' வனமலர்க் கழகம் '' என்ற பெயரில் ஒரு சங்கம் தொடங்கினோம். சென்னை, மதுரை, திருச்சி முதலிய நகரங்களில் படித்துக்கொண்டிருந்த மாணவர்கள் பலர் அச்சங்கத்தில் உறுப்பினர்களாக இருந்தார்கள். அந்தச் சங்கத்தின் வாயிலாக ' பித்தன் ' என்ற ஒரு மாதச் சஞ்சிகை வெளியிடப்பட்டது. ஆரம்பத்தில் அதன் பிரதிகள் ' சைக்லோஸ்டையில் ' செய்து அங்கத்தினர் மத்தியில் விநியோகம் செய்யப்பட்டது. அதில் ' தூரன் ' என்ற புனை பெயரில் ம.ப. பெரியசாமி கட்டுரைகள், கவிதைகள், கதைகள் எழுதத் தொடங்கினார்.

பிறகு அதிகப் பிரதிகள் தேவைப்பட்டதால் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் அச்சுக்கூடமாகிய ' சாது ' அச்சுக்கூடத்திலே அது அச்சிடப்பட்டது.

ஒருநாள் நானும், தூரனும் ' சாது ' அச்சுக்கூடத்திற்குச் சென்றபொழுது திரு. வி. க. அவர்கள் எங்களைப் பார்த்து சுப்பிரமணிய பாரதியார் 1905வது ஆண்டுமுதல் 1921 வரை (அவர் சாகும்வரை) சுதேசமித்திரன் நாளிதழ்களிலும் வாரம் மும்முறை வெளியிடப்பட்ட இதழ்களிலும் பல கவிதைகள், கதைகள், கட்டுரைகள், அரசியல் விமர்சனங்கள் எழுதி இருக்கிறார். அவை புத்தக உருவத்தில் வெளிவராமல் மறைந்து கிடக்கின்றன. நீங்கள் முயற்சி செய்தால் அவற்றை உங்கள் பித்தன் பத்திரிகை மூலம் வெளியிட முடியும். அதற்கு இன்றைய சுதேசமித்திரன் ஆசிரியராயிருக்கும் திரு. சி. ஆர். சீனிவாசன் அவர்களிடம் அனுமதி வாங்கிக் கொடுக்கிறேன். நீங்கள் உங்கள் விடுமுறை நாட்களில் சுதேசமித்திரன் ஆபீசில் இருக்கும் பழைய பிரதிகளில் இருந்து பெயர்த்தெடுத்து உங்கள் பத்திரிகையில் வெளியிடுங்கள் '' என்று சொன்னார்.

அதை கேட்டவுடன் தூரன் '' நான் இன்றே அவரிடம் சென்று அனுமதி பெற்று வருகிறேன். தாங்கள் எனக்கு ஒரு அறிமுகக் கடிதம் கொடுங்கள்'' என்று கேட்டு வாங்கிக்கொண்டு அவரிடம் சென்று அனுமதியும் பெற்று வந்தார். அதில் அவர் எங்களுக்கு விதித்த நிபந்தனை ஒன்று. ''அங்கிருந்து பிரதிகளை வெளியில் எடுத்துச் செல்லவோ, கிழித்துக்கெண்டு போகவோ கூடாது அந்த அறையிலேயே உட்கார்ந்து வேண்டியவற்றைத் தேடி எடுத்து எழுதிக் கொள்ளுங்கள்'' என்பதுதான்.

அதற்கு அடுத்த நாளிலிருந்து தூரன் அந்தப் பணியில் முழுமூச்சுடன் இறங்கிவிட்டார். ஏராளமான பிரதிகள் அங்குள்ள ஒரு அறையில் மலைபோலக் குவிக்கப்பட்டிருந்தன, காகிதம் பழுப்பேறி நைந்து துர்வாடை வீசும் அந்தக் குவியலுக்குள் பாச்சியும், பல்லியும், புழுவும், பூரானும் குடிகொண்டு இருந்தன, அவர் எடுத்துக் கொண்ட, அந்தக் காரியத்தை மாதக் கணக்கில் அவர் செய்யவேண்டியிருந்தது. பல நாட்கள் நானோ அல்லது டாக்டர் ஈரோடு எல். கே. முத்துசாமியோ உடன் சென்று அவருக்கு உதவுவதுண்டு. நாங்கள் யாரும் உதவிக்குச் செல்லாவிட்டாலும் தூரன் மட்டும் தனியாகவே சென்று அந்த அரும்பணியை செய்து கொண்டிருப்பார்,

அவர் ''பாரதியாரைத் தேடினேன்'' என்கிற ஒரு கட்டுரையில் இவ் விவரங்களை அவரே எழுதி இருக்கிறார். அதில் ''நான் தேடி அரிதாகச் சேர்த்த பாரதியாரின் கதை, கட்டுரைகளைச் சுமார் 700 பக்கம் கொண்ட ஒரு நூலாக 'பாரதி தமிழ்' என்ற பெயரில் எழுதி வெளியிட்டேன். நான் செய்த சேவையைப் பாராட்டி தமிழ் எழுத்தாளர் சங்கம் எனக்கு ஒரு பொற்பதக்கம் அளித்துச் சிறப்பித்தது. நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நான் இந்தப் பணியை மேற்கொண்டிராவிடில் பாரதியாருடைய இலக்கியப் படைப்பில் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் மறைந்தே போயிருக்கும் என்பது பலருடைய கருத்தாகும்''.

வனமலர் கழகத்தில் ஒரு தீவிர அங்கத்தினராக இருந்தவர் கோபி கரட்டடிபாளையம் கே. எம். இராமசாமி அவர் கோபி உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் பொறுப்பில் இருந்த பொழுது தூரனையும் அந்தப் பள்ளியில் ஆசிரியர் பணி செய்ய அழைத்துச் சென்றுவிட்டார்.

கோவை மாவட்டத்தில் பழம் பெரும் தேசபக்தரான ஐயா தி. சு. அவிநாசிலிங்கம் அவர்கள் ஆரம்பித்த ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயம் முதலில் போத்தனூரில் ஒருவாடகைக் கட்டிடத்தில் துவக்கப்பட்டது. அப் பொழுது கோபியில் ஆசிரியராக இருந்த தூரனை நானும், திரு. சி. சுப்பிரமணிய மும் வித்தியாலயத்தில் ஆசிரியராகவும், வார்டனாகவும் பணியாற்ற அழைத் துச் சென்றோம்.

அங்கு ஓராண்டு ஆசிரியர் பணிக்குப் பிறகு அவர் சென்னையை அடுத்த சைதாப்பேட்டையில் ஆசிரியர் பயிற்சியில் சேர்ந்து எல். டி. பட்டம் பெற்றார். மேற்சொன்ன வித்தியாலயம் பெரியநாயக்கன்பாளையத்திற்கு மாற்றப் பட்டது. அங்கு அது உயர்நிலைப் பள்ளியாக வளர்ச்சி அடைந்தது. அதற்குத் தலைமை ஆசிரியர் பொறுப்பை தூரன் ஏற்று 15 வருட காலம் அங்குபணியாற்றினார்.

அவர் பெரியநாயக்கன்பாளையம் இராமகிருஷ்ண வித்தியாலயத்தில் பணியாற்றும் காலத்தில் தமிழில் சிறுகதை, கவிதை கர்நாடக சங்கீதத்தில் பல சாகித்யங்கள் இயற்றினார். எனக்குத் தெரிந்தமட்டிலும் அவர் எந்த ஒரு சங்கீத வித்வானிடத்திலும் சிஷ்யனாக இருந்து சங்கீதம் முறையாகக் கற்றுக்கொண்ட தாகத் தெரியவில்லை. அந்தத் திறமை அவருக்கு இயற்கையாகவே அமைந்தது என்றுதான் சொல்லவேண்டும்.

பொள்ளாச்சித் தொழிலதிபர் அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின் அருமைத் தந்தையார் பெருந்தகை திரு. நாச்சிமுத்துக் கவுண்டர் அவர்கள் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களுடன் கலந்து பேசி கோவையில் அவருக்குச் சொந்தமான ஜெயில் ரோடிலிருக்கும் ஏ. பி. டி. காரியாலயத்தில் ஒரு பகுதியில் ''பிரசிடென்சி பிரிண்டர்ஸ்'' என்ற பெயரில் அச்சுக்கூடம் அமைத்தார்.

ஆங்கிலத்தில் சென்னையிலிருந்து வெளியாகும் தினசரிப் பத்திரிகையான ''ஹிந்துவை''ப் போல கோவையிலிருந்து ஒரு தமிழ் தினசரிப் பத்திரிகை வெளிவர வேண்டுமென்பது அவருடைய ஆசையும், பெரு நோக்கமுமாகும். அவருடைய ஆசை நிறைவேறுவதற்கு ஆரம்பத்தில் ஒரு வாரப்பத்திரிகை நடத்து வது என்று முடிவு செய்யப்பட்டது.

அம்முடிவின்படி ''காலச் சக்கரம்'' என்ற ஒரு வாரப் பத்திரிகை வெளியிடப்பட்டது. அந்தப் பத்திரிகைக்குத் தூரன் ஆசிரியர். நான் உதவி ஆசிரியர். அதை நடத்துவதில் இங்கிலாந்திலிருந்து ஆங்கிலத்தில் வெளியிடப்படும் ''டைம்ஸ்'' என்ற பத்திரிகையை முன் உதாரணமாகக் கொண்டு காலச் சக்கரத்தை நடத்தவேண்டுமென்று திட்டம்போட்டு, அதில் விளம்பரங்கள் எதுவும் வெளியிடுவதில்லை என்றும், சந்தா வசூலின் மூலமே அது நடத்தப்பட வேண்டுமென்பதும் எங்கள் திட்டம்.

பெரியநாயக்கன்பாளையத்தில் தலைமை ஆசிரியர் பொறுப்பையும் வகித்துக் கொண்டு தூரன் இந்தப் பத்திரிகை ஆசிரியர் பொறுப்பையும் நிறைவேற்றுவதில் மிகவும் சிரமப்பட்டார்.

அய்யா அவிநாசிலிங்கம் அவர்கள் அன்று சென்னை மாகாண அமைச்சரவையில் கல்வி அமைச்சராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். ஆங்கிலத்திலுள்ள என்சைக்லோபீடியா (encyclopedia) என்னும் நூலைப் போல தமிழிலும் ஓர் நூல் வெளியிடத் திட்டமிட்டார். அதற்காக 'தமிழ்' வளர்ச்சிக் கழகம்' என்ற ஒரு ஸ்தாபனம் உருவாயிற்று. அதன் மூலம் கலைக்களஞ்சியம் என்ற பெயரில் அந்த நூல் பத்து தொகுதிகளாக வெளியிடப்பட்டது. அந்த அரும் பெரும் காரியத்தைச் செய்து முடிக்க தூரன் ஒருவர்தான் தகுதியுள்ளவர் என்று அந்தத் தொகுப்பிற்கு தலைமையாசிரியராக அவர் நியமிக்கப்பட்டார். எனவே அவர் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலய தலைமை ஆசிரியர் பதவியிலும், காலச் சக்கரத்தின் தலைமை ஆசிரியர் பதவியையும் துறந்து சென்னை சென்று அங்கேயே குடியும் குடித்தனமுமாகத் தங்கவேண்டியதாயிற்று. பெரியவர்களுக்கான கலைக்களஞ்சியம் பத்து தொகுதிகளும் வெளிவந்தபிறகு, குழந்தைகள் கலைக்களஞ்சியம் பத்து தொகுதிகளுக்கும் அவரே தலைமை ஆசிரியராகவும் நிர்வாகஸ்தராகவும் பொறுப்பேற்று மிகக் கடுமையாக உழைத்தார்.

அந்த நிலையிலும் கூட அவர் சும்மா இருக்கவில்லை. 'பாரதி வரலாறு' என்ற நூலை அவர் வாய்மொழியாகச் சொல்ல பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள் எழுத்தர் ஒருவரை அவர் வீட்டுக்கு அனுப்பி அவர் வாய்மொழியாகச் சொல்வதை எழுதும்படி ஏற்பாடு செய்தார்கள். அவருடைய அந்திம நாட்களில் அவரைப் பார்க்கச் சென்ற பலரிடம் என்னை அங்கே வரும்படி அவர் சொல்லி அனுப்பியதுண்டு. ஆனுல் நானே முதுமையின் கொடுமையால் கண்பார்வை மங்கல் போன்ற பல நோய்களின் காரணமாக அவரை சென்று பார்க்கமுடியாமல் போயிற்று. சென்ற ஜனவரி மாதத்தில் ஒருநாள் அவர் தனது பூதவுடலைத் துறந்து அவரது வழிபடு தெய்வமான முருகனடி சேர்ந்துவிட்டார்.

சென்னை, கோவை, ஈரோடு - ஏன் டில்லியிலும்கூட அவரது மறைவுக்கு அஞ்சலிக் கூட்டங்கள் நடந்தன. அதில் பல அன்பர்கள் அவருடைய அருமை பெருமைகளைப் போற்றி புகழ்ந்து பேசினுர்கள். அதை நான் வானெலியில் கேட்டதுண்டு. பாரதி, கண்ணம்மா என் குழந்தை என்ற பாடலில் ''மெச்சியுனை ஊரார் புகழ்ந்தால் என் மேனி சிலிர்க்குதடி'' என்று பாடினுரே அந்த உணர்ச்சிதான் அப்போது எனக்கு ஏற்பட்டது.

வாழிய செந்தமிழ்! வாழ்க தூரன் நாமம்!! ○



# 20 ஆண்டுகளுக்கு முன்பே எழுதினேன்

பகீரதன்
ஆசிரியர் : ஓம்சக்தி

**20 ஆண்டுகளுக்கு முன்பு அக்டோபர் 1968-ல் சத்ய கங்கை இதழில் அதன் ஆசிரியர் திரு. பகீரதன் எத்தனை நளினமாக தாரனைப் பற்றி எழுதியுள்ளார் என்பதைப் பாருங்கள்.**

*இந்த ஆண்டு இராமலிங்கர் பணிமன்றத்தின் சார்பில் திருவருட்பா திருநாள் ஒருவாரம் சென்னையில், சென்ன மல்லீஸ்வரர் கோயில் அநுபூதி மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடை பெற்றது.*

''இந்த வருஷம் நான்தான் நடத்துவேன்'' என்று சண்டை பிடித்து 'விழாவை' திரு. என். மகாலிங்கத்திடமிருந்து 'தட்டிக் கொண்டு போய்'சிறப்பாக நடத்தினவர் மணலி திரு. ராமகிருஷ்ண முதலியார்.

மணலி திரு. ராமகிருஷ்ண முதலியாருக்கு எதிலுமே போட்டி மனப்பான்மை. நல்ல காரியம் செய்வதில் அவர் மற்றவர்களுடன் எப்போதுமே போட்டி போடுவது வழக்கம். திரு அருட்பா திருநாள் எப்போது வரப் போகிறது என்று காத்துக்கொண்டிருந்து, அதைப்பற்றி முன்னதாகவே திரு. மகாலிங்கத்திடம் போய் 'அதெல்லாம் நீங்கள் இந்த ஆண்டு திருவருட்பா திருநாளை வேறிடத்தில் நடத்த முடியாது-அநுபூதி மண்டபம் என்று எதற்காக நான் ஒன்று கட்டி வைத்துக் கொண்டிருக்கிறேன்?' என்று ஒரே போடாகப் போட்டு விட்டார் திரு மணலி ராமகிருஷ்ண முதலியார்.

அனுபூதி மண்டபம் பாக்யம் செய்த மண்டபமாயிற்று. சென்ன மல்லீசுவரரும், சென்ன கேசவப் பெருமாளும் பெரும் பேறு செய்த வர்களானுர்கள். விழா ஏழுநாளும், திருவருட்பா விரிவுரைகளைக் காது குளிரக் கேட்டு நெஞ்சம் குளிர்ந் தார்கள்.

திருவாளர்கள் எம். பக்தவத் சலம், பேராசிரியர் பாலூர் கண்ணப்ப முதலியார் சு. பாலசந்திரன், தவத் திரு.குருகுலம் அழகரடிகள், அ. சுந்தர மூர்த்தி, டாக்டர் திருஞானசம்பந்தம் சி. பாலசுப்பிரமணியம், கா. அப்பாத் துரை, தட்சிணுமூர்த்தி முதலியார் எம்.ஏ மாணிக்கவேலர், திருமதி ஜெய குமாரி பாஸ்கரன், டாக்டர் வி. ஆ. தேவசேனுபதி, இரா. மாணிக்க வாசகம், பேராசிரியர் மு. ஆலால சுந்தரம் செட்டியார், கு. அழகிரிசாமி சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம் தீபம் ஆசிரியர் நா. பார்த்தசாரதி ஆகிய பேரறிஞர்கள் விழாவில் தலைமை தாங்கியும், சிறப்புரை நல்கியும், வள்ளலார் பற்றி அருமை யாகப் பேசினுர்கள்.

ஏழு நாளும் அருட்பா அரசு திரு. நா. கிரிதாரிபிரசாத் அவர்களின் விரி வுரைகள் அனுபூதி மண்டபத்தின் மூலைமுடுக்குகளில் எல்லாம் முழங்கி எதிரொலித்தன.

ஏழாம்நாள், ஒவ்வொரு ஆண்டும் தமிழுக்குச் சிறப்பாகத் தொண் டாற்றிய ஒருவரைப் பாராட்டி மகிழும் வழக்கம் போல, இந்த ஆண்டும் ஒரு அடக்கம் நிறைந்த உத்தமத் தமிழன்பரைப் பாராட்டிப் பொன்னுடை போர்த்தி மகிழ்ந்தார் கள். அவ்வாறு பாராட்டுப் பெற்ற அன்பர் கவிஞர் பத்மபூஷண் திரு பெரியசாமி தூரன் அவர்கள்.

திரு தூரன் எவ்வளவோ கவிதை கள், சாஹித்யங்கள் எழுதியிருக் கிருர்.

திரு. ம.பொ.சி. சொன்னதுபோல் இந்திய தேசத்திலேயே பாரத ஆட்சி மொழியான ஹிந்திக்குகூட இன்னும் கலைக்களஞ்சியம் ஏற்படவில்லை ஆனுல் தமிழுக்குத்தான் ஏற்பட்டிருக்கிறது. அதுவும் ஆங்கில என்ஸைக்ளோ பீடியாவுக்கு நிகராக ஏற்பட்டிரு கிறது. அச்சு-அமைப்பு, விஷயச் சிறப்பு, தொகுப்பு-முறை எல்லா வற்றிலும் 'பிரிட்டிஷ் என்ஸைக்ளோ பீடியா'வுக்கு நிகராக நம்முடைய தமிழ் கலைக்களஞ்சியம் அமைந்திருக் கிறது.

அதற்கு மூலகாரணம் திரு. பெரியசாமி தூரனுடைய ஒப்பற்ற உழைப்பும் கவனமுமே ஆகும். 'மெய்வருத்தம் பாரார்; கண் துஞ் சார், கருமமே கண்ணுயினர்'' என்கிருர்களே அப்பேர்ப்பட்ட பணியை திரு தூரன் கலைக்களஞ் சியம் உருவாவதற்குச் செய்திருக் கிருர். ஒரு நாள் அல்ல; பல ஆண்டு களாகச் செய்திருக்கிருர்.

இராமலிங்கர் பணிமன்றத்தின் செயலாளர் திரு ஔவை நடராஜன் சொன்னது போல கலைக் களஞ்சியமே திரு. தூரனுக்கு 'நெடும் புகழாய்' அமைந்திருக்கிறது.

சாதாரண பத்மபூஷண் விருது மட்டும்தானு இந்த இமாலயப்பணிக் காக தூரனுக்குக் கொடுக்கலாம்? பாரதரத்னுவுக்கும் மேலாக ஏதாவது பட்டம் இருந்தால் தடையின்றிக் கொடுக்கலாம். அப்படிக் கொடுக்கப் படுவதற்கு அந்தப் பட்டங்கள் பாக்யம் செய்திருக்க வேண்டுமே!



22-12-1972-ல் சென்னையில் தமிழக நல்வாழ்வுத்துறை அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கும், பத்மபூஷண் திரு. ம. ப பெரியசாமித் தூரன் அவர்களுக்கும் மன்ற வாயிலில் இனிய வரவேற்பு.

படத்தில் திரு. டி. கே. சண்முகம், திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை, திரு. ம. பொ சி. திரு.எம். ஏ எம். ராமசாமி ஆகியோர்.



1966 பழனியில் நடந்த கவிஞர் தூரன் அவர்களின் 60 -ம் ஆண்டு நிறைவு விழா - சஷ்டியப்த பூர்த்தியில் தூரன் தம்பதிகளோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் உள்ளார். திருமதி தூரன் அவர்களுக்குப் பக்கத்தில் கண்ணாடி அணிந்து உள்ளவர் கோவை ராமகிருஷ்ண வித்யாலய உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியராக இருந்தவரும், அருட்செல்வர் அவர்களிடம் நீண்ட காலம் கல்விச் செயலாளராகவும், பொள்ளாச்சி நாச்சிமுத்து பாலிடெக்னிக்கில் கரஸ்பாண்டெண்ட்டாகவும் பணியாற்றிய திரு. கு. வெங்கடாசலம் அவர்கள். திருமதி தூரன் திரு. கு. வெங்கடாசலம் அவர்களின் சகோதரியாவார்.



பேராசிரியர் அமுதன்

# தூரனுடன் ஓர் சந்திப்பு

பேரறிஞர் பெர்னுட்ஷாவுடன் ஒருமணி நேரம் உரையாடுவது, பலநாள் அறிவுப் பஞ்சம் ஒருநாளில் தீர்ந்தது போலிருக்கும் என்பார்கள்.

திரு. தூரனிடம் உரையாடித் திரும்பிய போது எனக்கும் அந்த நினைவும் நிறைவும் எழுந்தன என்றுதான் சொல்லவேண்டும். அவரே ஒரு கலைக்களஞ்சியம்.

கலைக் களஞ்சியத்தில் விடுபட்டிருக்கிற செய்திகள் சிலவற்றை நான் குறிப்பிட்டேன். ''அப்படியா, இது கட்டாயம் இடம் பெற்றிருக்க வேண்டும்; இது இல்லையா, ஐயையோ, சொல்லுங்கள், சொல்லுங்கள்'' என்று ஆர்வத்தோடு தனது குறிப்பேட்டில் குறித்துக் கொண்டார்கள்.

''கலைக் களஞ்சிய ஆசிரியப் பணி ஏற்ற பின்புதான் எனக்கு, ''கல்வி கரையில, கற்பவர் நாள்சில; மெல்ல நினைக்கின் பிணி பல'' எனும் முதுமொழியின் உண்மைப் பொருள் புரிந்தது'' என்று மெல்லிய சிரிப்போடு தூரன் கூறினார்கள்.

"உலகத்தின் அறிவுதான் நாள்தோறும் எப்படி விரிகிறது! எத்தனை துறைகள்! எத்தனை கலைகள்! அத்தனையும் இந்த மனிதனின் சொத்து! ஒரு துறையைப் பற்றி ஒரு கட்டுரை வந்தால்' அது அச்சுக்குப் போகும் முன், அத் துறையின் புதிய கண்டுபிடிப்புகள் பற்றி இன்னொரு கட்டுரை வருகிறது. அது அச்சேறுவதற்குள் இன்னுமொரு கட்டுரை வரவும் கூடும்! அறிவு இந்த நூற்றாண்டில் வளரும் விகிதம் மற்ற எல்லா நூற்றாண்டுகளின் ஒட்டுமொத்த வளர்ச்சியைவிட விஞ்சியதாகவே இருக்கிறது!'' என்று தூரன் வியந்தார்.

"விஷயங்களை அறிய அறியத்தான் நமது அறியாமையின் அகலம் எவ்வளவு என்று புரிகிறது.'' என்றார்.

அந்த வள்ளுவர் எப்படிப்பட்ட பேரறிவாளர்! பெருஞானி! என்ன அற்புதமான சிந்தனை! அறிதோறறியாமை கண்டற்றால்'' என்றாரே! எல்லாக் குறள்களும் அழிந்துபோய், இந்த ஒருவரி மட்டும் மிஞ்சிற்று என்று வைத்துக் கொண்டால் கூடபோதும், வள்ளுவரை ஒப்புயர்வற்ற சிந்தனையாளர் என்று நிலைநாட்ட!'' என்று பாதிவிழிகளை மூடியவாறு கூறினார்.

குழந்தைகள் கலைக் களஞ்சியப் பணியை, நோயால் தாக்கப்பட்டுள்ள நிலையிலும் தட்டாமல் ஏற்கவேண்டிய சூழ்நிலை பற்றிக் கூறினார்.

"குழந்தைகள் கலைக்களஞ்சியப் பணி, முந்தைய கலைக் களஞ்சியப் பணியைவிடச் சிரமமானது; சிக்கலானது. ஆனால் முக்கியமானது'' என்றார்.

தமிழ்க் குழந்தைகள் நொடிதோறும் வளர்ந்து வரும் உலகப் பேரறிவின் திறத்தை நுகரும் வாய்ப்புக் குன்றி ஏங்கி நிற்பது என் மனக்கண் முன் தோன்றியது" எனச் சொல்லியவாறு.

குழந்தைகள் கலைக் களஞ்சியத்தில் வரும் திமிங்கிலம் பற்றிய கட்டுரை குறித்து ஒரு சுவையான அநுபவத்தைப்பற்றி கூறத்தொடங்கினார்.

"என் பார்வைக்கு வந்த திமிங்கிலம் பற்றிய கட்டுரையோடு அந்த மீனின் படமும் இணைக்கப்பட்டிருந்தது. கட்டுரையில் திமிங்கிலம் யானையைவிடப் பத்துமடங்கு பெரியது என்று வருகிறது. ஆனால், அந்தப் படத்தைப் பார்த்தும் ஒரு சாதாரண மீனின் நினைவு வந்ததே தவிர, அந்தப் பிரமாண்டமான திமிங்கில மீனின் நினைவு வரவில்லை. நமக்கே வரவில்லை யென்றால், குழந்தைகளுக்கு எப்படி திமிங்கிலத்தின் பேருருவம் நினைவுக்குவரும்? ஓவியரை அழைத்தேன். திமிங்கிலப் படத்தைப் பத்துப் பங்காகப் பங்கி, ஒரு பங்கிற்குள் ஒரு யானையின் படத்தை வரையச் செய்தேன். திமிங்கில வயிற்றுக்குள் இன்னும் 9 யானைகள் விழுங்க இடம் இருந்தது. இப்போதுதான் திமிங்கிலத்தின் பெருமை நெஞ்சுக்குப் புலனாயிற்று; அந்தப் பகுதி செம்மையாய் அமைந்துவிட்டது என்ற மனநிறைவும் உண்டாயிற்று!'' என்று நிறுத்தினார்கள்.

"ஆம், யானையை விழுங்கும் மீனின் பெயர் திமிங்கிலம்; அம்மீனை விழுங்கும் மீனின் பெயர் திமிங்கிலகம்'' என்று சூடாமணி நிகண்டில் வருகிறது ஐயா'' என்றேன்.

'' பார்த்தீர்களா, நம் மூதாதையர்களுக்கு யானையைவிடப் பெரியமிருகம் இருக்கிறது என்று தெரிந்திருக்கிறது '' என்றார் சிரித்தவாறே.

ஆனால், '' யானையையே பெரிதாகக் கருதும் 'எறும்புகடை யானைவரை' எனும் மரபுத் தொடரும் தமிழில் உண்டையா'' என்றேன்.

'' அதுவா? அது நிலம் வாழ் உயிர்களைப் பற்றியது. இன்று நாம் ஜன சங்கியை எடுப்பது போல், அன்றே நம் முன்னோர்கள் உயிர் இனங்களின் கணக் கெடுப்பு நடத்தி, தமிழகத்தில் ஏறத்தாழ 84 லட்சம் வகை உயிரினங்கள் உண்டு என்ற முடிவுக்கு வந்திருக்கிற அற்புதத்தைப் பார்த்தீர்களா ''. என்று அதிசயித் தார்.

'' ஆனால், இந்த 84 லட்சம் வகை உயிரினம் என்ற கருத்தை, கம்பர் மறுத்துள்ளார் '' என்றேன்.

'' எப்படி? சொல்லுங்கள் ''

'' பொன்மானைப் பிடித்துத்தரச் சொல்லி, சீதை கேட்கிறாள். இலக்கு வன், 'அது பொன்மான் இல்லை; பொய்மான். ஏனென்றால் பொன்மான் என்ற ஓர் உயிர்வகை உலகில் இல்லை அண்ணா '' என்றான்.

அப்பொழுது இராமன் '' பல்லாயிரங் கோடி உயிர் இனங்கள் இல்லா தன இல்லை இளங்குமரா'' எனக் கூறுகிறான் ''

பல்லாயிரம் லட்சம் மட்டும் அல்ல; பல்லாயிரங்கோடி உயிரினங்கள் உலகில் உண்டு என்று இராமன் கூறுவதாக கம்பர் தெளிவாகக் குறிப்பிடுகிறார் என்றேன்.

''ஆம், குண்டூசி முனையில், கோடி கோடி நுண்ணுயிர்கள் துள்ளுவதைக் காணும், இன்றைய அறிவியல் வளர்ச்சிக்கும் ஈடுகொடுத்து நிற்கும் கம்பரின் பேரறிவுத் திறத்தைப் பார்த்தீர்களா? '' என்றார் தூரன்.

இராமாயணத்தைச் சுவைத்த அந்த நல்ல மனம், இலக்குவன் தொடர் பான ஒரு கிளைக் கதையைக் கூறியது.

இராம இலக்குவர்கள் வனம் ஏகிய முதல்நாள் இரவு, இலக்குவனுக்கு நித்திரை வந்தது. நித்திரைக்குக் காரணமான நித்ராதேவியை அழைத்தான். இலட்சுமணன், ''இதோபார்! நான் இராம கைங்கர்யத்துக்காக 14 ஆண்டுகளை அர்ப்பணித்திருக்கிறேன். இன்றிலிருந்து 14 வருடங்களுக்கு என்னை நீ நெருங் கவே கூடாது'' என்று ஆணையிட்டான்.

''அப்படியென்றால், 14 ஆண்டுகள் முடிந்தபின்பு, நான் விரும்பும் எந்த நேரத்திலும் உன்னை நான் நெருங்க அனுமதிக்க வேண்டும்'' என்றாள் நித்திரா தேவி.

'' ஓ ! 14 ஆண்டுகளுக்குப் பிறகுதானே? நீ விரும்பியபடி எந்த நேரத்தி லும் என்னை நீ அடையலாம், '' என்றான் இலக்குவன்.

இந்தச் செய்தியை மையமாக வைத்து நித்திராதேவி, இலக்குவனை அடையும் நேரத்தைத் தேர்ந்தெடுப்பதில் சுவை சேர்க்கிறது, வங்க மொழி ராமாயணம் என்றார் தூரன்.

14 ஆண்டுகளுக்குப் பிறகு அயோத்தியில் அண்ணல் இராமனுக்கு முடி சூட்டு விழா நிகழ்கிறது. சிம்மாசனத்தில் இராமனுக்கு இலக்குவன் வெண்கொற் றக்குடையேந்தியுள்ளான்.

இலக்குவனை நெருங்குவதற்கு, இந்த நேரத்தைத் தேர்ந்தெடுத்தாள் அந்த நித்திரா தேவி! இலக்குவனுக்கும் அவள் தன்னை நெருங்குவதற்கான அறிகுறிகள் புரியத் தொடங்கியது. அவள் தேர்ந்தெடுத்த அந்த நேரத்தின் சிறப்பை எண்ணி தன்னை அறியாது வாய்விட்டுச் சிரித்துவிட்டான் இலக்குவன்.

இலக்குவன் இந்தச் சமயத்தில் ஏன் இப்படிச் சிரித்தான் என்று எவருக்கும் புரியவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக சிரிப்பின் காரணத்தைச் சிந்திக்கத் தொடங்கினர்கள்.

வசிட்டர் நினைத்தார்: ''மகுடாபிஷேகத்திற்கு மங்களநாள் என்று நீர் குறித்த நாள் அமங்கல நாள் ஆகி அந்தக் காரியம் 14 வருஷங்கள் கழித்து இன்று தான் நடக்கிறது! நீரும் உம் சோதிடமும்'' என்று என்னை நினைத்து ஏளனச் சிரிப்புச் சிரிக்கிருஞ இலக்குவன் என நினைத்தார்.

''உன் மகன் பரதனுக்கு முடிசூட்டும் முயற்சி தோல்வியடைந்ததை இப் பொழுதாவது ஒப்புக்கொள்கிருயா? '' என்று என்னைப் பார்த்துத் தான் சிரிக் கிருன் என்று நினைத்தாள் கைகேசி.

அண்ணனைப் பத்திரமாகக் கொண்டுவந்து ஒப்படைத்துவிட்டேன் பெரி யம்மா! என்று என்னை நோக்கி மகிழ்ச்சியில் தான் சிரித்தான் என்று நினைத் தாள் கோசலை.

'கவசமாக நின்று' உங்கள் ஆணைப்படியே, இராகவனைக் காத்துவந்து நிறுத்தி யுள்ளேன் அம்மா'' என்று சிரிப்பால் சொல்கிருன் என நினைத்தாள் சுபத்திரை.

14 வருஷங்களில், '' தம்பி! நீ உண்டாயா? உறங்கினுயா? என்று ஒரு நாள் கேட்டிருப்பீர்களா அண்ணு! என்று என் சுயநலத்தை எண்ணியிருப்பான்; சிரிப்பு தானுக வந்திருக்கும்' என்று எண்ணினுர் இராமபிரான்.

''மான் பிடிக்கப் போன நிகழ்ச்சியில், நான் வெடித்த கோபச் சொற்களை நினைத்திருப்பான் கொழுந்தன். ஏன் வெடிக்காது இந்தச் சினச் சிரிப்பு? என்று எண்ணிக் குமைந்தாள் அந்தப் பேதை சீதை!

ஆனுல், சிரிப்பின் உண்மைக் காரணம் இலக்குவனுக்கும் நித்திராதேவிக் கும் மட்டுமே தெரிந்தது. இவர்கள் எல்லாம் சிரிப்புக்குக் காரணம் தேடிச் சிந்தித்துத் திகைத்தது பற்றி அவர்கள் இருவரும் மேலும் ஒருமுறை சிரித்தார்கள்.

இராம பட்டாபிஷேகத்தின் போது, இலக்குவன் நித்திரைக்கு ஆட்பட்டு விட்டான்! எப்பேர்ப்பட்ட துர்ப்பாக்கியசாலி! இதனுல்தான், வங்காள இராமர் பட்டாபிஷேகப் படத்தில், இலக்குவன் பிடித்த குடை சிறிது சாய்ந்தபடி இருக்குமாம்.

''தியாகத்தின் பயனைப் பிறர் அடையலாம்; தான் அடையக்கூடாது எனும் ஒப்புயர்வற்ற கருத்தை எப்படி விளக்குகிறது இந்தக் கதை பார்த்தீர் களா. எனக்கு இப்போது காந்தியடிகளின் நினைவுதான் வருகிறது'' என்ருர் தூரன். அவர் விழிகளில் நீர்ப்படலம் சூழ்கிறது — எனக்கும் தான்!

கருத்துச் சுமையோடு, கனத்த நெஞ்சத்தோடு விடைபெறுகிறேன். ❖

# அமரகவி
# தூரன் கண்ட பாரதம்



- அருட்பா முரசு
புலவர் இராசாக் கண்ணனார் எம்.ஏ.

கவிஞன் உணர்ச்சி மயமானவன்; கால தேசங்களைக் கடந்து, உண்மைகளை உய்த்து உணரும் கூர்த்த மதி படைத்தவன். கவிஞன் வாக்கு பொய்ப்பதில்லை. தெய்வீக சக்தி கைகூடப் பெற்றவர்களுக்குதான் கவித்துவ ஆற்றல் மலர முடியும்.

கருவிலே திருவுடைய கவிஞராகப் பிறந்த பெரியசாமித் தூரன் அவர்கள் பாரதியார், பாரதிதாசன், தேசிக விநாயகம் பிள்ளை, வெ. இராமலிங்கம் பிள்ளை கண்ணதாசன் போன்ற நெஞ்சைத் தொடும் நிலையான கவிஞர்களுள் ஒருவராக வைத்துப் போற்றப்படும் பெருமைக்குரியவர்.

கவிஞர்கள் எப்பொழுதும் சுதந்திரமாக வாழ வேண்டும் என்ற வேட்கை கொண்டவர்கள். அடிமை இந்தியாவில் பிறந்த நமது கவிஞர் பெருமகனார், விடுதலைப் போரில் ஈடுபாடு கொண்டு, சுதந்திர வேள்வியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். தேசியப் பார்வை அவரை ஆட்கொண்டது. பாரதியாரை ஞானகுருவாகக் கொண்டு, தாய்மொழிப் பற்றும் நாட்டுப் பற்றும் உடையவராக விளங்கினார்.

இந்த மண்ணுலகில் வாழ்ந்த 79 ஆண்டுகளில் ஒரு பாதி அடிமை இந்தியாவிலும் மறுபாதி சுதந்திர இந்தியாவிலும் நடமாடிப் பெற்ற அனுபவம் இவருக்கு உண்டு.

காந்தியடிகளின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்டு, அவரது அடிசுவட்டைப் பின்பற்றும் கவிஞர், ''சுதந்திரத் திருநாள்'' என்ற கவிதையில் பாரத நாடு சுதந்திரம் பெற்றதை எண்ணி மகிழ்ச்சி அடைந்தாலும், பின்னர் அது பெற்றிருக்கும் முன்னேற்றங்களை நினைத்து, தமது ஆதங்கத்தையும் வெளியிடும் வகையில் பாரத தேவி வாய்குளிர சிரித்து மகிழ்ந்த நாள் என்று கூறுமல்,

''அன்னையெம் பாரதி அங்கணீர் துடைத்துச்
சின்னஞ் சிறுநகை செய்ததோர் தனிநாள்!''

என்றுபாடி ஏதோ சில உறுத்தல்கள்-நிறைவேருக் குறைகள் இருப்பதாகக் கருதி ''சிறு நகை'' செய்ததாக வெதும்புகிருர்.

எதிர்பார்த்த செழுமையின்றி நாடு வீழ்ச்சி அடைந்திருக்கும் நிலையை எண்ணி முழுமைச் சுதந்திரம் கிட்டவில்லையே என்ற ஏக்கப் பெருமூச்சால்,

''வாழ்ந்திடும் போதே மணிநாடு இன்று
வீழ்ந்துள்ள துன்பக் கீழ்நிலை எண்ணுவோம்''

என்று பேசி உண்மைநிலையை ஊருக்குச் செல்ல முற்படுகின்ருர்.

வாழ்நாள் முழுவதும் அரும்பாடுபட்டுச் சுதந்திர தீபத்தை ஏற்றி வைத்து விட்டுக் காந்தியடிகள் அமர வாழ்வு பெற்றுவிட்டார். அந்தத் தீபத்தைச் சுற்றிச் சுய நலவாதிகளும் சோம்பேறிகளும் வட்டமிட்டு நிற்கின்ருர்கள். மக்களுக்கு இன்னும் இருட்டை மட்டுமே சுதந்திரக் காணிக்கையாக்கித் தந்து கொண்டிருக்கிருர்கள்.

இதனைக் கண்டு, ''புண்ணியன் காந்தி விண்ணகத் துறையினும் எண்ணரும் சாந்தி எய்தி இருப்பாரோ?'' என்று சற்று வேக உணர்ச்சியுடன் வேள்விக் கணை தொடுத்து சுதந்திரம் பெற்றுத் தந்த காந்தியடிகளுக்குச் சாந்தி அளிக்கும் சுதந்திரம் கைகூட வில்லையே என்று வருந்துகிருர்.

## தூரனின் சிறுசேமிப்பு

*தூரனின் மூத்த மகளுக்கு திருமணம் ஆகி சிலமாதங்களில் நோய்வாய்ப் பட்டார் மருத்துவர்கள் கைவிடும் நிலை ஏற்பட்டுவிட்டது. அந்தச் சமயத்தில் திரு. தூரன் அவர்கள் கடுமையான நெஞ்சுச் சளியினுல் பாதிக்கப்பட்டிருந் தார். மாடிக்கு வந்தால் 5 நிமிடம் ஓய்வெடுத்த பிறகுதான் பேசவே இயலும். இந்நிலையில் இரவு சுமார் 1 மணிக்கு அவருடைய மகளைப் பார்ப்பதற்காக மருத்துவர் வந்தார். 'காலஹஸார்' காய்ச்சலாக இருக்கலாம் என்று சொன்னுர். மருத்துவர் சென்ற உடனே திரு தூரன் கலைக் களஞ்சியத்தைப் புரட்டினுர். அதில் 'காலஹஸார்' பற்றிக் குறிப்பு இல்லை. இந்த மாதிரி விட்டுப்போன செய்திகளை ஒரு பாக்கெட் நோட்டில் குறித்து வைப்பது வழக்கம். அந்த நோட்டை எடுத்து காலஹஸார் காய்ச்சல் முதல் தொகுதி யில் சேர்க்கப்படவேண்டும் என்று குறித்து வைத்துக்கொண்டார்.*



சி. சின்னுசாமி

# எனது நோக்கில் அமரகவி தூரன்

திரு. தூரன் அவர்கள் 16-9-1908 பெரியார் மாவட்டத்திலுள்ள ஈரோடு அருகில் மஞ்சக்காட்டு வலசில் பிறந்தார். தகப்பனுர் திரு. பழனிவேலப்ப கவுண்டர். தாயார் பாவாத்தாள். ஈரோடு மகாஜன உயர்நிலைப் பள்ளியில் படித்தார். அவருக்கு காவிரி நதிக்கரையில் உலவுவதுதான் மிகமிகப் பிடித்த பொழுது போக்கு.

1926-ம் ஆண்டு சென்னை மாநிலக் கல்லூரியில் சேர்ந்தார். திரு. சி. சுப்பிரமணியம், காலஞ்சென்ற ஈரோடு டாக்டர் ல. கி. முத்துசாமி, கே. எஸ். பெரியசாமி, திரு. ஓ. வி. அளகேசன், முன்னுள் உச்ச நீதி மன்ற நீதிபதிகள் அழகிரிசாமி, கைலாசம், முன்னுள் உயர்நீதிமன்ற நீதிபதி பழனிசாமி ஆகியோர் அவருடைய கல்லூரித் தோழர்களுள் குறிப்பிட்டுச் சொல்லப்படுபவர்கள். இவர்கள் எல்லோரும் விக்டோரியா விடுதியின் மாணவர்கள். தூரன் பி. ஏ. வகுப்பில் Pure Mathematics படித்தவர். அதனுல்தான் பிற்காலத்தில் தலைசிறந்த கணித ஆசிரியர் என்று பெயர் பெற்ருர்.

தேசபக்தி மிக்கவராக இவர் இருந்ததால் மாவீரன் பகத்சிங்கின் தூக்குத் தண்டனைக்கு மறுப்புத்தெரிவிக்கும் வகையில் இவர் பி. ஏ. இறுதித்தேர்வை எழுதாமல் விட்டு விட்டார்.

அதனுல் தேர்ச்சி பெருத ஆசிரியராக கோபியில் டயமண்ட் ஜூபிலி பள்ளியில் வேலை செய்து வந்தார்.

திரு டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார் ராமகிருஷ்ண வித்யாலயா என்ற குருகுலத்தை கோவைக்கு அருகில் துவக்கினர். அதில் ஜாதிமத வேறுபாடுஇல்லை ஏழை மாணவர்களுக்காக தொடங்கப்பட்டது. இந்தக் கல்வி நிலையம், தூரன் அவர்களை மிகவும் கவர்ந்தது. அங்கு சென்று ஆசிரியரானர். அதன் பிறகு தான் பி ஏ. தேர்வு எழுதி பாஸ் செய்து எல். டி யும் பாஸ் பண்ணி வித்யாலயத் தலைமை ஆசிரியரானர்.

அந்தக் காலத்தில் தலைமை ஆசிரியருக்கே மிகக் குறைவான சம்பளம் தான். அப்படியிருந்தும் ஏழை மாணவர்களுக்கு விடுதிக் கட்டணம் கட்ட உதவி செய்வார் திரு. தூரன் கால்பந்து விளையாடுபவர். பொதுவாக விளையாட்டு என்பது தேகப்பயிற்சிக்காகத் தான். மாணவர் விடுதிக்கு விறகு உடைத்துப் போட்டால் தேகப் பயிற்சியும் கிடைக்கும், அதே சமயம் விடுதிக்கு ஒரு சேவை செய்த புண்ணியமும் கிடைக்கும் என்று தீர்மானித்து, விடுதிக்கு விறகு உடைப்பதில் ஈடுபட்டார்.

வித்யாலயத்தில் பணிபுரிந்த பொழுதே அநேக கீர்த்தனைகள் இயற்றி இருந்தார். அந்தச் சமயத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசைப் பாடல்களுக்குப் பரிசு அளிப்பதாக அறிவித்தனர். திரு. தூரன் அவர்களிடம் அவருடைய மாணவர்கள் இந்தச் செய்தியைச் சொல்லி, அவருடைய கீர்த்தனைகளை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பும்படி வேண்டினர். பக்தியால் பாடிய கடவுளைப்பற்றிய கீர்த்தனைகளைக் கேவலம் பரிசு பெறுவதற்காக அனுப்பப்போவதில்லை என்று மறுத்துவிட்டார். ஆனல் ஒரு மாணவர் மிகவும் மன்றாடி வேண்டினர். அவருடைய அன்புக்குக் கட்டுப்பட்டு வேறு வழி இன்றி கீர்த்தனைகளை அனுப்பி வைத்தார். முதற்பரிசு வழங்கியதோடின்றி அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அந்தக் கீர்த்தனைகளை பிரசுரிக்கவும் முன் வந்தது. தமிழிசைப் பாடல்கள் என்ற பெயரில் அவைகள் வெளியிடப்பட்டன.

தமிழில் எல்லாத் துறைகளிலும் படைப்புப்பல படைத்ததோடு தேவாரப் பண் ஆராய்ச்சிக்கு வித்திட்டவரும் இவரே. முதல் ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பித்தவரும் இவரே. மற்ற மொழிகளையும் நேசிப்பவர். அவர் ஒரு தேசிய நோக்கு உடையவர். அவருடைய கவிதைகள் பலவேறு மாநிலத்தைச் சேர்ந்தவர்களின் வீரம், தியாகம் முதலானவற்றைப் போற்றும் வகையில் அமைந்துள்ளன. சங்கீத மும்மூர்த்திகள் பால் அளவற்ற பக்தி உடையவர். கர்நாடக இசைக் கல்லூரியில் செயற்குழுவில் இருந்த பொழுது மும்மூர்த்திகளின் கிருதிகளுக்கே முக்கிய இடம் அளிக்கப்பட வேண்டும் என்று வாதாடி வெற்றி பெற்றர்.

திரு. தூரன் அவர்களுக்கு எம். ஏ சி. அறக்கட்டளையில் பத்தாயிரம் ரூபாய் பரிசு வழங்கப்பட்டது. அதையே நிதியாக வைத்து மேலும் நிதி சேர்த்து தூரன் என்ற அறக்கட்டளையை இசைக்காகவே நிறுவினர்.

ஆனந்தவிகடன் பேட்டி



# படிக்கும்போதே பத்திரிகை ஆசிரியர்

சென்னையிலுள்ள தலைமை பிரசிடென்சி மாஜிஸ்டிரேட் அலுவலகத்துக்கு இரண்டு பேர், ஒரு ரிக்ஷாவில் போகிறார்கள். ஒருவர் பெயர் பெரியசாமி; மற்றொருவர் பெயர் கல்யாணசுந்தரம்.

புதிதாக ஆரம்பிக்கப் போகும் பத்திரிகையொன்றுக்கு 'டிக்ளரேஷன்' வாங்க வேண்டியிருந்தது. பெரியசாமி தான் அதன் பதிப்பாசிரியர். கல்யாணசுந்தரம் அதன் பிரசுரகர்த்தர்.

பத்திரிகையின் பெயரோ நூதனமானது:

**'பித்தன்'**

'பித்தன்!' வாட் டுயூ மீன் பை தட் "அப்படியென்றால் என்ன அர்த்தம்?" என்று கேட்டார் பிரசிடென்சி மாஜிஸ்டிரேட்.

"இட் ஈஸ் ஒன் ஆஃப் தி நேம்ஸ் ஆப் லார்டு சிவா — சிவபெருமானுக்குரிய பெயர்களில் இதுவும் ஒன்று" என்றார் பெரியசாமி. அவர்தானே பதிப்பாசிரியர்.

'டிக்ளரேஷன்' வேலை முடிந்து அவர்கள் வெளியில் வந்தார்கள்.

"போட்டாயே ஒரு போடு! சமயோசிதமான பதில்..." என்று சொல்லியபடி சிரித்தார் கல்யாணசுந்தரம்.

"பின்னே! அதனுடைய உண்மையான அர்த்தம் என்னவென்று சொல்லி இருந்தால் 'டிக்ளரேஷ'னே ஆகியிருக்காதே!" என்றார் பெரியசாமி,

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு - நமது நாடு ஆங்கிலேயர்களுக்கு அடிமைப் பட்டிருந்த பொழுது நடந்தது இது. அந்தப் பெரியசாமியும், கல்யாணசுந்தரமும் வேறு யாருமல்ல; திரு. பெரியசாமி தூரனும், திரு. வி. க. வும்தான்.

விகடனில் வெளியான 'கல்லூரி மாணவர்கள் பத்திரிகை நடத்துகிருர்கள் என்ற கட்டுரையைப் படித்தேன். உடனே, என் மனம் இறந்த காலத்தை நோக்கித் தாவியது. நாற்பது ஆண்டுகளுக்கு முன் நானும், வேறு சில மாணவர்களும் சேர்ந்து கொண்டு ஒரு பத்திரிகை நடத்திய நினைவுகளும், நிகழ்ச்சிகளும் என் மனக்கண்ணில் திரைப்படமாகஓட ஆரம்பித்து விட்டன' என்ற பதில்சொல்லத் தொடங்கினர் தூரன்.

''அந்த மாணவர்கள் யார்?''

''சி. சுப்பிரமணியம்''

''டி. என், சி. சி. தலைவரா?''

''அவரே தான். அப்புறம் ஓ. வி. அளகேசன்; டாக்டர் முத்துசாமி; ஜஸ்டிஸ் பழனிசாமி; காலஞ்சென்ற கவிஞர் எஸ். டி. எஸ். யோகி; டில்லி பல்கலைக் கழகத்தில் அரசியல் துறைப் பேராசிரியராக இருக்கும் சீனிவாசன்... இப்படிப் பலபேர்''

'' 'பித்தன்' என்ற தலைப்பை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?''

''தேச விடுதலையிலும், தாய் மொழி வளர்ச்சியிலும் பித்துக் கொண்டவர்கள் நாங்கள். 'வன மலர்ச் சங்கம்' என்று ஒரு அமைப்பை ஆரம்பித்தோம். மாணவர்கள் மத்தியில் விடுதலை உணர்ச்சியையும், தாய்மொழிப் பற்றையும் வளர்ப்பதுதான் அந்த சங்கத்தின் நோக்கம். அதன் ஒரு அங்கம் தான் 'பித்தன்' என்ற மாதப் பத்திரிகை'' என்ருர் தூரன்.

''அப்பொழுது அதற்கு ஆண்டுச் சந்தா ஒரு ரூபாய். பெரிய பெரிய பத்திரிகைகளுக்கே அவ்வளவுதான் சந்தா. ஆனந்த விகடன் பத்திரிகை எங்களுக்கு விளம்பரம் கொடுக்கும். எங்கள் விளம்பரம் ஆனந்த விகடனில் வரும். அமரர் கல்கி அவர்களின் ஆசி எங்களுக்கும் கிடைத்தது. எங்கள் பத்திரிகையை அச்சடித்துக் கொடுத்தவர் திரு. வி. க.'' என்ருர் அவர்.

தமிழ்த் தென்றலின் சாது அச்சுக் கூடத்தில்தான் இந்தப் பத்திரிகை அச்சடிக்கப்பட்டது. ஆரம்பகாலத்தில் 'சைக்ளோஸ்டைல்' செய்துதான் வெளியிட்டு வந்தார்களாம். பிறகு தான் 'பித்தன்' சாது அச்சுக்கூடத்திற்குப் போனது.

''அப்போதிருந்த அந்நிய அரசாங்கம் மாணவர்கள், பத்திரிகை நடத்தியதை அனுமதித்ததா என்ன?''

''ஆம் அனுமதிததது. ஆனல், தொடர்ந்து கண்காணித்து வந்தது. திரு. வி. க. அப்பொழுது தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபட்டிருந்ததால், அவருக்கு, சி. ஐ டி. களின் நிலவரங்கள் தெரியும். அவ்வப்பொழுது எங்களை உஷார்ப்படுத்திக் கொண்டிருப்பார். ரஷ்யப் புரட்சியைப் பற்றி எங்கள் பத்திரிகையில் தொடர்ந்து எழுத ஆரம்பிக்கவே, அரசாங்கத்தின் கண்காணிப்பும் அதிகமாயின. இருந்தாலும் ஒரு வகையாகச் சமாளித்துக் கொண்டோம்'' என்ருர் தூரன்.

தூரனுக்கும், மற்ற மாணவர்களுக்கும் அவர்களது பெற்ருேர்கள் பெரும் எதிர்ப்புத் தெரிவித்தார்களாம். 'பித்தன்' பத்திரிகையுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது—அதில் கதையோ கட்டுரையோ எழுதக் கூடாது என்று கண்டித்தார்களாம்.

''அந்த எதிர்ப்பை எப்படிச் சமாளித்தீர்கள்?''

''பெரியசாமி என்ற பெயரில் எழுதி வந்த நான், திடீரென்று புனை பெயரில் எழுத ஆரம்பித்தேன்.''

''அந்தப் புனைப் பெயர் என்ன?''

''அதுதான் 'தூரன்'. நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, நான் மாணவனாக இருந்த பொழுது உருவான பெயர் அது'' என்று சொன்னபோது தூரனின் குரலில் உணர்ச்சி தெரிந்தது ''ஈரோட்டில் இப்போது பிரபலமான டாக்டராக இருக்கும் முத்துசாமிக்கும், அவரது பெற்றோர் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். உடனே முத்துசாமி, 'பித்தன்' ஆசிரியர் குழுவிலிருந்து தான் ராஜிநாமா செய்து விட்டதாகப் 'பித்தன்' பத்திரிகையிலேயே ஒரு கடிதத்தைப் பிரசுரித்துவிட்டு, தொடர்ந்து 'மு' என்ற ஒரே முத்துப் பெயரில் எழுதிக் கொண்டு வந்தார்.

''1928-ல் வெளி வரத்தொடங்கிய பத்திரிகை, தொடர்ந்து ஏறக்குறைய மூன்று ஆண்டுகளுக்கு தான் வெளி வந்தது. சில மாணவர்கள் தங்கள் படிப்பை முடித்துக் கொண்டு சொந்த ஊருக்குப் போய்விட்டார்கள். வேறு சிலர் அடிக்கடி போராட்டம் என்று அலைய வேண்டியிருந்தது. அரசாங்கத்தின் கெடுபிடி அதிகமாகிக் கொண்டு வந்ததால் சாது அச்சுக்கூடத்தில் தொடர்ந்து அச்சிடமுடியாத சூழ்நிலை. சில மாதங்களுக்கு, 'பித்தன்' கோபிசெட்டிப்பாளையத்திலிருந்து அச்சிட்டு வெளியிடப்பட்டது.

அந்தப் பழைய சாதனைகளின் நினைவுச் சின்னமாக இப்போது தூரனிடம் இருப்பவை பழைய 'பித்தன்' பிரதிகள் பைண்டு செய்யப்பட்டுள்ள புத்தகங்கள்தான்

''இந்தப் புத்தகங்களை இரண்டு நாட்களுக்கு இரவல் தர முடியுமா? என்று கேட்டேன்.

''முடியவே முடியாது'' என்று மறுத்துவிட்டார் தூரன்.

''யார் கேட்டாலும் சரி, இதை மட்டும் இரவல் தரமாட்டேன். மாணவர்களாக இருந்தபொழுது நாங்கள் சாதித்த ஆக்கபூர்வமான பணிகளுக்கு ஆதாரமாக விளங்குபவையே இந்தப் புத்தகங்கள்தான். ஒருபோதும் இவற்றை விட்டுப் பிரிய மாட்டேன்'' என்றார் அவர்.

— முருகு.

---

**அட்டையின் பின்புறம்**

*திரு. ம. ப. பெரியசாமி தூரன், காளியம்மாள் தூரன் (அம்பாள்)*

| | | |
|---|---|---|
| *மூன்று மாப்பிள்ளைகள்* | : | *திரு. சின்னுசாமி*<br>*திரு. ராமசாமி*<br>*திரு. மாரிமுத்து* |
| *மூன்று மகள்கள்* | : | *சாரதா சின்னுசாமி*<br>*வசந்தா ராமசாமி*<br>*விஜயவல்லி மாரிமுத்து* |
| *மகன்* | : | *பி. சுதந்திரகுமார்* |
| *மருமகள்* | : | *திருமதி. செண்பகதிலகம்* |
| *பேரன்* | : | *முரளி முருகவேல்* |

---

# சமரசச் சகவாழ்வு








''எனக்குத் தெரிந்த அளவிலே இந்து சமயம் மட்டும் அல்லாமல் புத்தம், ஜைனம், இஸ்லாமியம், கிறித்துவம் ஆகிய எல்லாச் சமயங்களும் அன்பு செய்வதை தலைசிறந்த வாழ்க்கை நெறியாகக் கூறுகின்றது என்று நான் தயக்கமின்றிக் கூற முடியும்.''

- தூரனின் - ''பூவின் சிரிப்பு''-நூல்

**நதிகளாய் நடந்து வந்து கடலாகக் கலந்தவர்கள்**

''புத்தன் என்றும் ஏசு என்றும்
புனிதமுனி காந்தி என்றும்
வாடும் இளம்பயிர் கண்டு
வாடும் அருள் வள்ளலென்றும்
உத்தமராம் நபிகளென்றும்
இத்தரையில் வந்தவர்கள்
இன்மனமும் அன்பினிலே
எவ்வுயிரும் தன்னுயிராய்
எண்ணும் வகை காட்டுவித்தார்.



- தூரனின் - ''இளந்தமிழா''-கவிதை நூல்

# கோவையில் அமரகவிக்கு அஞ்சலி





அமரகவி தூரனின் மறைவுக்கு அஞ்சலி நிகழ்ச்சி கோவை சமரச சன்மார்க்க சங்க மண்டபத்தில் 1-3-1987 அன்று நிகழ்ந்தது.

கம்பன் செஞ்சொற்கொண்டல் க. கு. கோதண்டராமன் தலைமை தாங்கினர்கள். அருட்செல்வர் நா. மகாலிங்கம் வரவேற்புரை நிகழ்த்தினர்.

இசை மேதை டாக்டர் எஸ். இராமநாதன் தூரனின் கீர்த்தனைகளைப் பற்றி சொற்பொழிவு ஆற்றுகிற காட்சி.



பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் தூரனின் இலக்கியப் பணிகளைக் குறித்து நகைச்சுவையோடு பேசுவதை அருட்செல்வர் அவர்களும் அவர்களுக்கு அருகில் அமர்ந்துள்ள கோவை வானொலி இயக்குநர் திரு. ஏ. நடராஜன் அவர்களும் கேட்டு சிரித்து ரசித்து மகிழ்கின்ற காட்சி.



1—3—87 அன்று கோவை இலக்கிய அமைப்புக்களைச் சார்ந்தவர்கள் அமரகவி தூரனுக்கு அஞ்சலி செலுத்திய கூட்டத்திற்கு கோவை இராமகிருஷ்ண வித்யாலய நிறுவனர் திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் ஐயா அவர்கள் தலைமை தாங்கினார்கள். டாக்டர் மு. அறம், சொல்லின் செல்வர் நா. கிரிதாரி பிரசாத், அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம், இசை மேதை எஸ். இராமநாதன் ஆகியோர் மேடையில் உள்ளனர்.





அஞ்சலி நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட அமரகவி தூரனின் மகள்களுக்கு அருட்செல்வரின் பரிசுகளான அன்பளிப்பு நூல்களை டாக்டர் டி. எஸ். அவிநாசிலிங்கம் ஐயா அவர்கள் வழங்கும் காட்சி.

# பொள்ளாச்சியில் அமரகவிக்கு அஞ்சலி



2—3—1987 அன்று அமரகவி தூரனின் மறைவுக்கு பொள்ளாச்சி தமிழ் இலக்கிய - தமிழிசை அமைப்புகளின் அஞ்சலி விழாவில் அருட்செல்வர் உருக்கமாக உரையாற்றுகின்ற காட்சி.

பொள்ளாச்சி நல்லமுத்து கவுண்டர், மகாலிங்கம் கல்லூரி முதல்வர் பேராசிரியர் என். நமசிவாயம், கல்விச் செயலர் கு. வெங்கடாசலம், தமிழாசிரியர் ராசாக் கண்ணனார், பேராசிரியர் அமுதன், கவிஞர் டாக்டர் சிற்பி ஆகியோர் உள்ளனர்.

# தமிழிசைக் கலைமாமணி



பொள்ளாச்சி தமிழிசைப் பள்ளியைத் தொடங்கி வைக்க தீபச்சுடர் ஏற்றும் தூரன் அவர்களை வரவேற்கும் தமிழிசைச் சங்கத் தலைவர் திரு. பி. கே கிருஷ்ணராஜ் வாணவராயர் அவர்கள்.



இனிக்கும் தேன் அணைகள் - தாகம்
தணிக்கும் கவிச் சுனைகள்





## வாரியார் வாழ்த்து

மூவிருப தாண்டு முருகன் திருவருளால்
பூவுலகில் எய்தியுயர் புண்ணியன் — மேவுபுகழ்
அண்ணல் பெரியசாமித்தூ ரன் ஆண்டுபல
வண்ணமுடன் வாழ்க மகிழ்ந்து.

அன்பன்

**கிருபானந்தவாரி**



# எமக்கு வழிகாட்டு!

பாரதத்தாய் பெற்றெடுத்த பண்புத் திருமகனே!
யார் வந்தழைத்தார்கள்? அவசரமாய்ச் சென்றுவிட்டீர்!
இருவிழியும் புனலாக்கி இதயத்தை கனலாக்கி
ஒரு நொடியில் எங்கேயோ ஓடி மறைந்தீரே!
தொடங்கிவிட்ட நற்பணியைத் தொடர்ந்து முடிப்பதற்குள்
அடங்கி மறைவதுமக் கழகாகத் தோன்றியதா?

நல்ல தமிழ் வளர்க்க நாளும் முயன்றிருந்தீர்!
சொல்லில் அளவிறந்த சுகம் கொணரப் பாடுபட்டீர்!
எண்ணிய வாறெல்லாமே ஈடேறி விட்டனவா?
புண்ணியநற் றமிழுக்கு புதுப்பதவி கிட்டியதா?
யார் வந்தழைத்தார்கள்? அவசரமாய் சென்றுவிட்டீர்!
பாரதியா? கம்பரா? பழந்தமிழ் வள்ளுவரா?

கண்ணீர்க் கடல்நடுவே காலமெலாம் நாம்தவிக்க
மண்ணில் விடுத்துவிட்டு வானேடிப் போனீரே!
எங்களுக்கு யாரினிமேல் ஏற்றவழி காட்டிடுவார்?
தங்கக் கவிதைகளால் சத்தியத்தை யார் வளர்ப்பார்?
முத்தமிழில் நீங்கள் முப்பதுநூல் தந்தீர்கள்;
உத்தமராய் சிறுவரெலாம் உயரவழி சொன்னீர்கள்;
ஆங்கிலத்துக் ககராதி ஆக்கிவைத்த ஜான்சனைப் போல்
ஓங்குகலைக் களஞ்சியத்தை உயர்த்தமிழுக் களித்தீர்கள்:
வேலைப் பிடித்தவடி வேலனவன் தூய திருக்
காலைப் பிடிப்பதையே கடமைஎனக் கொண்டீர்கள்;
அன்புக் கிலக்கணமாய் அமைந்துலகோர் நெஞ்சங்களில்
பொன்பதித்த சித்திரமாய்ப் பொலிந்து திகழ்ந்தீர்கள்!

உம்பெயரில் தூரன் ஒட்டிக்கொண்டிருந்தாலும்
எம் மருங்கில் தான்நீங்கள் என்றும் இருந்தீர்கள்!
என்ன தவறிழைத்தோம்? ஏனேடிப் போய்விட்டீர்?
சின்னவர்கள் செய்த பிழைசிந்தை பொறுக்காதா?
உறவுக் குறவானீர்; உயிருக் குயிரானீர்!

குறைபொறுக்கும் உம்நல்ல குணம் மறந்தா போயிற்று?
ஒன்றுரைப்போம். உம்முடைய உரைவழியே நாமினிமேல்
என்றும் நடப்போம். எள்ளளவும் ஐயமில்லை!
பொங்குகிற நல்லன்பை பூரணமாய் நீ பெருக்கி
எங்கே இருந்தாலும் எமக்கு வழிகாட்டு!
ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

- சௌந்தரா கைலாசம்



# தூரன் எனும் செம்மல்

அன்பின் உருவே அடக்கத்தின் சின்னமே
என்பும் பிறர்க்குதவும் இனிய பண்பினுய்
இன்பத்தமிழின் இன்னமுதக் கவியரசே
இன்னுமொரு நூருண்டுஇறை நினைக்கருள்கவே
ஆண்டுஆறுபத்தினை அடைந்த ஆண்எறே
ஈண்டு உனைப் போல் அருந்தொண்டாற்றினர் உளரோ!
நீண்ட புகழ் கலைக்களஞ்சியம் நீள்நிலத்தில்
யாண்டும் நின்புகழ் பாடி நிற்குமன்ருே!
இசைக்கேற்ற இனிய கவிபுனைந்து தமிழன்னையின்
வசைபோக்கிய வள்ளலே,
வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து
திசையெலாம் புகழ்கொண்ட தூரனெனும் செம்மால்!
அசையாது நின்புகழ் தமிழ்போல் என்றும் வாழ்கவே!

கம்பன் செஞ்சொற்கொண்டல்

**க. கு. கோதண்டராமன்**



கவியோகி மகரிஷி
சுத்தானந்த பாரதியார்

## அமரகவி பெரியசாமித் தூரன்

உலகெலாம் பரவிய
உயர்தமிழ் வானிலே
நிலவிய புலவா
நிறைகுடச் செம்மல்
பாரெலாந் தமிழிசை
பரந்து விளங்கப்
பேரகராதியைப்
பெட்புறக் கோத்தார்.

பேரிசை ஆசான்
சீரிய கல்விமான்
கூரிய மதிநலம்
கொண்ட சொற்கொண்டல்
காலமெல்லாம்
களிப்புறப் பாடி
ஞாலம் உகக்கும்
நல்லிசைக் கவிமணி

இல்லறம் வளர்த்த
நல்லறச் செல்வர்
எல்லாருக்கும்
இனிய நண்பர்
திருக்குறளின்பம்
திளைத்தநல் இல்லறம்
உருக்கமாய்க் காத்தே
ஊருக்குதவினார்

மங்கலத் தமிழர்
மங்காப் புகழ்பெறு
தங்கம் பெரிய
சாமித்தூ ரனார்
இசை மணம்பரவி
இனிது வாழியவே
திசை திசை திகழத்
தீந்தமிழிசை போல்
வாழிய வளம்பெற
வையகம் புகழச்
சூழிய தீந்தமிழ்ச்
சுவையுலகெல்லாம்!



கவிமணி காந்திதாசன்

## பேறு மன்னன் பெ. தூரன்

பிஞ்சுநிலாக் கிண்ணியிலே பாலும் தேனும்
பெய்துபட்டிப் பறவைகளை உண்ணச் செய்த
மஞ்சக்காட் டூரானே! "தூரன்" என்றோர்
மாணிக்கப் பண்ணையிலே தமிழ்வித் தூன்றி
நெஞ்சமொளிர் பாத்தியிலே படரச் செய்து
நேயமெனும் நீர்பாய்ச்சி உழைப்பே மேலாம்
அஞ்சலிலா வாழ்வுபெறக் காலத் தேவன்
அனுப்பியநன் மாந்தரில்நீ முதல்வந்தாயோ?

எழுதுகோல் சிலவேளை ஈட்டி யாகி
இழிகசடர், பழிகாரர் தம்மேற் பாயும்,
வழுவிலாச் சொற்கொண்டு கற்கண் டாக்கி
வருநாக்கின் உமிழ்நீரை அமிழ்தாய்ச் செய்யும்
பழுதிலாச் சமுதாயம் அமைதற் காகப்
பாரதத்தாய் விரிதாளில் கலப்பை இன்றி
உழுகவிதை யூன்றிவரும் பேறு மன்னன்:
ஊரிலுள்ள பெரியார்க்கும் பெரிய சாமித்

தூரன்கைப் பேஞுவே பேறு வாகும்
தோன்றுசிலர் பேஞுவோ சோளத் தட்டை!
தூரன்கை எழுத்தொன்றே எழுத்த தாகும்
தோன்றுசில எழுத்தெல்லாம் "பிரெய்லி" என்பார்
தூரன்வாய்ப் பேச்சதுவே பேச்ச தாகும்
தொடங்குசில பேச்செல்லாம் பிள்ளைப் பேச்சாம்!
தூரன்பாட் டாவதொன்றே தமிழ்ப் பாட்டாகும்
தொடுத்துவரும் சிலர்பாட்டோ சாப்பா(ட்)டென்பார்!

'மருதூ ரின் வள்ளலார் புனித வாழ்வை
மறைநூ லாய்க் கொண்டுபுகழ் சாற்று தற்கோ
ஒருதூ ரன் இன்றில்லை! இராம கிருஷ்ணர்
ஓங்கும்அருள் வாக்கிடையே கதைகள் தேர்ந்து
தருவாரில் முதன்மைபெறு தூரன் இல்லை:
தவமேவு சத்தியசோ தனையாற் காந்தி
வரலாறு கூறுதற்கா ருளர்?" என் பார்க்கு
மண்ணிடையே மீண்டும்வந்தோர் கதைசொல் லாயோ?

முத்தமிழின் வல்லா னைச் சாவுவந்து
முத்தமிடப் பலர்அழுது நொந்து வீழ
புத்தர்படத் தடியின்கீழ் இருந்த பல்லி
பொலபொலெனக் குரல்தெறிக்க, அண்ணல் காந்தி
சித்தமிகும் குரங்குகள்,கண் திறந்து பார்த்துச்
செயலற்றுக் கண்ணீரை அருவி யாக்க,
இத்தரையை விடுத்துநீ, பயணம் செய்தாய்!
என்றதுகேட் டுளம்வெம்பி நொந்தோம்! ஐயா!



கவிஞர் கு. ச. கிருஷ்ணமூர்த்தி

## மறந்துவிட்டு எங்கே சென்றாய்!

அமரகவி பெரியசாமித் தூரனென்னும்
அரியதொரு கொங்கு நாட்டுப் பேரறிஞன்!
சமரசசன் மார்க்கநெறி காந்தி யண்ணல்
சாத்வீகக் கொள்கை தன்னைக் கடைப்பிடித்தோன்!
அமைதி அன்பு தயைக் கருணை அடக்கம்சாந்தம்
அத்தனைக்கும் மொத்தஒரு உருவமாகி
இமயமென இலக்கியநற் பணிகளாற்றி
எளிமைக்கோர் இலக்கணமாய்த் திகழ்ந்த செம்மல்!

கொஞ்சுமொழிக் குழவியைப்போல் மழலை மேவக்
கொங்குநாட்டுத் தமிழில்உரை யாடும்போதும்
விஞ்சிநிற்கும் புன்சிரிப்பைக் காணும் போதும்
வெடித்துவரும் கருத்துரையைச் சுவைக்கும்போதும்
நெஞ்சமெல்லாம் நெக்குருகிப் போகும்! அந்த
நிகழ்ச்சியெல்லாம் அடுத்தடுத்து நினைக்குந் தோறும்
வஞ்சமிகும் இரக்கமற்ற காலன் தன்னை
வசைபாடத் துடிக்குதெந்தன் கவிதை நெஞ்சம்!

காலத்தை வென்றுநிற்கும் ஆற்றல்பெற்ற
கலைக்களஞ்சியத் தொகுப்பை உழைப்பினாலே
ஞாலத்தோர் போற்றும் வண்ணம் தமிழன்னைக்கு
நல்லணியாய்ப் பூட்டிமன மகிழ்ச்சி கொண்டோன் !
சீலத்தை, ஒழுக்கத்தை, சத்தியத்தைத்
தெய்வீக உணர்வுகளை நிலைநிறுத்தத்
தாளத்தில், சந்தத்தில், இசையில் சேர்த்துத்
தமிழகத்து மேடையெங்கும் முழங்கச் செய்தான் !

பள்ளியிலே படிக்கின்ற காலம் தொட்டே !
பாரதியின் பனுவல்களில் காதல் கொண்டு
உள்ளமெனும் கருவறைக்குள் தேக்கிவைத்து
உயர்ந்தபல சிறுகதைகள், நாடகங்கள்
தெள்ளமுதச் சுவை மிகுந்த கவிதைப் பண்கள்
தேசியத் தெய்வீகச் சீர்திருத்தக்
கொள்கையெலாம் எதிரொலிக்கும் இலக்கியங்கள்
குவித்ததெல்லாம் மறந்துவிட்டு எங்கே சென்றாய் ?

''பித்தன்''எனும் புனைப்பெயரில் அந்தநாளில்
பெருமையுடன் மிகச்சிறப்பாய் நடந்துவந்த
பத்திரிகை அனைத்திலும்உன் கவிதை தன்னை
பரிவுடனே உவந்தேற்றுப் பிரசுரிப்பார் !
அத்தனையும் சுவைத்துப்பா ராட்டிப்போற்றி
அனுபவித்தோம்! அவற்றையெலாம் திரட்டிச் சேர்த்து
எத்தனையோ நூல்களாக்கித் தந்தாய் ! அந்த
இலக்கியங்கள் இருக்கும்வரை நீயும் வாழ்வாய் ?





டாக்டர் சிற்பி

## அமரகவிக்கு அஞ்சலி

வாணியின் கை வீணை தரும்
தேனமுத கீத ஒலி
மென் காற்றில் கரைந்ததுபோல்...
மேக இருள் சீறிவந்த
மின்னல் பூ உதிர்ந்தது போல்...
மண்குளிர வந்த சுக
மழை கொஞ்சி ஓய்ந்தது போல்...
நேயமுள்ள நெஞ்சுகட்கு
நெருக்கமுள்ள நம் தூரன்
தூய இயற்கை மடி
துயில் கொள்ளச் சென்று விட்டார்
சாந்தி பெறுக அந்தத்
தமிழ் மகனின் நல்லாத்மா!
இறைவன் திருவடியில்
இனியவரின் நல்லுயிர் தான்
இளைப்பாறித் திளைக்கட்டும்

* * *

கொங்குத் திரு மண்ணில்
கோலமிட்டுக் காவேரி
பொங்கி வரும் கரையோரம்
பூத்த புகழ் விளக்கு

மொக்கு வயதில்
முளையரும்பும் தேசபக்திப்
பக்குவத்தில் முக்குளித்த
பன்னீர் மலர்ச் செண்டு

தேசபித காந்தி மகான்
திருவடியில் வைத்த மனப்
பாசம் உயிர் மூச்சாய்ப்
பாடித் திரிந்த குயில்

சேதார மில்லாத
செந்தமிழின் கவிராஜன்
ஆதார சுருதியெனும்
பாரதிக்கு முதல் தொண்டன்

பரமஹம்சர் பெயர்சூடும்
பள்ளியிலே பிள்ளைகளின்
நரம்புகளில் ஆன்மீக
நயம் சொரிந்த ராஜ அன்னம்

உளவியலும் அருளியலும்
உலகியலும் கலந்திணைந்த
இளநீர்ப் பதச் சுவைசேர்
இலக்கியத்தின் கருவூலம்

சிறுகதைகள் நாடகங்கள்
சிந்தனைசேர் ஆய்வுரைகள
நறுங்கவிதை எனும் துறையில்
நங்கூர மிட்ட கலம்

நாடோடிப் பாட்டுக்கு
நர்த்தனங்கள் ஆடும் மயில்
பாடும் இசைக் கீர்த்தனையாம்
பக்தி செழித்த வயல்

மலைச் சிகரம் போன்று
மாணிக்கத் தமிழுக்குக்
கலைக் களஞ்சியம் தந்த
கருத்து மணிப் பேழை

பித்தனென்ற இதழும் பின்
பிறந்த காலச் சக்கரமும்
பத்திரிக்கை உலகு மெச்சிப்
பாராட்டும் அணிகலன்கள்

சாந்த முகம் மலரச்
சத்தியத்தில் நடைபோட்ட
எந்து புகழ்ச் செல்வர்-இன்று
இலக்கியமாய் மாறிவிட்டார்

காந்தி அருள் கமழக்
கதை யெழுதிப் பாட்டெழுதி
ஈந்து சென்ற சிந்தனைகள்
என்றென்றும் ஒளி விரிக்கும்

எண்ணங்கள் வழிகாட்டும்
எழுத்துக்கள் கை கொடுக்கும்
பண்ணில் இனிய சுவைப்
பாக்கள் மனம் தூய்மை செய்யும்

* * *

நேற்றிருந்த தூரன்
நினைவுகளில் வாழ்ந்திருப்போம்
சாற்றரிய புகழாளன்
சாந்திபெற வணங்கி நிற்போம்!



கவிஞர்கோ கலைமாமணி
**புத்தனேரி சுப்பிரமணியம்**

## தமிழ் மேதைத் தூரன்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத் தாறில்
அமைந்த தமிழ் எழுத்தாளர் மாநாட்டிற்குத்
தூயமுகப் பொலிவுடைய தலைமை ஏற்ற
தூரனை நான் முதன்முதலில் கண்டேன்; அந்நாள்
நேயர்எனத் தொடங்கிய எம் நட்பின் ஆழம்
நெடுங்காலம் தொடர்ந்தமையால் பெரியசாமி
ஆயுள்வரை அவர்க்கினிய தோழர் என்னும்
அரும்பேற்றால் இறும்பூது கொண்டேன் உண்மை.

அப்பழுக்கே இலாக்கல்வி அமைச்சர் கோவை
அவினுசி லிங்கமெனும் தியாகச் செம்மல்
ஒப்பரியக் கலையறிவுக் களஞ்சி யத்தை
உருவாக்கும் நற்பணியை தூரனுக்கே
ஒப்படைத்தார் அப்பணியின் சாதனைக்கே
ஒருநோபல் பரிசதனைத் தரலாம்; ஞானத்
திட்பமுடன் படைப்பாற்றல் வெற்றி கண்டு
செய்தற்கரிய செய்ததமிழ்ச் செம்மலன்றே?

மருந்தீசர் பக்தியினுல் பெரியசாமி
வரைந்தபல இசைப்பாடல் அனைத்தும் கீத
விருந்தெனவே இசைவாணர் பாடி நம்மை
மெய்சிலிர்க்க வைப்பதனை மறப்பார் யாரோ?
சிறந்த பல சிறுகதைகள் நாடகங்கள்
தீட்டியவர் தமிழ்மணக்கும் கொங்கு மண்ணில்
பிறந்தவரின் சாதனையால் தமிழ் இனத்தின்
பெருமையினை அறிவுலகம் பெரிதும் போற்றும்.

மறைவதற்குச் சிலதிங்கள் முன்னே தூரன்
மனைசென்றேன், அறிவாளர் உடல் நலத்தில்
குறைவுற்ற நேரத்தும் அவரின் பேச்சுக்
குரலினிலே தமிழ்வீறு குலுங்கக் கண்டேன்!
நிறைவான நெஞ்சுடனே அளவளாவி
நெடுநேரம் தமிழ்உலகை அலசித் தீர்த்தோம்!
நிறைகுடமாய் வாழ்ந்த தமிழ்மேதை என்றே
நெஞ்சாரப் போற்றிமனம் நெகிழ்கின்றேனே.



கவியரசு, டாக்டர், கலைமாமணி
**இளங்கம்பன்**, டி.லிட்.
பழனி

## அமரகவி தூரனின் கவிச்சிறப்பு

கோவைமாவட்டம் கொடுத்த கவிஞர்களுள்
சேவைவழியே சிறந்தொளிர்ந்த தமிழ்மேதை!
கல்வித்துறைபுகுந்து கவித்துறையில் மிக்கோங்கி
பல்வேறு நம்மரசின் பட்டங்கள் பெற்றவராம்
மாமேதை தூரனவர் மாண்பார்கவித்திறத்தை

நாமோதி முடிந்திடுமோ? நற்றமிழின் கடலவராம்!
தாளப்பேரறிவும் தனிராக அனுபவமும்
ஆள நலங்கூட்டும் ஆன்றஇசை யோவியமாய்ச்
சொல்லுக்குச் சொல்லினிக்கச் சுகராகப்பண்ணினிக்கக்
கல்லுக்கும் உணர்வூட்டும் கவிதைகளை உருவாக்கி

மின்னல் பூக்கள் என மேலான தலைப்பளித்தே
கன்னல் தமிழுக்குக் கனிந்தளித்த கவிஞரவர்!
ஆரமுதச்சொல்லழகர்; அரும்உழைப்பின்சின்னம்
தூரனவர் பாட்டுத் திறனும் பெரிதம்மா!
திரும்பத் - திரும்பத் திவ்யமுடன் நாம்பாட

அரும்பியதாம் அன்னவரின் அழகானபல்லவிகள்!
தமிழிசைக்கு மாண்பளித்த தகுயினையாரறியார்?
கமழுமவர் இசைப்பாக்கள் கற்கண்டு தேன்பாக்கள்!
எளியவடிவத்தில் எல்லோர்க்கும் இன்பூட்டும்
ஒளிப்பூக்கள் போல உதித்தவைகள் அவையென்பேன்!

சுதி கூட்டும் இசைநலமும், சுவைகூட்டும் மொழிநலமும்
மதிகூட்டும் சிந்தனையும் மணக்கினற அவர் பாக்கள்
காலத்தால் அழியாத கவிஞர்ந்த செல்வங்கள்
ஞாலத்தமிழ் வளத்தை நமக்குரைக்கும் வார்ப்படங்கள்
பாரதிக்குப் பின்உதித்த பாவாணர் பலருள்ளும்

சீரதிகம் கொண்ட செய்யதமிழ்க்கவிஞரிவர்
ஆய்வினிலும் தோய்வினிலும் அச்சுப் பதிப்பினிலும்
ஓய்வறியா வண்ணம் உழைத்தவர்நம் தூரனென்பேன்
சங்கீதப் பூங்குயிலாய்ச் சாற்றும்கவிபொழிந்த
கொங்குச் செல்வரிவர் குன்றாப்புகழ்த்தீபம்!

—·—



# குழந்தை மனத்தூரன்

குழந்தையுள்ளம் கொண்டவராய்த் திகழ்ந்தீர் கொஞ்சும்
குழந்தைகளின் உள்ளமெலாம் கவர்ந்தீர் நல்ல
பழகுதமிழ் மொழியினிலே குழந்தைகட்குப்
பாடல்பல இயற்றிமகிழ் வளித்தீர் மிக்க
அழகுடனே நகைச்சுவையும் ததும்புகின்ற
அற்புதமாம் கதைகளெலாம் சொன்னீர் மேலும்
'குழந்தைமனம்' எனும்உளநூல் ஆக்கித்தந்து
குழந்தைகளின் இயல்புணரச் செய்தீரய்யா !

பள்ளியிலே ஆசிரிய ராகச்சேர்ந்து
பாலருடன் மனம்ஒன்றிப் பழகிவந்தீர்
கள்ளமிலாக் குழந்தைமனம் கறைபடாமல்
கருத்துடனே உருவாகக் கல்விதந்தீர்.
துள்ளுகின்ற பாலர்மனத் துடிப்பறிந்து
சொல்லாலும் செயலாலும் தொண்டுசெய்தீர்
வெள்ளைமனக் கழனிகளில் உயர்ந்தபண்பாம்
விதைபாவி நல்விளைச்சல் கண்டீரய்யா !

'எத்திசையும் புகழ்மணக்கும் பாரதியார்
எழுதினரே பதினாறு ஆண்டுகாலம்
மித்திரனில்' என்பதனை அறிந்துநீரும்
மிகமுயன்று அப்புதையல் எடுத்தீரய்யா.
பக்திமிகக் கொண்டுஅவற்றைத் தொகுத்தமைத்துப்
'பாரதிதமிழ்' என்னும் நூல்அளித்தீர்.
சக்திமிகும் அவர்படைப்பு மறைந்திடாமல்,
தமிழுக்குப் புதுச்சொத்து சேர்த்தீரய்யா !

'தகுதிமிகும் அவிஞசி லிங்கம்தான் என்
தலைவர்' என இறுதிவரை மனத்தில்கொண்டீர்.
'அகரமுதல் ன்'வரையில் உலகிலுள்ள
அரியபல செய்தியெலாம் தொகுத்துத்தந்தீர்.
பகலென்றும் இரவென்றும் பாராதென்றும்
பார்புகழும் தமிழ்க்க லைக் களஞ்சியத்தை
மிகஅழகாய்த் தமிழன்னை மகிழும்வண்ணம்
மேன்மையுடன் சூட்டியுமே மகிழ்ந்தீரய்யா!

பெரியவர்க்குக் களஞ்சியத்தை முடித்தகையால்
பிள்ளைகட்கும் வண்ணமுடன் படங்கள்கொண்ட
அரியதொரு களஞ்சியத்தை அளித்தீர் இன்றும்
அதற்குநிகர் பாரதத்தில் இல்லையய்யா!
சிறியவர்க்கும் பெரியவர்க்கும் அமைதியாகச்
செய்தபெரும் தொண்டினுக்கு 'பத்மபூஷன்'
விருதளித்துச் சிறப்பித்தார். அதைத்தொடர்ந்து
மேலான பலபட்டம் பெற்றீரய்யா!

எடுத்தசெயல் யாவையுமே முடித்தீர்மிக்க
ஏற்றமுடன் தமிழ் மொழியை வளர்த்தீர் நாளும்
படுத்தினவே நோய்களெலாம் பல்லாண்டாக
பணியாமல் பணிகள்தமைத் தொடர்ந்தீரய்யா
கடுகடுத்த முகத்தினையே கண்டோமில்லை
கனிவான மொழிகளையே கொண்டீர் உம்மை
அடுத்தவரை உயர்த்திடு நல் மனத்திேைடு
அடக்கத்தின் உறைவிடமாய்த் திகழ்ந்தீரய்யா!

தமிழிசைக்கு ஆக்கமிகத் தந்தீர் மிக்க
தரமுடைய பலபாடல் புனைந்தீர் மேலும்
உமதுமகள் மூவருமே பொருள்உணர்ந்தே
உளமுருகப் பாடவகை செய்தீரய்யா
'உமையவளின் இளையமகன் வேலன்காலை
உள்ளதால் பற்றுவதென்வேலை' என்னும்
உமதுபுகழ் தமிழர்களும், தமிழ்மொழியும்
உள்ளவரை ஒளிரும், இது உண்மையய்யா!

குழந்தைக்கவிஞர்
**அழ. வள்ளியப்பா**

# அமரகவி ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள் எழுதிய நூல்கள்

### கவிதை

இளந்தமிழா
மின்னல் பூ
நிலாப் பிஞ்சு
பட்டிப்பறவைகள்
தூரன் கவிதைகள்

### கட்டுரை

தேன்சிட்டு
பூவின் சிரிப்பு
காட்டு வழிதனிலே

### சிறுகதை

தங்கச் சங்கிலி
பிள்ளை வரம்
காளிங்கராயன் கொடை
மாவிளக்கு
உரிமைப்பெண்
தூரன் எழுத்தோவியங்கள்

### மரபியல்

பாரம்பரியம்
கருவில் வளரும் குழந்தை
பெற்றோர் கொடுத்த பெருங்கொடை

### உளவியல்

குழந்தை உள்ளம்
மனம் என்னும் மாயக்குரங்கு
மனமும் அதன் விளக்கமும்
தாழ்வு மனப்பான்மை
அடிமனம்
குழந்தை மனமும் அதன் மலர்ச்சியும்
குமரப் பருவமும்

### நாடகம்

ஆதி அத்தி
மனக்குகை
காதலும் கடமையும்
அழகு மயக்கம்
சூழ்ச்சி
பொன்னியின் தியாகம்
இளந்துறவி

### தமிழிசைப் பாடல்கள்

கீர்த்தனை அமுதம்
இசைமணி மஞ்சரி
முருகன் அருள் மணிமாலை
நவமணி இசைமாலை

## பாரதியார் நூல்கள்

பாரதி தமிழ்

பாரதியும் பாட்டும்

பாரதியும் கடவுளும்

பாரதியும் பெண்மையும்

பாரதியும் சமூகமும்

பாரதியும் தமிழகமும்

பாரதி நூல்கள் ஒரு திறனாய்வு

பாரதியாரின் நகைச் சுவையும் நையாண்டியும்

பாரதியும் பாப்பாவும்

பாரதியும் பாரத தேசமும்

பாரதியும் உலகமும்

தாகூரின் ஐம்பெருங் கட்டுரைகள்

## மொழிபெயர்ப்பு

இரவீந்திரர் குழந்தை இலக்கியம்

கடல் கடந்த நட்பு

கானகத்தின் குரல்

பறவைகளைப் பார்

## சிறுவர் நூல்கள்

ஆனையும் பூனையும்

நாட்டிய ராணி

ஓலைக்கிளி

ஜிம்மி

தம்பியின் திறமை

சூரப்புலி

மாயக்கள்ளன்

பறக்கும் மனிதன்

நிலாப்பாட்டி

மழலை அமுதம்

கொல்லிமலைக் குள்ளன்

நல்ல நல்ல பாட்டு

மஞ்சள் முட்டை

சங்கிலிக் கோட்டையின் மர்மம்

தரங்கம்பாடித் தங்கப் புதையல்

கடக்கிட்டி குடகிட்டி

## நாட்டுப்பாடல்

காற்றில் வந்த கவிதை

அவிநாசி நாவானின் திங்களூர் நொண்டி

மற்றும்

சித்திர மடல்

வடிவேல்பிள்ளையின் மோகினி விலாசம் [நாட்டிய நாடகம்]



# தூரன் வரைந்த கார்ட்டூன்கள்





## SUGGESTION

" Cigerette - holder for heavy smokers "



## FAITHFUL WIFE

"I am lucky to have a faithful wife. She has eloped three times and come back. "



## CONFLICTING IMAGINATION

"Have I to pay in advance? Are you afraid I shall come back without the horse"

"No, the horse will come back without you"



## JUDGE NOT...



"You are the biggest idiot there is"

"Sir, you forget yourself"

## AS IS WHEREIS CONDITION



" I want a 1000 live Fleas "

" What for? "

" I want to move out. But the land-lady says I must leave the room as she found it."

## BACHELOR-GENETICS



'Do you think genius is inherited?'

"I don't know, I have no children"

## ABSENT - MINDED PROFESSOR



"This professor-not forgotton to unfold his umbrella-is spraying in rains"

## PUNISHMENT :



"Why you look sad?"

"My wife died last year"

"Really a sad loss"

"It is not that. I am married again"

## A TRUE LIE



"I did not touch him — I did not punch him"

"No, no, he is telling lies"

"Shut up, or you will get another one"

# நெஞ்சைத் தொட்ட நிகழ்ச்சிகள்

'வாழ்க்கையில் உங்கள் நெஞ்சைத் தொட்ட நிகழ்ச்சி எது?' என்று மூன்று பிரமுகர்களைக் கேட்டோம். அவர்களில் ஒருவர் தூரன். அவர் தந்த பதில்:

ஈரோட்டில் இருந்து 10 கல் தொலைவில் உள்ள முத்தாயிபாளையம் கிராமத்துப் பிரமுகர் திரு. எம் எம். சிற்றம்பலம். இரு ஆண் மக்கட்குத் தந்தை. இல்லாளை இழந்தவர். மறுமணத்தை மனதாலும் நினையாமல் வாழ்ந்து வந்த அவர், தம் மனைவியின் நினைவாக அரிஜனங்களுக்கு 'சின்னம்மாள் காலனி' என்று ஒரு குடியிருப்பை நிறுவிக் கொடுத்தார்.

'காலனி' திறப்பு விழா தினம் விகடன் ஆசிரியர் கல்கி வந்திருந்தார் திரு. சிற்றம்பலத்தின் வீட்டில் விருந்து சாப்பிட்டு விட்டு வரும் வழியில் ஒரு கிராமத்தில் ஏராளமான அரிஜனங்களுக்கு விருந்து நடப்பதைக்கண்டு பக்கத்திலிருப்பவர்தான் அந்த அன்னதானத்தை ஏற்பாடு செய்து விட்டு அடக்கமாக இருக்கிறார் என்பது தெரியாமல் அதுபற்றி அவரிடமே விசாரித்தார்.

இத்தகைய அடக்கமுள்ள திரு. சிற்றம்பலம் அன்றாடம் வயலுக்குத் தமது வண்டியில் சென்று பார்ப்பது வழக்கம். அப்படிச் செல்லும் போது ஒரு சிறு கிராமத்தில் சுவர் ஓரமாகப் பார்வை இழந்த குழந்தை ஒன்று தினமும் அவர் கண்களில் படாமலிருந்ததில்லை. அந்தத் துரதிருஷ்டமான குழந்தையின் விழிகள் வெறித்து எங்கோ நோக்கிக் கொண்டிருப்பதைத் தினசரி பார்த்துப் பார்த்து மனம் நெகிழ்ந்தார் திரு சிற்றம்பலம்.

நாள் ஆக ஆக அவர் மனச்சுமை தாளமுடியாமற் போகவே குழந்தையின் பெற்றோரை அணுகி அக்குழந்தையைத் தாம் வளர்த்து ஆளாக்க அனுமதி கேட்டார். அவர்களைச் சமாதானப்படுத்திப் பையனைத் தன் வீட்டுக்கு எடுத்துச் சென்று அந்தப் பையனுக்கு 'டேராடூன்' அந்தகர் பள்ளியில் பயிற்சியும், அந்தகர்களுக்கான 'பிரெய்ல்' போதனைகளும் உயர் கல்வியும் கிடைக்கச் செய்ததுடன் தன் வீட்டிலே ஓர் ஆளும்-வண்டியும் ஏற்பாடு செய்து இன்றளவும் அவனைப் பராமரித்து வருகிறார்.

அந்தக் குழந்தையின் பெயர் ராமசாமி. இன்று 22 வயது இளைஞனாக வளர்ந்து விட்டான். அவனை மீண்டும் சென்னைக்கு அனுப்பி அவனுக்குப் பிரியமான இசையில் பயிற்சி பெற அனுப்பப் போகிறார். தனக்குச் சொந்த மகன்கள் இருவர் இருந்தபோதிலும் மூன்றாவது மகனாக இப்படி ஒரு சிறுவனை அவர் எடுத்து வளர்த்து ஆளாக்கின நிகழ்ச்சியை என்னால் மறக்க இயலாது.

(45 ஆண்டுகளுக்கு முன்பு ஆனந்த விகடன் வெளியிட்டது)

# அப்பண்ணு சுவாமிகள் திருமுகம்



வடமதுரை
சார்வாய் போஸ்ட்
சேலம் ஜில்லா

22—1—1959

பேரன்புள்ள தூரன் அவர்களுக்கு,

19-ம் தேதி காலே இங்கு வந்தேன். உடல் அசதி.

புராணம் - சமயம் - விஞ்ஞானம் - பக்திவழி - அன்புநெறி - அராஜகம், யுத்தம் - இயற்கை நெறி - செயற்கை வெறி - இவையில் எவை எவையில் அறிவு ஊறி வருகிறதோ, அந்த விளைவை அதன் வழி காண்கிறோம்.

தான் சென்று கொண்டிருக்கும் விருப்பவழியில் ஏதேனும் ஒரு துறையில் நிதானமாக அறிவை வளர்த்தவன் அறிஞனாகிறான்

ஸ்ரீபுத்தரின் நிர்வாணம் என்னும் கருத்தும், நீங்கள் அம்பாளை முன்னிலைப்படுத்தி கவிதை வேண்டி நின்ற சில நிமிஷ நினைவுத் தவமும் வேறல்ல ஒன்றுதான்.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் முதன் முதல் தன் ஞானுசானிடம் இந்த வரமே வேண்டி நின்றார். தான் பாடிப்பாடி கரைய வேண்டும் என்னும் ஆர்வம் உருகின நினைவை கவிதையாகவே காட்டினாராம்.

இதை அவர்கள் என்னிடம் நேரிலேயே சொல்லக் கேட்டேன். தன் கைப்பட எழுதியும் தந்துள்ளார்கள். அந்தக் குறிப்பு இருக்கிறது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் சித்தர்களும் முடிவான ஒன்றை அடைந்தேன் என்பதை ஒவ்வொருவரும் பாட்டாகவே ஏப்பம் விட்டார்களென்றே நினைக்கிறேன்.

நீங்கள் எழுதிய என்னிடம் கிடைத்த கவிதையின் நடுநாயக நிலையே, ஞானிகள் அறிஞர்களின் உள்ளம். வேறல்ல. இதையே முருகனை முன்வைத்து பலபல கோணங்களிலே ரசித்துப் பேரானந்தம் அடைகிறேன். உங்கள் குமாரிகட்கும் எல்லோருக்கும் வாழ்த்து.

அன்பு மறவா,

(ஓ-ம்) அப்பண்ணு

# சிலம்புச்செல்வர் கடிதம்



ம. பொ. சிவஞானம்
1, சர். சி. பி. ராமசாமி ஐயர் சாலை
ஆழ்வார்பேட்டை
சென்னை-600 004
23—9—1971

அன்புடையீர்! வணக்கம்.

தாங்கள் அன்பு கூர்ந்து அனுப்பிய நான்கு நூல்களும் வரப்பெற்று மகிழ்ந்தேன். "கருவில் வளரும் குழந்தை"யைப் படித்தேன்.

'விஞ்ஞானம் என்று சொல்லப்படும் கலையை, எளிய முறையில் சுவையாக தமிழில் நன்ருக எழுதியிருக்கிறீர்கள். தமிழால் முடியும் என்பதைச் சொல்லாமல் சொல்லுகின்ற தங்கள் நூலையும் மற்ற நூல்களையும் படித்தபின் விவரமாக எழுதுகிறேன். தங்கள் முயற்சிகள் வெற்றிபெற வாழ்த்துகின்றேன்.

அன்புள்ள,

(ஒம்) ம. பொ. சிவஞானம்

# பொன்மனச் செம்மல் கடிதம்



முதலமைச்சர்
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை - 600 009

நாள் : 18-6-1980

அன்புள்ள செந்தமிழ்க் கலைச்செல்வர்
திரு. பெரியசாமித் தூரன் அவர்களுக்கு,

உங்கள் வாழ்த்துக் கடிதம் கிடைக்கப்பெற்று மகிழ்ச்சியுறும் நேரத்தில் தாங்கள் உடல்நலமின்றி படுக்கையில் இருப்பது அறிந்து மிகவும் வருத்தப்படுகின்றேன்.

இடையருது தமிழ்த் தொண்டாற்றும் நீங்கள் நல்ல உடல்வளமோடு இருக்க வேண்டுமென்பது என்னுடைய அவா. விரைவில் உடல்நலம் தேறி வளத்தோடு பல்லாண்டுக் காலம் சிறப்புற வாழ்ந்திட என் வாழ்த்துக்கள்.

அன்பன்

(ஒம்) எம். ஜி. இராமச்சந்திரன்

# இலக்கியச் செல்வர் மடல்

ஏ. சீனிவாசராகவன், எம். ஏ.
முதல்வர்

வ. உ. சிதம்பரம் கல்லூரி
தூத்துக்குடி, தென் இந்தியா
3-9-1951

அன்பார்ந்த நண்பர் பெரியசாமித் தூரன் அவர்களுக்கு

கடிதம் கிடைத்தது. கலைக் களஞ்சிய வேலையைக் கூடிய விரைவிலேயே முடித்துவிடுகிறேன். எட்டையபுரத் திற்குத் தாங்கள் வரும்போது, இங்கே 13-ந் தேதி வியா ழனன்று விஜயம் செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்குள்ள அன்பர்கள் 'பாரதி விழா' கொண்டாட ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தாங்கள் வந்தால் மிகுந்த உற்சாகமும் பயனும் அடைவார்கள். அதோடு புதிய கல்லூரிக்குத் தாங்கள் விஜயம் செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஒருவரி 'வருகிறேன்' என்று எழுதுங்கள்.

அன்புள்ள,

*(ஒ-ம்) அ. சீனிவாசராகவன்*

# கலைவாணர் கடிதம்



6, வெங்கட்ராமையர் தெரு
தி. நகர், சென்னை
போன்: 88223

12-7-48

பேரன்புடையீர்,

வணக்கம்.

தங்களுடைய இலக்கிய ஞானமும், பண்பாடும் தமிழார்வமும், எழுத்து வன்மையும் குறிப்பாக ரஸிகத் தன்மையும் பற்றி நிரம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன். "கிந்தனார்" கதையைத் தங்கள் தலைமையில் தூக்கநாயக்கன்பாளையத்தில் நடத்தியதை எண்ணி மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

ரஸிப்பது ஓர் அபூர்வக் கலை. "கிந்தனார்" கதையில் வரும் கருத்துச் செறிவுகளையும், நகைச்சுவை பொதிந்துள்ள நயங்களையும் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்வதற்குத் தங்களைப் போன்றோரின் ரஸிப்புத்தான் எனக்குத் தராசு. அதற்கான வாய்ப்பு கிடைத்ததை எண்ணி பூரிப்படைகிறேன் என்பது புகழ்ச்சியல்ல.

இன்னொன்று, எனது கதையைப் பற்றித் தங்கள் அபிப்பிராயத்தை எழுதி அனுப்பினால் நலமென்று எண்ணுகிறேன்.

அன்புள்ள,

(ஒ-ம்) என். எஸ். கிருஷ்ணன்

# ஆன்மீகச்செல்வர் அஞ்சல்



கோ. வன்மீகநாதன்
3, அண்ணுமலேபுரம்
தென்னூர், திருச்சிராப்பள்ளி

பேரன்புடைய நண்பர் ஸ்ரீ தூரன் அவர்களது அடி பணிந்து எழுதியது. கலேக்களஞ்சியத்தை வெற்றிகரமாக முடித்த ஆற்றலேயும், பெருமையையும், அதற்குத் துணையாக நின்ற இறையருளேயும் போற்றுகிறேன்.

பாரத கண்டத்திற்கே வழிகாட்டியாக அமைந்து விளங்கும் கலேக்களஞ்சியத்தின் வெற்றிக்குப்பின் - திரைக்குப்பின் - எத்தனே பண்புகளின் கூட்டுறவு நின்றதென்பதைப் பலர் உணரவில்லே. என்ன உழைப்பு, என்ன பொறுமை, என்ன ஆர்வம், என்ன ஊக்கம், என்ன மொழிப்பற்று, என்ன நாட்டுப்பற்று, என்ன தன்னலம் கருதாமை.

எத்தனே பண்புகளின் கூட்டுறவு அதற்குத் தேவையாயிருந்தது. அவற்றிற்கு உறைவிடமாக நின்ற தங்கள் அடிபணிந்து வாழ்த்துகின்றேன்.

நூலுக்கு ஒரு பிற்சேர்க்கையும், அருஞ்சொல் ஆங்கிலத் தமிழ் அகராதி ஒன்றும் தேவை என்ற கருத்தை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேன்,

(ஒம்) கோ. வன்மீகநாதன்

# முத்தமிழ்க் காவலர் கடிதம்



கி. ஆ. பெ. விசுவநாதம்
திருச்சி
25-5-1980

செந்தமிழ்க் கலைச்செல்வர்,
திருவாளர் ம. ப பெரியசாமித் தூரன் அவர்களுக்கு

வணக்கம்.

தங்கள் கடிதம் வரப்பெற்றேன். 19-ம் தேதி தாங்கள் எழுதிய அக்கடிதம் இன்றுதான் வந்தது.

செய்திகள் அறிந்து பெரிதும் வருந்தினேன். தமிழ்த் தொண்டு செய்து வருகின்ற அன்பர்களுக்கு இதுபோன்ற விபத்துகள் நேரிடுவது கண்டு என் மனம் புண்படுகிறது.

அன்புகூர்ந்து தக்க மருத்துவரைக் கொண்டு உடல் நலத்தைப் பாதுகாத்துவர வேண்டிக் கொள்கிறேன். எல்லாம் வல்ல இறைவனது திருவருளால் விரைவில் முழு நலம் பெறுவீர்கள் என நம்புகிறேன்.

தங்களன்பிற்குரிய

(ஒம்) கி. ஆ. பெ. விசுவநாதம்

# கவியோகி கடிதம்

சுத்தானந்த சமாஜம்
சிவகங்கை
ராமநாதபுரம் மாவட்டம்

புதுச்சேரி
6-12-1948

புலவர் மணி

ஸ்ரீ ம. ப. பெரியசாமித் தூரன் அவர்களுக்கு இறைவன் நலமருளுக. தங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். பாரதசக்தி மகா காவியம் தங்களுக்கு நேரே தரவேண்டும். வருக வருக, அளவளாவுக. தங்கள் இசைப்பாடல்களை வானொலியிற் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

கலைக் களஞ்சியம் நிறைவேற என்னால் இயன்ற எழுத்துதவிகளை என்றும் இங்கே யோக நிலையிலிருந்தே செய்யத் தயாராயிருக்கிறேன். ஏனெனில் இது என் உயிரான தமிழன்னையின் பணி.

தங்கள் தமிழ்ப்பணி நற்கவி பழுத்துப் பொலிக! பொலிக! எல்லாரும் வாழ்க! எந்தாய் வாழ்க! ஜெய் ஹிந்த்!

அன்புள்ள,

(ஓ-ம்) *சுத்தானந்த பாரதி.*



# மேலோர் மெச்சிய
# தூரனின் இசைப்புலமை



# தூரனின் தெய்வீக இசை

சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர்

**தெய்வீகக் கலையான இசையால் ஆண்டவனது புகழைப்பாடி அவனது அருளைப் பெற்று, அவன் திருவடித் தாமரைகளை அடைந்துள்ள மஹான்கள் பலபேர் நம் நாட்டில் தோன்றியுள்ளார்கள். கர்னாடக சங்கீதத்திற்கு சட்ட திட்டம் அமைத்து, அது என்றும் வழிமுறை மாறாமல் தூய்மையுடன் விளங்கச் செய்த பெரியோர்கள் அவர்கள்தான்.**

அவர்களில் ஸ்ரீ தியாகப் பிரம்மம், ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சிதர், ஸ்ரீசியாமா சாஸ்திரிகள் என்ற மும்மூர்த்திகளும் நமது இசைக்கலை என்றும் உருமாறாமல் புனிதத் தன்மையோடு திகழ வழிவகுத்தவர்களாவர். இராகங்களை லக்ஷண யுக்தமாகவும், இசைக் கட்டடங்களாகவும் அவரவர்கள் இஷ்ட தெய்வங்களை சாகித்ய ரூபமாகப் பாடி நமது சங்கீதம் என்றும் அழியாத பொக்கிஷமாக இருக்க அருளியுள்ளார்கள். இம் மூவரிலும் தீட்சிதர் அவர்கள் தான் நமது நாட்டிலுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் கோவில் கொண்டிருக்கும் எல்லா தெய்வங்களையும் போற்றிப் பாடியவராவார்கள்.

அம்மஹான்களின் வழிவழியாக சாகித்ய கர்த்தாக்கள் பலர் தோன்றி இசைக் கலையையும், தெய்வ பக்தியையும் பரப்பினார்கள்.

இம்முறையில் நமது திரு. ம. ப. பெரியசாமித் தூரன் அவர்கள் மேற்சொன்ன மஹான்களின் வழியைப் பின்பற்றி தமது இஷ்ட தெய்வமான முருகப்பெருமானையும், மற்றும் பல பெயர்களால் வழிபடப்படும் இறைவனைப் பேதமில்லாமலும், இன்னிசையுடன் இனிய தமிழில் மனமுருகி வாயாரப் பாடியுள்ளார்கள். வர்ணம், கீர்த்தனம், பதம் ஜாவளி, தில்லானா முதலான வகைகளாக இயற்றியிருக்கிறார்கள்.

சாஹித்யங்கள் எல்லோருக்கும் நன்கு பொருள் விளங்கும்படியாக எளிய, அழகான தமிழில் அமைந்திருப்பதைப் போற்ற வேண்டும். இசை அமைப்பு வர்ண மெட்டுகள் தனித்தன்மையுடன், ராக பாவம் லயம் எல்லாம் தெளிவான முறையில் அமைத்துப் பாடியுள்ளார்கள்.

திரு. தூரன் அவர்களது குருநாதரான திரு. சிவராமகிருஷ்ணய்யர் அவர்களுக்கும் இவருக்கும் உள்ள குரு சிஷ்ய பாவம் சாஹித்யமும், இசை அமைப்பும் அழகாக அமைந்திருப்பதன் மூலம் அறிந்து கொள்ளலாம்.

திரு. தூரன் அவர்களால் இயற்றப்பட்ட இசை நூல்கள் பல தொகுதிகள் வெளிவந்துள்ளன. அதில் ஐந்தாம் தொகுதி **'இசைமணி மஞ்சரி'** என்ற பெயருடன் வெளியாகியுள்ளது. இதில் 50 இசைவகைகளைத் தொகுத்துள்ளார்கள். இதில் உள்ள ஒவ்வொரு கீர்த்தனையையும் நான் பாடிப் பார்த்தேன். பாடுவதற்குச் சொல் நயத்துடனும் சாஹித்யம் உள்ளத்தைத் தொடும் பக்திப் பெருக்குடனும், இசை அமைப்பு, ராகபாவம், தாள அமைப்பு வெகு கச்சிதத்துடனும், எளிதாக எல்லோரும் பாடம் செய்து பாடக்கூடிய முறையிலும் அமைந்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் கூறவிரும்புகிறேன்.

இத்தொகுதியில் காணப்படும் 50 உருப்படிகளிலும் மிகவும் பிரசித்தமாக வழங்கிவரும் ராகங்களே பெரும்பாலும் இடம்பெற்றுள்ளன. இவை தவிர வந்தன தாரிணி, தேசிய ரஞ்சினி, விலாசினி, போக வஸந்தம் என்ற நான்கு அழகான அபூர்வ ராகங்களும் இருக்கின்றன. இவைபாடுவதற்கு சுலபமான நல்ல சக்தி உள்ள அபூர்வ ராகங்கள் என்பதை மகிழ்ச்சியுடன் கூறுகிறேன். இவ்வரிய இசைநூலை இசை உலகம் பயன்படுத்திக் கொள்ளும் என்பதில் ஐயமே இல்லை.

இதற்கு முன் தூரன் அவர்களால் வெளியிடப்பட்டுள்ள இசைநூல் தொகுதிகளுக்கு சங்கீத கலாநிதி ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார், சங்கீத கலாநிதி ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய அய்யர் அவர்களும், அமரர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் முகவுரை, கருத்துரை அளித்துள்ளார்கள். அப்பெரியோர்கள் முகவுரையில் கூறியுள்ளதை விட அதிகமாகக் கூற எனக்கு அவர்கள் இடம் வைக்கவில்லை; அவ்வளவு அழகாகக் கூறியுள்ளார்கள்.

திரு. தூரன் அவர்கள் தமிழுக்குச் செய்யும் தொண்டுகளை எவ்வளவு போற்றினாலும் தகும். கலைக்களஞ்சியம் என்னும் மாபெரும் நூலை உருவாக்கிப் பெரும் தொண்டாற்றியுள்ளார். மேலும் குழந்தைகள் கலைக்களஞ்சியம் ஒன்றையும் உருவாக்குவதில் இப்பொழுது ஈடுபட்டிருக்கின்றார். கவிதை முதலான வேறு நூல்களையும் இயற்றியிருக்கிறார்கள்.

இவற்றுடன் தெய்வத்திடம் உள்ள பக்திப் பெருக்காலும், இசையில் உள்ள பிரேமை, பாண்டித்யத்தினாலும் தமிழ் இசை மூலம் தமிழ்த் தாய்க்குத் தொண்டாற்றி வருகிறார். திரு. தூரன் அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப் பட்டுள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் கூற விரும்புகிறேன். இவ்வாறு தமிழ் இசைக்கு தொண்டாற்றிய தூரன் அவர்களை தமிழ் உலகம் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

*15—7—1970* ★



# தூரனின் சங்கீத குரு

**சங்கீத கலாநிதி**
**முசிரி சுப்ரமணிய ஐயர்**

ஸ்ரீ பெரியசாமித் தூரன் முருகப் பெருமானிடத்தில் மாருத பக்தி கொண்டவர். அதன் காரணமாக அவர் கடவுளை வழிபடுகின்றபோதும் மற்ற சந்தர்ப்பங்களிலும் பல இனிய கீர்த்தனைகளைப் பாடியிருக்கிறார்.

இசையோடு சேர்த்துப் பாடப்பெறும் சாகித்யங்கள் எல்லாம் எளிய சொற்களால் அமைந்திருந்தால்தான் அவற்றைக் கேட்பவர்கள் சுலபமாக உணர்ந்து ரசிக்க முடியும். ஸ்ரீ தூரன் தமது பாடல்களில் எளிய சொற்களையே கையாண்டிருப்பது வெகுவாகப் போற்றத் தகுந்தது.

ஸ்ரீ சிவராமகிருஷ்ணய்யர், தூரன் அவர்களுடைய சங்கீத குரு. அவருடன் பல ஆண்டுகளாகத் தூரன் கூடவே இருந்து வந்திருக்கிறார்.

புதிய பாடல்களை இயற்றி அளிக்கும் ஸ்ரீ பெரியசாமித் தூரனுக்கு சங்கீத உலகம் கடமைப்பட்டிருக்கிறது. அவருடைய தெய்வ பக்தியும் ஒழுக்க சீலமுமே இம்மாதிரியான பாடல்களை உண்டாக்கும் திறமையை அளித்திருக்கின்றன என்று கூறினல் அது மிகையாகாது. அவர் பல துறைகளிலே தமிழ் இலக்கியத்திற்குச் சேவை புரிந்து வருவதை அனைவரும் அறிந்திருக்கிறார்கள். சங்கீதத் துறையில் அவர் முன்பே 150 பாடல்கள் கொண்ட இரண்டு தொகுதிகள் வெளியிட்டிருக்கிறார்.

அவருடைய சேவையை நான் மிகவும் பாராட்டுகிறேன். அவருடைய பாடல்களை இசையுலகம், முருகனுடைய திருவருளால் மகிழ்ச்சியுடன் வரவேற்கும் என்று நிச்சயமாய் நம்புகிறேன்.

— 25-11-1949

## தூரனின் சாஹித்யங்கள்



— கல்கி

ஸ்ரீ தூரனின் சாஹித்யங்களில் உயர்தர சங்கீதத்துக்குரிய சிறந்த பண்புகள் எல்லாம் அமைந்திருக்கின்றன. சாஹித்யங்களில் அவர் கையாளும் தமிழ் எளிதாயும் இனிதாயும் இருக்கிறது. உணர்ச்சி ததும்பிக் கவிதா சந்தம் பொருந்தியிருக்கிறது. நம் முன்னோர்கள் கையாண்டு பண்பட்ட பாணியில் ஸ்ரீ தூரன் சாஹித்யங்களை அமைக்கிறார். தற்காலத்து மக்கள் அறிந்து அனுபவிக்கக்கூடிய புதிய கருத்துக்களை வைத்து அமைக்கிறார். சங்கீத வித்வான்கள் அடுக்கடுக்காகச் சங்கதிகளைப் பொழிந்து பாடக்கூடியவாறு பல்லவி, அனுபல்லவி, சரணங்களை அமைக்கிறார்.

ஸ்ரீ தூரன் ஒரு கவிஞர். அவருடைய இருதயம் தூய்மையானது இசை மயமானது. ஆகையால் பாடல்களில் இயற்கையாகவே தமிழ் வளமும் இசையும் ஊடுருவி நிற்கின்றன.

இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு வரப்போகும் சங்கீத வித்வான்களும், மாணவர்களும், மாணவிகளும் ஸ்ரீ பெரியசாமித் தூரன் அவர்களின் சாஹித்யங்களைப் பாடுவதையும் பதினாயிரக்கணக்கான தமிழ் மக்கள் கேட்டு மகிழ்வதையும் மனக் கண்ணால் கண்டு களிக்கிறேன். — 1951

## தமிழிசைத் தூரன்



சங்கீத கலாநிதி
டைகர் வரதாச்சாரியார்

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயத்தைச் சேர்ந்த திருவாளர் தூரன் தெள்ளிய தீந்தமிழ் இசையை வளர்க்கும் ஆர்வம் கொண்டு உழைத்து அதற்குப் புத்துயிரளிக்க முன்வந்துள்ள புலவர்கள் இசையறிஞர்கள் ஆகிய பலருள் ஒருவராவர். கலியுகக் கடவுள் எனப் பெரியோர்களால் போற்றப்பெறும் முருகக் கடவுளிடத்து மிக்க அன்பு பூண்டு இவர் இயற்றிய தமிழிசைப் பாக்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகும். இதுபோன்ற பல இசைப் பாடல்கள், நண்பர் பெரியசாமித் தூரன் வாயிலாக வெளிவருமென நம்புகிறேன்.

—9-7-1943



# தூரனின் கீர்த்தனைகள்

சாண்டில்யன்

பெரியசாமித் தூரன் அவர்கள் உரை நடையில் மட்டுமல்ல, சிறந்த சாகித்யங்களைப் புனைவதிலும் சிறந்தவர் என்பது அனைவரும் அறிந்த விஷயம். அவர் பாடல்கள் இன்றும் பல வித்வான்களால் பெரிய கச்சேரிகளில் பாடப் பெற்று வருகின்றன. இத்தனைக்கும், தூரன் அவர்கள் எளிய மனமும் அடக்கமும் படைத்தவர். வித்தைச் செருக்கு அணுவளவும் கிடையாது. தான் எழுதியதுதான் சரி என்ற எண்ணமும் இருந்ததில்லை.

பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு சிறு சம்பவம் இப்பொழுது எனது நினைவுக்கு வருகிறது. என்னை எப்பொழுது பார்க்கலாம் என்று தூரன் அவர்கள் கேட்டனுப்பினர். ஒரு குறிப்பிட்ட தினத்தில் அவர் இன்னொருவருடன் என் இல்லம் வந்தார். கூட வந்தவர் ஒரு சங்கீத வித்வான். ''என் பாட்டுகளை நீங்கள் கேட்கவேண்டும்'' என்று தூரன் அவர்கள் கேட்டார். அந்த வித்வான் பாட, தூரன் அவர்கள் இயற்றிய பாடல்களைக் கேட்டேன். சொற்செறிவும் கருத்துச் செறிவும் நிறைந்த பாடல்கள் அவை.

அவற்றைத் தூரன் அவர்களே பாடிக் காட்டியிருக்கலாம். ஆனால் தனக்குப் பூர்ணமாகத் தெரியாத எதிலும் காலடி வைக்காத குணத்தால் அவர், வித்வானை விட்டுப் பாடச் சொன்னார். இந்த அடக்கம் அநேகருக்குக் கிடையாது. தங்கள் சாகித்யங்களைத் தாங்களே பாடிக்காட்டி என்னை இம்சை செய்தவர்கள் உண்டு. ஆனால் கவிஞரான தூரன் அவர்கள் தமது எல்லையைவிட்டுத் தாண்டியதில்லை. அந்த எல்லை பெரிது; ஆழமுடையது. அத்தகைய சாகித்யங்கள் தமிழுக்குப் பெரிதும் மணமூட்டுகின்றன.

சங்கீதத்தில் கான ரஸம், சாகித்ய ரஸம் என இரண்டு உண்டு. அவை இரண்டிலும் சாகித்யத்தைப் பெரிதாக சமஸ்கிருத சாடு சுலோகம் ஒன்று சொல்லுகிறது.

'' சிசுர் வேத்தி பசுர் வேத்தி வேத்தி கான ரஸம் பணீ
ஸாகித்ய ரஸமாதுர்யம் ஸர்வக்ஞோ வேத்திவா நவா ''

'' கான ரஸத்தைச் சிறு குழவியறியும், விலங்கு அறியும்' பாம்பறியும். ஆனால் ஸாகித்ய ரஸத்தின் மதுரத்தை ஸர்வக்ஞனை ஈசுவரனும் அறிவானோ மாட்டானோ '' என்று சாகித்யத்தின் மேன்மையை மேற்படி சுலோகம் சொல்கிறது. சிறந்த சாகித்யமும் கவிதைதான். அதை இயற்றுபவர் கவிதான். அப்பேர்ப்பட்ட கவிகளில் சிறந்த ஒருவரான தூரன் அவர்கள், மஹாகவி பாரதியாரின் கவிதைகளின் உட்பொருள்களை விளக்க வந்தது மிகவும் பொருத்தம்.

பெரியசாமித் தூரன் அவர்கள் பாரதியாரின் கவிதைகளில் மட்டுமன்றி உரைநடைக் காப்பியத்திலுள்ள நகைச்சுவையையும் நையாண்டியையும் மிகத் தெளிவாக எடுத்து விளக்குகிறார். பல இடங்களில் அவசியத்தை முன்னிட்டுத் தமது விளக்கத்துடன் பாரதியாரின் கவிதைகளையும், உரைநடைப் பகுதிகளையும் நீளமாக அப்படியே போட்டுப் பாரதியாரின் நகைச்சுவையையும் நையாண்டியையும் நம்மை அனுபவிக்கச் செய்கிறார்.

பாரதியாரின் சிறந்த சில கோட்பாடுகளையும் எடுத்துச் சொல்லியிருக்கிறார் தூரன். ஸ்திரீகள் பதிவிரதைகளாக இருக்கவேண்டும் என்று எல்லோரும் விரும்புகிறார்கள். அதிலே கஷ்டம் என்னவென்றால், ஆண்பிள்ளைகள் யோக்கியர்கள் இல்லை '' என்று பாரதி திட்டவட்டமாக அறிவிக்கும் கட்டுரைப் பகுதிகளை எடுத்துக் காட்டுகிறார் தூரன்.

பெரியசாமித் தூரன் அவர்கள் எழுதியுள்ள நூலைப் பற்றி இன்னும் எத்தனையோ எழுதலாம்.

நையாண்டிக்கு ஆங்கிலத்தில் இரு சொற்கள் உண்டு. ஒன்று Satire இன்னொன்று Irony Irony is the humour of Satire என்று Irony-க்கு ஆங்கிலத்தில் பொருள் கூறப்படுகிறது.

பெரியசாமித் தூரன் என்ற வண்டு பாரதியாகிய மலர்களிலிருந்து தேனைத் திரட்டி கட்டுரைத் தொகுதிகளைத் தந்திருக்கிறது. அந்த இன்பத்தேன் காதில் மட்டுமன்றி மனத்துள்ளும் பாயும்வகையில் அனுபவிக்க வேண்டியது தமிழர் கடமை.

தமிழில் நாவல்கள், சிறுகதைகள் நிரம்ப இருக்கின்றன. கட்டுரைகள் குறைவு. அந்தக் குறையை நிறைவு செய்கிறது பெரியசாமித் தூரன் அவர்களின் பாரதி பற்றிய கட்டுரைகள்,

' கவியின் இதயம் கவிக்குத்தான் புரியும் ' என்ற தமிழ் மூதுரைக்கு அத்தாட்சி ஏதாவது வேண்டுமென்றால் பெரியசாமித் தூரன் அவர்கள் எழுதியுள்ள ' பாரதியாரின் நகைச்சுவையும் நையாண்டியும் ' என்ற கட்டுரைத் தொகுதியைப் படிக்கலாம்.

○



# தூரனின் இசைத்தொண்டு

இசைப் பேரறிஞர்
டாக்டர் எஸ். இராமநாதன்
சென்னை

கோவை இராமகிருஷ்ண வித்யாலயத்தின் தலைமை ஆசிரியராகப் பணிபுரிந்து வந்த பெரியசாமித் தூரன் அவர்கள் சென்னையில் தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் ஆசிரியராகப் பதவி ஏற்றார். அப்பணியை அவர் முடித்த பிறகு கூட குழந்தைகள் கலைக் களஞ்சியத்தின் ஆசிரியராக இருந்து ஒப்பற்றத் தமிழ்த் தொண்டாற்றி எல்லோருடைய பாராட்டையும் பெற்றார்.

இசைத் தமிழுக்கு அவர் ஆற்றிய தொண்டு மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். ஏறக்குறைய 50 ஆண்டுகட்கு முன் தமிழ் நாட்டில் தமிழிசை இயக்கம் தொடங்கிய போது, தமிழில் கச்சேரிகளில் பாடத் தகுந்த பாடல்கள் உள்ளனவா? என்ற வினா எழுந்ததுண்டு. அக்காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினர் முத்துத்தாண்டவர், அருணாசலக் கவிராயர், மாரிமுத்தாப்பிள்ளை, கோபாலகிருஷ்ண பாரதியார் போன்ற இசைத்தமிழ்ப் பாடலாசிரியர்களின் பாடல்களை சுர தாளக் குறிப்புடன் வெளியிட்டதுடன் யோகி சுத்தானந்த பாரதியார், பெ. தூரன் போன்றவர்களுடைய பாடல்களையும் சுர தாளக் குறிப்புடன் வெளியிட்டனர்.

தற்போது நம்மை எதிர்நோக்கியுள்ள உடனடிப் பிரச்னைகளைக் கண்டு மனத் தளர்ச்சியடையாதிருப்போமாக. உலக மக்களின் உறுதியும், ஆண்டவனின் கருணையும், உலகம் வளர்ச்சியடையும் முறையும் இவ்வுலகத்திலுள்ள அனைவரும் மனித சமுதாயம் என்ற ஒரே இனத்தைச் சேர்ந்த சகோதரர்கள் என்ற உணர்ச்சி நிலவும் ஒரு தனி இல்லத்தை உருவாக்கும். இந்த லட்சியத்தை நோக்கி உலகம் சென்று கொண்டிருக்கிறது.

தமிழ் மொழி அதன் இலக்கியம் ஆகியவற்றின் தொன்மையைப் பற்றி ராஷ்டிரபதி குறிப்பிட்டார். கிழக்கு பிராந்தியம் முழுவதிலும் இந்நாட்டின் கலாச்-சாரம் பரப்பப் பட்டதை கூறினர்.

கம்போடியா கொடியில் தமிழ்நாட்டு கோவில்களின் மூன்று கோபுரங்கள் பொறிக்கப்பட்டிருப்பதையும், இந்தோனேஷியாவில் சிவன் - விஷ்ணு ஆலயங்கள் இருப்பதையும் அவர் எடுத்துக் காட்டினர்.

''கலைக்களஞ்சியம் தொகுப்பதில் முடிவு என்பது இருக்கவே முடியாது. இருக்கவும் கூடாது, ஏனெனில் அறிவு என்பது நிரந்தரமாக வளர்ச்சி அடைந்து கொண்டு வருவதாகும். அதன் ஒரே தடை அறியாமைதான். இதர பகுதியில் சிறந்தவையாகக் காணப்படுவதை தமிழர்கள் தங்களது சொந்த மொழியில் மேற் கொண்டுள்ளனர், வேதத்தை தமிழில் சடகோபர் மொழி பெயர்த்தார். தமிழ்க் கலைக்களஞ்சியம் தொகுப்பு போன்ற முயற்சிக்கு மத்திய, ராஜ்ய சர்க்கார் ஆதரவு தருவது அவசியம்''! எனக் கூறினர்.

## வரவேற்புரை :-

பல்வேறு விஞ்ஞான நூல்களை தமிழில் வெளியிடுவதுடன் தமிழில் குழந்-தைகளுக்கான கலைக்களஞ்சியமொன்றை வெளியிடவும் தமிழ் வளர்ச்சிக் கழகம் தற்போது உத்தேசித்துள்ளதாக அதன் தலைவர் டி.எஸ். அவினாசிலிங்கம்செட்டியார் தமது வரவேற்புரையில் வேண்டுகோள் விடுத்துப் பேசுகையில்

தமிழ் மிகவும் தொன்மைவாய்ந்ததும், வளம்மிக்கதும், மிகச்சிறந்த முறையில் உருவாக்கப்பட்டதுமான திராவிட மொழி என்று அவர் சொன்னர். ''பழமையான இலக்கியச் செல்வம் தமிழுக்கு இருந்த போதிலும் நவீன அறிவுக்கேற்ப அதனை வளப்படுத்த வேண்டியுள்ளது. இந்த நோக்கத்துடன் தான் 1947-இல் தமிழ் வளர்ச்சிக் கழகம் ஸ்தாபிக்கப்பட்டது. நன்கொடை வழங்குமாறு நான் விடுத்த வேண்டுகோளுக்கு டாக்டர் அழகப்ப செட்டியார், செட்டிநாடு ராஜா, தர்மபுரம் மடம் ஆதீன கர்த்தர், மற்றும் பலர் செவிசாய்த்து தாராளமாக உதவ முன் வந்தனர். பின்னர் இதர ராஜ்யங்களிலிருந்தும், மத்திய சர்க்காரிடமிருந்தும் மான்ய உதவிகள் கிடைத்தன'' என்று அவினாசிலிங்கம் செட்டியார் கூறினர்.

தொடர்கையில் சுமார் 15 ஆயிரம் விஷயங்களை கலைக்களஞ்சியத்தில் விளக்க வேண்டியிருந்தது. இவ்விஷயங்களைப் பற்றி, பல்வேறு துறைகளில் உள்ள ஆயிரத்-துக்கும் அதிகமான அறிஞர்கள் எழுதியுள்ளனர் என்று அவர் குறிப்பிட்டார். கடந்த 15 ஆண்டுகளாக, ஊக்கத்துடனும், திறமையுடனும் பணியாற்றிய, கலைக் களஞ்சிய ஆசிரியர் ஸ்ரீ பெரியசாமி தூரனையும், அவரின் கீழ் பணியாற்றிய ஊழி-யர்களையும் பாராட்டினர். புதிதுபுதிதாக ஏற்படும் விஞ்ஞான, அரசியல் கலாசார சம்பவங்களையொட்டி, அவ்வப்போது விசேஷ பதிப்புகளை வெளியிட வேண்டியிருக்-கும் என்றார்.

புதுப்புதுக் கருத்துக்களையும் தமிழில் அறிந்துகொள்ள முடியும். வாழவும் முடியும். விஞ்ஞானம் வளர, வளர புது சொற்கள் ஏற்படுகின்றன. ஏராளமாக வந்து கொண்டு இருக்கின்றன. இவைகளை விளக்கும் சக்தி தமிழுக்கு இருக்கிறது.

நகர் புறத்தில் இருப்பவர்கள் ஓரளவு ஆங்கில மொழி மூலம் படித்து அறிவை பெருக்கிக் கொள்ள முடிகிறது. கிராமத்தில் உள்ளவர்களும் படித்து முன்னுக்கு வர தமிழால்தான் முடியும். தாய் மொழியில் பாடம் சொல்லிக் கொடுத்தால்தான் அறிவு மேலும் மேலும் வளரும். மக்களும் முன்னேற முடியும்.

## அன்னைக்கு தடையா?

தமிழ் நாட்டில் உள்ளவர்களே தமிழுக்கு தடையாக இருக்கிறார்கள். இந்த விஷயத்தில் அவசரப் படக்கூடாது. நிதானத்துடன் செயலாற்ற வேண்டும்.

தமிழ் அன்னை ஆசனத்தில் வீற்று இருக்க நிதி தடையாக இருக்கக்கூடாது என்று அன்று சொன்னேன். அதற்காக இன்று செயலில் இறங்கி விட்டேன். இவ்வாறு சுப்ரமணியம் பேசினார்.

## பணமுடிப்பு:

63 ஆயிரம் ரூபாய் பணமுடிப்பை பெரியசாமி தூரனுக்கு முதல் மந்திரி காமராஜர் வெள்ளித் தட்டில் வைத்துக் கொடுத்தார். அப்போது 'தமிழ் மொழி வளமான மொழி தமிழால் எதுவும் முடியாது என்று நினைக்க கூடாது. எல்லாம் முடியும். முடியாது என்று ஒன்றும் இல்லை' என்று காமராஜர் சொன்னார்.

மற்றும் ஐகோர்ட்டு நீதிபதி கைலாசத்தின் மனைவி சவுந்திரம் அம்மாள், நீதிபதி அனந்தநாராயணன், டி.எஸ். அவனுசிலிங்கம் செட்டியார், மு. வரதராசனார் ஆகியோர் பேசினார்கள்.

---

அவ்வாறு 1943ல் வெளியான தூரன் அவர்களின் தொகுதிக்கு டைகர் வரதாச்சாரியார் அரியதோர் முன்னுரை அளித்திருந்தார். அதில் எளிய சொற்களும், ஆழ்ந்த பொருளும், இசைச்செறிவும் கொண்டவை என்று குறிப்பிட்டிருக்கிறார். தூரன் அவர்கள் சிவராமகிருஷ்ண பாகவதரிடம் ஏழெட்டு ஆண்டுகள் முறையாக இசை பயின்றவர். முதல் தொகுதி வெளியிடும்போது அவருடைய உதவியுடன் வெளியிட்டார். பின்னர் சென்னை வந்தபிறகு டி. கே. கோவிந்தராவ், கும்பகோணம் சங்கரன், டி. எம். தியாகராசன் முதலியவர்களைக் கலந்து இசையமைத்து சில தொகுதிகள் வெளியிட்டார். இந்தத் தொகுதிகளுக்கு முசிரி சுப்ரமண்ய அய்யர், செம்மங்குடி சீனுவாசய்யர் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி போன்றவர்கள் பாராட்டுரை வழங்கி இருக்கிறார்கள்.

இசைப்பாடல்களின் பல்வேறு வகைகளையும் இவர் கையாண்டிருக்கிறார். வர்ணம், கீர்த்தனை, இராகமாலிகை, தில்லானா, பதம் முதலியவகைகளை இவர் கையாண்டதுடன், காவடிச் சிந்து இயற்றியும் பெருமை கொண்டார், சாவேரி தோடி, காம்போதி, சங்கராபரணம், காபி, சக்ரவாகம் போன்ற தொன்மை வாய்ந்த இராகங்களைக் கையாண்டதோடு வந்தனதாரிணி, விலாசினி போன்ற அபூர்வ இராகங்களையும் பயன்படுத்தியுள்ளார்.

ஆசிரியர் முன்னுரையில் ''கீர்த்தனம் என்பது ஒரு கோபுரத்தைப் போன்றது என்றும் அதைப் பாடுபவர்கள் அந்தக் கட்டுக்கோப்பை கலைக்காது நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட சிற்பங்களை அமைப்பதுபோல் அதனை அழகுபடுத்தலாம்'' என்றும் கூறியுள்ளார்,

இவருக்கு இஷ்ட தெய்வம் முருகனாயினும் திருமால், அம்பிகை, விநாயகர், ஐயப்பன், முதலிய பல்வேறு தெய்வங்கள் மீதும் அழகுற கீர்த்தனங்கள் இயற்றியுள்ளார்.

தமிழிசைச் சங்கத்தினர் இவரது இசைத் தொண்டைப் பாராட்டி இவருக்கு இசைப் பேரறிஞர் என்ற பட்டத்தை அளித்து கௌரவித்தனர்.

பெ. தூரன் அறக்கட்டளை ஒன்றை நிறுவி அதில் ஆண்டு தோறும் அவரது பாடல்களைப் பாடுவதற்கு ஏற்பாடு செய்துள்ளார். அந்த அறக் கட்டளையில் யானும் பங்குகொள்ள வாய்ப்புக் கிடைத்ததைப் பெரும் பேருகக் கருதுகின்றேன்.

தமிழ்த் தொண்டிலும் கலைத்தொண்டிலும் அவர் தம்மை ஆண்டவனின் ஓர் கருவியாகவே கருதினர், அக்கருத்தினை 'சக்ரவாகத்தில்' அமைந்துள்ள ஓர் பாடலில் அவர் வெளியிட்டுள்ளார்.

ராகம்:- சக்ரவாகம் — தாளம்:- ஆதி

**பல்லவி**

நான் ஒரு சிறு வீணை அதன்<br>
நாதமாம் உயிர் நீயே (நா)

**அ-பல்லவி**

தேனெனும் மொழியாள் சிவசக்தி பாலனே<br>
தென் பழனுபுரித் தெய்வமாம் வேலனே (நா)

**சரணம்**

நல்ல நல்லிசைகளாய் நாதனே வருவாய்<br>
நானிலம் இன்புற நான் நடம் புரிவேன்<br>
கல்லும் கரைந்துருகக் கனிவுடன் பாடுவேன்<br>
கருணையின் கடலே உன் பெருமையைப் பேசுவேன்! (நா)

△

பத்திரிகைகள் பாராட்டிய
பத்மபூஷன் தூரன்

# கலைக்களஞ்சியம்

## வெளியீட்டு விழா



# "அறிவு வளர்ச்சியை தடைசெய்யும் அறியாமையை தகர்க்க வேண்டும்"

தமிழ் கலைக்களஞ்சியம் இறுதி தொகுப்பு வெளியீட்டு விழாவில் பாரதக்குடியரசுத் தலைவர் மேதகு டாக்டர் ராதாகிருஷ்ணன் உரையாற்றினர்.

'அறிவு என்பது நிரந்தரமாக வளர்ச்சி அடைந்து வருவதாகும் அதன் ஒரே தடை அறியாமை'

சென்னை, ஜன. 5

"அறிவு என்பது நிரந்தரமாக வளர்ச்சி அடைந்து வரும் தன்மையுடையது. அதன் ஒரே தடை அறியாமைதான் அறிவு வளர்ச்சியை தடைசெய்து நிற்கும் அறியாமையை தகர்க்க வேண்டும். அப்போதுதான் சுறுசுறுப்பாக ஜீவனுடன் இயங்கும் உள்ளங்கள் அறிவைப் பெருக்கிக்கொண்டே போக முடியும். முற்போக்குக் கலாச்சாரம் என்பதற்கு இது ஒரு சோதனை.

ஆகவே நமது கலாச்சாரம் முற்போக்கானதாகக் கருதப்பட வேண்டுமானால் இதர கலாச்சாரங்களிலுள்ள சிறந்த, உயரிய அம்சங்களை நமதாக்கிக் கொள்ளும் சக்தி நமக்கு இருக்க வேண்டும்.

பௌதிகம், கணிதம், ரசாயனம், வான சாஸ்திரம் போன்ற விஞ்ஞானத் துறை ஒவ்வொன்றிலும் இதரர்கள் பிரமாத சாதனைகளைப் புரிந்திருக்கிறார்கள். நாம் அவர்களது வாரிசாக வேண்டும். விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் தேச தேசங்களிடையேயிருந்த தடைகளை அகற்றியுள்ளன. எனவே அன்பினாலும், நல்ல எண்ணத்தினாலுமான காலத்தை உருவாக்குவது நமது கடமை.

**தினமணி**

**5-1-1963**

தற்போது நம்மை எதிர்நோக்கியுள்ள உடனடிப் பிரச்னைகளைக் கண்டு மனத் தளர்ச்சியடையா திருப்போமாக. உலக மக்களின் உறுதியும், ஆண்டவனின் கருணை-யும், உலகம் வளர்ச்சியடையும் முறையும் இவ்வுலகத்திலுள்ள அனைவரும் மனித சமுதாயம் என்ற ஒரே இனத்தைச் சேர்ந்த சகோதரர்கள் என்ற உணர்ச்சி நிலவும் ஒரு தனி இல்லத்தை உருவாக்கும். இந்த லட்சியத்தை நோக்கி உலகம் சென்று கொண்டிருக்கிறது.

தமிழ் மொழி அதன் இலக்கியம் ஆகியவற்றின் தொன்மையைப் பற்றி ராஷ்டிரபதி குறிப்பிட்டார். கிழக்கு பிராந்தியம் முழுவதிலும் இந்நாட்டின் கலாச்-சாரம் பரப்பப் பட்டதை கூறினர்.

கம்போடியா கொடியில் தமிழ்நாட்டு கோவில்களின் மூன்று கோபுரங்கள் பொறிக்கப்பட்டிருப்பதையும், இந்தோனேஷியாவில் சிவன் - விஷ்ணு ஆலயங்கள் இருப்பதையும் அவர் எடுத்துக் காட்டினர்.

''கலைக்களஞ்சியம் தொகுப்பதில் முடிவு என்பது இருக்கவே முடியாது. இருக்கவும் கூடாது, ஏனெனில் அறிவு என்பது நிரந்தரமாக வளர்ச்சி அடைந்து கொண்டு வருவதாகும். அதன் ஒரே தடை அறியாமைதான். இதர பகுதியில் சிறந்தவையாகக் காணப்படுவதை தமிழர்கள் தங்களது சொந்த மொழியில் மேற் கொண்டுள்ளனர், வேதத்தை தமிழில் சடகோபர் மொழி பெயர்த்தார். தமிழ்க் கலைக்களஞ்சியம் தொகுப்பு போன்ற முயற்சிக்கு மத்திய, ராஜ்ய சர்க்கார் ஆதரவு தருவது அவசியம்''! எனக் கூறினர்.

### வரவேற்புரை :-

பல்வேறு விஞ்ஞான நூல்களை தமிழில் வெளியிடுவதுடன் தமிழில் குழந்-தைகளுக்கான கலைக்களஞ்சியமொன்றை வெளியிடவும் தமிழ் வளர்ச்சிக் கழகம் தற்போது உத்தேசித்துள்ளதாக அதன் தலைவர் டி.எஸ். அவிஞசிலிங்கம்செட்டியார் தமது வரவேற்புரையில் வேண்டுகோள் விடுத்துப் பேசுகையில்

தமிழ் மிகவும் தொன்மைவாய்ந்ததும், வளம்மிக்கதும், மிகச்சிறந்த முறையில் உருவாக்கப்பட்டதுமான திராவிட மொழி என்று அவர் சொன்னர். ''பழமையான இலக்கியச் செல்வம் தமிழுக்கு இருந்த போதிலும் நவீன அறிவுக்கேற்ப அதனை வளப்படுத்த வேண்டியுள்ளது. இந்த நோக்கத்துடன் தான் 1947-இல் தமிழ் வளர்ச்சிக் கழகம் ஸ்தாபிக்கப்பட்டது. நன்கொடை வழங்குமாறு நான் விடுத்த வேண்டுகோளுக்கு டாக்டர் அழகப்ப செட்டியார், செட்டிநாடு ராஜா, தர்மபுரம் மடம் ஆதீன கர்த்தர், மற்றும் பலர் செவிசாய்த்து தாராளமாக உதவ முன் வந்தனர். பின்னர் இதர ராஜ்யங்களிலிருந்தும், மத்திய சர்க்காரிடமிருந்தும் மான்ய உதவிகள் கிடைத்தன'' என்று அவிஞசிலிங்கம் செட்டியார் கூறினர்.

தொடர்கையில் சுமார் 15 ஆயிரம் விஷயங்களை கலைக்களஞ்சியத்தில் விளக்க வேண்டியிருந்தது. இவ்விஷயங்களைப் பற்றி, பல்வேறு துறைகளில் உள்ள ஆயிரத்-துக்கும் அதிகமான அறிஞர்கள் எழுதியுள்ளனர் என்று அவர் குறிப்பிட்டார். கடந்த 15 ஆண்டுகளாக, ஊக்கத்துடனும், திறமையுடனும் பணியாற்றிய, கலைக் களஞ்சிய ஆசிரியர் ஸ்ரீ பெரியசாமி தூரனையும், அவரின் கீழ் பணியாற்றிய ஊழி-யர்களையும் பாராட்டினர். புதிதுபுதிதாக ஏற்படும் விஞ்ஞான, அரசியல் கலாசார சம்பவங்களையொட்டி, அவ்வப்போது விசேஷ பதிப்புகளை வெளியிட வேண்டியிருக்-கும் என்றார்.

புதுப்புதுக் கருத்துக்களையும் தமிழில் அறிந்துகொள்ள முடியும். வாழவும் முடியும். விஞ்ஞானம் வளர, வளர புது சொற்கள் ஏற்படுகின்றன. ஏராளமாக வந்து கொண்டு இருக்கின்றன. இவைகளை விளக்கும் சக்தி தமிழுக்கு இருக்கிறது.

நகர் புறத்தில் இருப்பவர்கள் ஓரளவு ஆங்கில மொழி மூலம் படித்து அறிவை பெருக்கிக் கொள்ள முடிகிறது. கிராமத்தில் உள்ளவர்களும் படித்து முன்னுக்கு வர தமிழால்தான் முடியும், தாய் மொழியில் பாடம் சொல்லிக் கொடுத்தால்தான் அறிவு மேலும் மேலும் வளரும். மக்களும் முன்னேற முடியும்.

## அன்னைக்கு தடையா?

தமிழ் நாட்டில் உள்ளவர்களே தமிழுக்கு தடையாக இருக்கிறார்கள். இந்த விஷயத்தில் அவசரப் படக்கூடாது. நிதானத்துடன் செயலாற்ற வேண்டும்.

தமிழ் அன்னை ஆசனத்தில் வீற்று இருக்க நிதி தடையாக இருக்கக்கூடாது என்று அன்று சொன்னேன். அதற்காக இன்று செயலில் இறங்கி விட்டேன். இவ்வாறு சுப்ரமணியம் பேசினார்.

## பணமுடிப்பு :

63 ஆயிரம் ரூபாய் பணமுடிப்பை பெரியசாமி தூரனுக்கு முதல் மந்திரி காமராஜர் வெள்ளித் தட்டில் வைத்துக் கொடுத்தார். அப்போது 'தமிழ் மொழி வளமான மொழி தமிழால் எதுவும் முடியாது என்று நினைக்க கூடாது. எல்லாம் முடியும். முடியாது என்று ஒன்றும் இல்லை' என்று காமராஜர் சொன்னார்.

மற்றும் ஐகோர்ட்டு நீதிபதி கைலாசத்தின் மனைவி சவுந்திரம் அம்மாள், நீதிபதி அனந்தநாராயணன், டி.எஸ். அவனாசிலிங்கம் செட்டியார், மு. வரதராசனார் ஆகியோர் பேசினார்கள்.

---

# தமிழ்நாடு

## 5-1-1967

**'தமிழரின் சீரிய பண்புகளை மற்றவர்களும் பின்பற்ற வேண்டும்'**

**தமிழ்க் கலைக்களஞ்சியம் வெளியீட்டு விழாவில் ராதாகிருஷ்ணன் புகழுரை**

கல்வி அமைச்சர் திரு. எம். பக்தவச்சலம் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் முயற்சிகளைப் பாராட்டி, கலைக் களஞ்சியத்தை வெளியிடும்படி குடியரசுத் தலைவரைக்கேட்டுக்கொண்டார். திரு பெரியசாமிதூரன் அனைவருக்கும் நன்றி கூறினர்'

(மதுரையிலிருந்து வெளிவந்த '<u>தமிழ்நாடு</u>' என்ற நாளிதழ் நின்றுவிட்டது)

---

# நவமணி

## 5-1-1963

**"தமிழ்க் கலைக்களஞ்சியம்" ஜனாதிபதி வெளியிட்டார்.**

"பழங்காலத்தில் தமிழர்கள் கிழக்கத்திய நாடுகளுக்குச் சென்று அவர்களுடைய கலாச்சாரத்தை பரப்பினர்கள். அவர்கள் பரந்த மனப்பான்மையும் விரிந்த நோக்கமும் கொண்டிருந்தனர்.

இன்று கூட கம்போடிய கொடியில் தமிழ்நாட்டுக்கோபுரத்தைக் காணலாம் அதேபோல் இந்தோனேஷியா நாட்டில் சைவ வைணவ ஆலயங்கள் உள்ளன. அந்தக் காலத்தில் எந்த மொழியின் நல்ல அம்சங்களையும் ஏற்க தமிழ் மொழி தவறியதில்லை. வேதத்தைக் கூட தமிழில் சடகோபாழ்வார் மொழி பெயர்த்து உள்ளார்.

அப்படிப்பட்ட பரந்த மனப்பான்மையை திரும்பவும் பெற நாம் முயற்சிக்க வேண்டும்.

திருக்குறளில் 'ஆதிபகவன்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதே போலத்தான் ரிக்வேதத்திலும் கூறப்பட்டுள்ளது. எல்லா கடவுள்களும் ஒன்றே என்ற கருத்தையே இவை கூறுகின்றன.

அந்த காலத்தில் நாட்டில் பிற மொழிகளில் இருந்த நல்ல கருத்துக்கள் எல்லாம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டன. இந்த சிறந்த கொள்கையின் அடிப்படையிலேயே தமிழ்க் களஞ்சியமும் தயாரிக்கப்பட்டுள்ளது.

பிற மொழிகளையும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு மொழியை பேசுகின்றவர்கள் மற்ற மொழியினருடன் ஒன்றுபட்டு ஒத்துழைக்க வேண்டும். எல்லா இந்திய மொழிகளும் வளர வேண்டும் என்பதே இந்திய சர்க்காரின் கொள்கையாகும்.

நாம் முன் காலத்தில் கொண்டிருந்த சிறப்பை அடைய வேண்டுமென்றால் பரந்த மனப்பான்மை, ஆழ்ந்த நோக்கு ஆகியவை வேண்டும். குறுகிய மனப்பான்மை கூடாது.

தற்போது உலகத்தில் எத்தனையோ கஷ்டங்கள் இருந்த போதிலும் உலகத்தில் உள்ள அனைவரும் சகோதரர்கள் என்ற ''ஒரே - உலக - தத்துவம்'' என்றைக்காவது ஒருநாள் நிலைபெற்றே தீரும்'' என்றார் ஜனாதிபதி ராதாகிருஷ்ணன்.

பக்தவச்சலம் :-

மந்திரி பக்தவச்சலம் பேசுகையில் தமிழ்க் கலைக் களஞ்சிய தயாரிப்பில் ஒத்துழைத்தவர்கள் அனைவருக்கும் பாராட்டு தெரிவித்தார். ''தமிழ் மொழியில் ஆகாதது ஒன்றும் இல்லை முயற்சி மட்டும்தான் அவசியம். தமிழ் மொழியின் முன்னேற்றத்துக்கு இந்தக் கலைக் களஞ்சியம் ஒரு வழிகாட்டியாகும்'' என்று அவர் குறிப்பிட்டார்.

குழந்தைகளுக்காக தமிழில் தனியாக ஒரு கலைக் களஞ்சியத்தை தயாரிக்க வேண்டும் என்று தமிழ் வளர்ச்சிக் கழக தலைவர் டி. எஸ். அவினாசிலிங்கம் செட்டியார் விழா ஆரம்பத்தில் தெரிவித்திருந்த யோசனையை மந்திரி வரவேற்றார்.

தமிழ் வளர்ச்சிக் கழக காரியதரிசி ம. ப. பெரியசாமி தூரன் நன்றி கூறினார்.

(நவமணி நாளிதழ் நின்றுவிட்டது)

---

‘சாதி மத பிரதேச கட்டுப்பாடுகளை விட்டொழியுங்கள்’

# நவஇந்தியா

5-1-1963

## கலைக்களஞ்சியம் 9-வது தொகுதி வெளியீட்டு விழாவில் தென்னாட்டு மக்களுக்கு ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் வேண்டுகோள்!

கோவை ஜன. 5

**இதுநாள்வரை தமிழ்க்கலைக் களஞ்சிய வெளியீட்டு விழாக்கள் ஆங்கிலத்தில் நடைபெற்று வந்தன. தமிழ் தெரியாதவர்கள் முன்னிலையில் அந்த விழாக்கள் நடந்ததால் ஆங்கிலத்திலேயே நடத்த நேரிட்டது. இப்போது தமிழ் தெரிந்த நமது ராஷ்டிரபதி வந்திருப்பதால் தமிழிலேயே விழா நடத்துவதாக தமிழ் வளர்ச்சிக்கழகத் தலைவர் திரு தி.சு. அவினாசிலிங்கம் செட்டியார் தமது வரவேற்புரையில் கூறினர்.**

புராதன பெருமையை மட்டும் நம்பியிராமல் புத்துலகின் புதிய ஆராய்ச்சிகளை அறியவும் விஞ்ஞான முன்னேற்றத்தைத் தெரிந்து கொள்ளவும கலைக்களஞ்சியம் பெரிதும் உதவுமென அவர் கூறினர்.

### குழந்தைக் கலைக் களஞ்சியம்-:

கலைக்களஞ்சியம் உருவாக்க உதவியவர்களுக்கு அவர் நன்றி செலுத்தினர் அடுத்தபடியாக கலைக் களஞ்சியத்தின் துணைப்பகுதி ஒன்று வெளியிடப்படும். அத்துடன் விஞ்ஞான - அரசியல் - கலை -முன்னேற்றத்தைக் குறித்து அவ்வப்போது தமிழ் மக்கள் அறிய துணைப் பகுதிகள் வெளியிடப்படும் என்று திரு அவினசிலிங்கம் செட்டியார் சொன்னர்.

குழந்தைகளுக்கான கலைக்களஞ்சியம் தயாரிப்பு வேலையும் விரைவில் துவக்கப்படும் என அவர் தெரிவித்தார்.

கல்வி அமைச்சர் திரு பக்தவச்சலம் பேசுகையில், உலகம் வேகமாக வளர்வதற்கு ஏற்ப தமிழிலும் முன்னேற்றம் காணவேண்டும் என்றார்.

தமிழால் ஆகாதது ஒன்றுமில்லை என்றுதான் தமிழறிஞர்கள் சொல்வார்கள் அத்தோடு நின்று விடாமல் பெற்றது போதாது, என்ற உணர்வுடன் தமிழ் வளர்ச்சிக்கு பாடுபட வேண்டும் என்று மந்திரி கூறினர்.

டாக்டர் ராதாகிருஷ்ணனிடம் கலைக் களஞ்சியத்தின் 9 - வது பகுதியை திரு அவினாசிலிங்கம் செட்டியார் அளித்தார்.

## பழம்பெருமை மீண்டும் பெற :-

தமிழ்க் கலைக்களஞ்சியத்தை தயாரித்து வெளியிட்டதற்காக திரு. அவினாசிலிங்கம் செட்டியார், திரு தூரன் மற்றும் 1000 ஆசிரியர்களையும் ராஷ்டிரபதி பாராட்டினர்

அப்போது அவர் கூறியதாவது; தென்னாட்டு மக்கள் அக்காலத்தில் சாதி சமய மற்றும் இதர குறுகிய கட்டுபாடுகளை விட்டொழித்து கடல் கடந்து கீழ் திசை சென்று தங்கள் கலாச்சாரத்தை பரப்பினர்கள். கம்போடியாவுக்குச் சென்று பார்த்தால் அங்குள்ள அரசன் கொடியில் 3 கோபுரங்கள் பொறிக்கப்பட்டிருப்பதை காணலாம்.

இந்தோனேஷியாவுக்குப் போனல் சிவன் விஷ்ணு ஆலயங்களைப் பார்க்கலாம் அக்காலத்து தென்னக மக்களிடம் துணிவு, திறன், ஊக்கம் ஆகியவை இருந்தன. பரந்த மனப்பான்மை கொண்டிருந்தனர். அவர்களிடம் விருப்பு வெறுப்பு பேதங்கள் இல்லை. ஆகவே அவர்கள் புகழ் ஓங்கியிருந்தது.

இடைக் காலத்தில் பேதங்களும் கட்டுதிட்டங்களும் புகுந்தன. நாம் தாழ்ந்த நிலைக்கு வந்தோம். சாதி சமய பிரதேச பேத உணர்ச்சிகளை விட்டு ஒழித்தோமானல் பழைய நிலையை மீண்டும் எய்துவோம். முதலில் நம்மிடம் இருக்கும் உள்ளக் கட்டுபாடுகளை அகற்ற வேண்டும்.

ஆதி பகவன் முதற்றே உலகு என்று திருக்குறள் கூறுகிறது. ஆதி தேவனும் என்று ரிக் வேதமும் கூறுகின்றது. ''வேதம் தமிழ் செய்தான் மாறன் சடகோபன்'' என்ற பிரபந்த மேற்கோளை ராஷ்டிரபதி எடுத்து கூறினர்.

அறிவு பொதுவானது அதை நாடுவதில் உலகிற்கே ஆர்வம் இருக்கிறது. என்று அவர் கூறினர்.

உலகையே ஒரு குடும்பமாகக் கொண்டு மக்கள் எல்லாம் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்த சகோதரர்களாக வாழ வேண்டும். இதுதான் வாழ்வின் உன்னத லட்சியம் எனக் கருத வேண்டும் என்று அவர் வலியுறுத்தினர்.

நாட்டின் 16 தேசிய மொழிகளையும் வளர்ப்பதில் மத்திய அரசினர் ஆர்வம் கொண்டுள்ளதாகக் கூறினர்.

## ஆண்டவன் அருள் 100 தடவை :-

ஆண்டவன் அருள் இருந்தால் எல்லாம் நடக்கும் என்று திரு அவினாசிலிங்கம் செட்டியார் அடிக்கடி கூறுவார். அவர் 100 முறை அவ்வாறு சொல்வதை நான் கேட்டுள்ளேன். கோவையிலும் டில்லியிலும் அவர் அதைச் சொல்லக்கேட்டிருக்கிறேன். இன்று கூட 3 முறை அவர் அப்படி சொல்லிவிட்டார். அவர் சொன்னதையே நானும் சொல்லி ஆண்டவன் அருளிருந்தால் எல்லாம் நடக்கும்'' எனக் கூறி முடிப்பதாக டாக்டர் ராதாகிருஷ்ணன் பேசி முடித்தார்.

திரு பெரியசாமி தூரன் நன்றி கூறினர்,

(கோவையிலிருந்து வெளிவந்த நவஇந்தியா நாளிதழ் நின்றுவிட்டது)

தமிழின் பெருமை தரணியெல்லாம் பரவியுள்ளது.

# புதுக்கருத்துக்களை தமிழர்கள் உலகிற்கு வழங்க வேண்டும்.

கலைக்களஞ்சிய வெளியீட்டு விழாவில் ராஷ்டிரபதி உரை.

## நம் நாடு

5-1-1963

சென்னை ஜன. 5

''கலைக்களஞ்சியத்தின் பணி முடிவில்லாதது ஆகும், அந்தப்பணி முற்றுப் பெறவும் கூடாது; தொடர்ந்து நடைபெற வேண்டும். தமிழகத்தில் விலை மதிக்க முடியாதவைகள் என்று கருதப்பட்டவைகளை எல்லாம் வேற்று நாட்டவர்கள் எடுத்துச் சென்று பரப்பியுள்ளார்கள். இத்துறையில் மேலும் நாம் ஊக்கம் செலுத்த வேண்டும்'' எனக் கூறினார் ராஷ்டிரபதி.

**தமிழ் வளர்ச்சிக் கழக தலைவர் டி. எஸ் அவனாசிலிங்கம் செட்டியார் பேசுகையில்**

''இந்தக் கலைக்களஞ்சியங்கள் வெளியிடப்பட்டதற்குப் பின்னால் விஞ்ஞானத் துறையிலும் ஏனைய துறைகளிலும் பல புதிய கண்டுபிடிப்புகள் வந்துள்ளமையால் அவைகளுக்கும் தமிழாக்கம் செய்ய வேண்டியுள்ளது. எனவே புதிய கண்டுபிடிப்புக்களின் தொகுப்பு கொண்டு துணைக் கலைக் களஞ்சியம் ஒன்று அடுத்து வெளியிடப்படும்.

விரைவில் குழந்தை இலக்கிய நூல்கள் வெளியிடுவதற்கான முயற்சியையும் மேற்கொள்ள இருக்கிறோம்.

தமிழ் குழு மொழிகள் ஒரு காலத்தில் வடக்கே-வட எல்லைப்புற மாநிலம் வரையில் பரவி இருந்ததாக ஆராய்ச்சிகள் காட்டுகின்றன.

தந்தம், குரங்கு, மயில் ஆகிய பெயர்கள் தமிழில் எப்படி வழங்கப்படு-கின்றனவோ அது போலவே 'ஹீப்ரு' பைபிளிலும் வழங்கப்பட்டிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கி. மு. 3000ல் தமிழ் நாட்டில் விளைந்த தேக்கு கால்தியாவில் உள்ள 'உஞ்' என்னும் இடத்தில் பயன்பட்டதாக தெரிகிறது.

கி. மு. 4000ல் தமிழ் நாட்டிற்கும் - மெசபடோமியாவிற்கும் வியாபாரத் தொடர்புகள் இருந்திருக்கின்றன.

தமிழில் நாம் பெருமைப்படத் தக்க இலக்கியமும் கலாச்சாரமும் உண்டு.

இப்போது இருப்பதிலேயே மிகவும் பழைமையான இலக்கியமான தொல்காப்பியம். கி. மு. 500-வது ஆண்டு காலத்தது. அதற்கு முன்பு இயற்றப் பட்டவை அழிந்துவிட்டன.

கி. மு. 2-ம் நூற்றாண்டை சேர்ந்ததாக சொல்லப்படும் 'திருக்குறள்' அதன் முதிர்ந்த அளவிற்கும் சுருக்கமான விளக்கத்திற்கும் பெயர்பெற்றது. உலகத்தின் பெரிய மொழிகளில் எல்லாம் அது மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

மனக்கிளர்ச்சி தரும் சைவ வைணவ முனிவர்கள் பக்தி பாடல்கள் கி. பி. 7 - ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. கம்பராமாயணம் 11 - ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை'' என்று கூறினார்.

(சென்னையிலிருந்து 'அறிஞர் அண்ணா'வை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த தி. மு. க. வின் நம்நாடு நாளிதழ் நின்றுவிட்டது)

---

## ‘விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் நன்கு வளர முன்னேறிவரும் அறிவு வளர்ச்சியை பயன்படுத்த வேண்டும்’.

### தமிழ்க் களஞ்சியம் தொகுப்பு வெளியீட்டு விழாவில் ராஷ்டிரபதி தமிழில் ஆசி கூறினார்.

**தமிழ்க் களஞ்சிய வெளியீட்டு விழாவிற்கு சென்னை கவர்னர் திரு. விஷ்ணுராம் மேதி. முதலமைச்சர் திரு. காமராஜ், நீதிமந்திரி பக்தவச்சலம், மத்திய சர்க்கார் ராஜாங்க மந்திரி திரு அளகேசன், தொழில் அதிபர் திரு வீ. எஸ். தியாகராஜ முதலியார் மற்றும் நகர பிரமுகர்கள் பலரும் வந்திருந்தனர்.**

இந்தியாவிலுள்ள பல்வேறு நாட்டு தூதரகங்களும் மற்றும் பல நாடுகளும் தங்கள் நாடுகளின் கலாச்சாரம், பண்புகள் பற்றிய வேண்டிய விஷயதானங்கள் செய்துள்ளன. பல தமிழ்ப் பண்டிதர்களும் விஞ்ஞானத் துறை நிபுணர்கள் குழு ஒன்றும் களஞ்சியத் தொகுப்பு வேலையில் ஈடுபட்டுள்ளனர். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயலாளர் திரு. எம். பி. பெரியசாமி தூரனும் அவருடைய சகாக்-களும் இத்துறையில் அரிய பணி புரிந்துள்ளனர்.

#### ராஷ்டிரபதி பேச்சு :-

தமிழ்க் கலைக்களஞ்சியத்தை வெளியிட்டு ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் பேசியதாவது. ‘தமிழின் தொன்மை பற்றி திரு. அவிஞசிலிங்கம் செட்டியார் பேசினார். பண்டைக்கால தமிழர் பண்பும், கலாச்சாரமும் முன் போல பிரகாசிக்-கும் அளவிற்கு அதை வளர்க்க வேண்டியது அவசியம்.

#### கலைக்களஞ்சியத்தின் சாதனை :-

அறிவு என்றும் பூரணத்துவம் அடைய முடியாது. அது வளர்ந்து கொண்டே போகக் கூடியது. பல அரிய விஷயங்களைத் தொகுத்து பெரியவர்கள் தமிழ் மறைகள் வகுத்து தந்தனர். அது போன்று கலைக்களஞ்சியம் பல்வேறு நாட்டின் கலாச்சாரம், ஆராய்ச்சி, ஆகிய பல நவீனங்களையும் தொகுத்து அறிவு வளர்ச்சிக்கு உதவுகிறது.

#### விஞ்ஞானம் வளர வழி செய்க :-

முன்னேறி வரும் அறிவு வளர்ச்சியை உடனுக்குடன் பயன்படுத்த வேண்டும், விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் நாட்டில் நன்கு வளர வழி வகுக்க வேண்டும்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயலாளர் திரு பெரியசாமி தூரன் வந்த-னோபச்சாரம் கூறினார்.

(சென்னையிலிருந்து வந்த நவசக்தி நாளிதழ் நின்றுவிட்டது)

## நவசக்தி

**5 - 1 - 63**

**தினத் தந்தி**
DAILY THANTHI

**12-2-1963**

## விஞ்ஞான கருத்துக்கள்! தமிழில் ஏன் சொல்ல முடியாது?
# கலைக்களஞ்சிய வெளியீட்டு விழாவில் மந்திரி சுப்ரமணியம் கேள்வி!

சென்னை பிப்ர. 12

தமிழ் வளர்ச்சிக் கழகம் சார்பில் கலைக்களஞ்சியம் தயாரித்து வெளியிட்ட ஆசிரியர் பெரியசாமிதூரனுக்கு சென்னை அசோகா ஹோட்டலில் பாராட்டு விழா நடந்தது.

### பரிசு கொடுத்தார் காமராஜர் :

பெரியசாமி தூரனின் சேவையைப் பாராட்டி ரூ. 63 ஆயிரத்து 500 கொண்ட பணமுடிப்பு பரிசளிக்கப்பட்டது. பணமுடிப்பை முதல்மந்திரி காமராஜர் வழங்கினார்.

கலைக் களஞ்சியத்தை தயாரிக்க பெரியசாமிதூரன் எடுத்துக்கொண்ட முயற்சியையும் அதனால் தமிழ் மொழிக்கு செய்த சேவையையும் காமராஜர் பாராட்டி பேசினார். பிறகு விழாவுக்கு தலைமை வகித்த டெல்லி சர்க்கார் இரும்பு தொழில் மந்திரி சி. சுப்ரமணியம் பேசுகையில் :-

### தமிழின் வளர்ச்சி :

கலைக்களஞ்சிய வேலை நாட்டு சுதந்திரத்துடன் தோன்றியது. இதைப்போல் பல முயற்சிகள் நாடு முழுவதும் ஏற்பட்டு மொழி வளர்ச்சி உண்டாகி இருப்பதை பார்க்கிறோம்.

இந்த காலத்தில் இவ்வளவு பெரிய வேலையை செய்ய முடியுமா என்று பலருக்கு சந்தேகம் ஏற்பட்டது! ஆனால் அந்த வேலை இன்று சிறப்பாக முடிவடைந்து இருக்கிறது.

### தமிழில் முடியும் :

இன்றைக்கு உலகில் இருக்கும் எல்லா புதிய கருத்துக்களையும் நம் நாட்டுப் பழைய கருத்துக்களையும் கலைக் களஞ்சியத்தில் காணலாம்.

தமிழில் விஞ்ஞான கருத்துக்களை தெளிவாக சொல்ல முடியாது என்று சிலர் சொல்வார்கள், அது தவறான எண்ணம்.

தமிழில் விஞ்ஞான கருத்துக்களையும் அழகாக சொல்ல முடியும் என்பதற்கு கலைக்களஞ்சியமே சிறந்த எடுத்துக்காட்டு இவ்வாறு மந்திரி சுப்ரமணியம் கூறினார்.

மு. வரதராசனார், ஆனந்தநாராயணன், சவுந்தரம் கைலாசம், டி.எஸ். அவனுசிலிங்கம் செட்டியார் ஆகியோரும் பேசினார்கள்.

# அறிவு உலகின் எந்தப் பகுதியிலிருந்து கிடைத்தாலும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

**சுதேசமித்திரன்**

**5-1-1963**

**கலைக் களஞ்சிய வெளியீட்டு விழாவில் குடியரசுத் தலைவர் கருத்துரை**

சென்னை ஜன. 5

**வேதம் தமிழ் செய்த மாறன்**

**'வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபன்' என்ற ஆழ்வார் பாடலை தமிழிலேயே குறிப்பிட்ட டாக்டர் ராதாகிருஷ்ணன், தமிழ் மன்னன் வேதத்தைத் தமிழில் மொழி பெயர்த்தான் என்பதைச் சுட்டிக்காட்டி, அறிவு உலகளாவியது என்றும், உலகின் எந்தப் பகுதியிலிருந்து கிடைத்தாலும் அறிவைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றும் மற்ற கலாச்சாரங்களின் தன்மைகளை நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்றும் வற்புறுத்தினர்.**

மொழிகள் அனைத்தும் உலகச் சகோதரத்துவத்தை நோக்கித் தான் நடைபோடுகிறதென்றும், உலக சகோதரத்துவத்தைக் கருத்தில் கொண்டு செயல்படும் போது ஆரம்பத்தில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைச் சட்டை செய்யக்கூடாது என்றும் டாக்டர் ராதாகிருஷ்ணன் குறிப்பிட்டார். தமிழில் கலைக்களஞ்சியங்கள் வெளிவரக் காரணமாயிருந்தவர்களைப் பாராட்டினர்.

தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் டி. எஸ். அவிஞசிலிங்கம் செட்டியார் வரவேற்புரை நிகழ்த்தினர். ''வெறும் பழம் இலக்கியச் செல்வத்தால் மட்டும் தற்காலத்தில் ஒரு மொழிக்கு பெருமை கிடைத்துவிடாது. தற்கால மக்களது எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் வெளிக்காட்டும் அளவிற்கு தமிழ் வளர வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுதான் 1947ம் ஆண்டு ஆகஸ்டு 14-ம் தேதி தமிழ் வளர்ச்சிக் கழகம் ஆரம்பிக்கப்பட்டது'' என ஸ்ரீ அவிஞசிலிங்கம் செட்டியார் தமது வரவேற்புரையில் குறிப்பிட்டார்.

''கல்லூரிகளில் முறையாகப் படிக்காதவர்கள்கூட சிறந்த அறிஞர்களா-வதற்கு அவரவர்கள் மொழியில் கலைக்களஞ்சியங்கள் இருப்பதுதான் காரணம் என்பதை உணர்ந்து தமிழர்களும் அத்தகு அறிவைப் பெற ஆங்கில முறையில் அமைந்த கலைக் களஞ்சியத்தை உருவாக்க ஆரம்பித்தோம். கடந்த 15 ஆண்டு-களாக மகத்தான பணியின் பயனாக 8 தொகுதிகளை வெளியிட்டிருக்கிறோம். இப்போது 9-வது தொகுதியை வெளியிட நமது ஜனாதிபதி வந்திருக்கிறார். தமிழை அறிந்து, புரிந்து கொள்ளக்கூடிய நம் ஜனாதிபதி இந்த கலைக்களஞ்சியத்தை வெளியிடுவது மிகவும் பொருத்தமானது, பெருமை தரத்தக்கது'' என்றும் ஸ்ரீ அவினாசிலிங்கம் செட்டியார் குறிப்பிட்டார்.

கலைக்களஞ்சியம் போன்ற நூல்கள் என்றும் பூரணத்துவம் பெற்று விடு-வதில்லை விஞ்ஞான ஆராய்ச்சி துரிதமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. மொழி வழி மாகாண அமைப்பால் நம் நாட்டின் பூகோள அமைப்பே கூட மாறி இருக்-கிறது எனவே, விடுபட்ட விஷயங்களையும், நவீன மாறுதல்களையும் உள்ளடக்கிய சப்ளிமெண்ட் ஒன்று அடுத்த ஆண்டு வெளிவரும்'' என்று ஸ்ரீ செட்டியார் அறிவித்தார்.

குழந்தைகளுக்காக தமிழில் ஒரு கலைக் களஞ்சியம் வெளியிட விரும்பு-வதாகவும் அதற்கு அரசாங்கமும், பொது மக்களும ஒருமித்த ஆதரவு அளித்தால் தான் அது சாத்தியமாகும் என்றும், குழந்தைகளுக்கான கலைக்களஞ்சியம் வெளி-யிடுவது வயது வந்தவர்களுக்கு எழுதுவதைவிட கஷ்டமானது என்றும் ஸ்ரீ செட்டியார் குறிப்பிட்டார்.

## வழிகாட்டி :-

''கலைக் களஞ்சியம் வெளியிடுவதில் இந்தியாவிற்கே நாம்தான் வழிகாட்டியாக இருக்கிறோம். இந்த 9-வது தொகுதி வெளியிடுவது இனியும் சாதிக்க முடியும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. குழந்தைகளுக்காக நிறைய நூல்கள் இல்லை. குழந்தைகளுக்கு கலைக் களஞ்சியம் அவசியம்'' எனக் குறிப்பிட்ட கல்வி மந்திரி ஸ்ரீ பக்தவச்சலம், கலைக் களஞ்சியம் 9-வது தொகுதியை வெளியிடும்படி டாக்டர் ராதாகிருஷ்ணனைக் கேட்டுக் கொண்டார்.

''ஜனாதிபதி கலைக் களஞ்சியத்தை வெளியிட்டு, எங்களை ஆசீர்வதிப்பது பாரதமே ஆசீர்வதிப்பதற்குச் சமம். டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் நமது நாட்டின் தத்துவம், கலைகள் அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு கலைக்களஞ்சிய-மாகவே இருக்கிறார்'' என்று ஸ்ரீ பெரியசாமி தூரன் தமது வந்தனோபசார உரையில் குறிப்பிட்டார்.

தமிழக கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி, கேரள கவர்னர் ஸ்ரீ. வி. வி. கிரி முதலமைச்சர் ஸ்ரீ காமராஜ் உட்பட பல பெருமக்கள் விழாவிற்கு வந்திருந்தனர்.

(சென்னையிலிருந்து வந்த சுதேசமித்திரன் நாளிதழ் நின்றுவிட்டது)

முரசொலி

11-2-1963

தமிழ்மொழி
வளர்ச்சிக்கு
தடையாக
இருக்கிருர்களே!

# கலைக் களஞ்சியம் வெளியீட்டு விழாவில் டெல்லி மந்திரி சுப்பிரமணியம் வருத்தம்!!

சென்னை பிப்ர. 11

தமிழ் வளர்ச்சிக்கழகத்தின் கலைக்களஞ்சியம் வெளியிட்டு இருக்கிருர்கள். அதன் ஆசிரியர் ம. ப. பெரியசாமித்தூரன். அவரைப் பாராட்டி பணமுடிப்பு கொடுக்கும் விழா சென்னை எழும்பூர் அசோகா ஹோட்டலில் நடந்தது. விழாவிற்கு டெல்லி சர்க்கார் இரும்பு உற்பத்தி மந்திரி சுப்பிரமணியம் தலைமை தாங்கினர்.

அப்போது அவர் பேசியதாவது :

நமது நாடு சுதந்திரம் அடைந்த உடனே தமிழில் கலைக் களஞ்சியம் தயாரிக்கும் எண்ணமும் ஏற்பட்டது! அது காயாகி, கனியாகி இன்று நமக்கு பலன் கொடுத்து இருக்கிறது.

உலகத்தில் உள்ள நவீன பழையகால கருத்துக்களை இதில் காண முடிகிறது நவீன கருத்துக்களையும், விஞ்ஞான கருத்துக்களையும், விஞ்ஞான சொற்களையும், தத்துவ சொற்களையும் தமிழில் நிருபிக்க முடியும் என்பதை கலைக் களஞ்சியம் நிருபிக்கிறது.

**வாழ முடியும் :**

விஞ்ஞான சொற்களை தமிழிலே விளக்க முடியுமா? என்ற சந்தேகம் பலருக்கு ஏற்பட்டு இருக்கிறது. மேலும் தரம் குறைந்துவிடுமோ என்றும் நினைக்கிருர்கள்.

# ஆனந்த விகடன்

7-1-1963

'கலைக்களஞ்சியங்'கள் அறிவுப் பசி
உள்ளவர்களுக்கு ஏற்ற விருந்தை அளிக்கும்
'அமுதசுரபி'யாகத் திகழ வேண்டும்.

கலைக்களஞ்சியத்தை நாம் அனைவரும் கண்டு வியக்குமாறுதான் வெளியிட்டுள்ளார்கள், தமிழ் வளர்ச்சிக் கழகத்தார்.

தொடக்க கால ஏற்பாடுகளைச் செய்யவும் - செய்திகளைத் திரட்டவும், அவற்றை அகர முறையில் தொகுத்து, பின் வகுத்துப் பிரிக்கவும், ஆறு ஆண்டுகள் ஆயினவாம்.

ஒவ்வொரு தொகுதியும் ஏறத்தாழ 750 பக்கங்கள், நூற்றுக்கணக்கான படங்கள், சில வண்ணப்படங்களும் உள்ளன. தனித் தலைப்புகளும், துணைத்தலைப்புகளும் ஏறத்தாழ 15 ஆயிரம். இவற்றை எழுதியதோ உலகெங்கிலும் உள்ள 1200க்கும் மேற்பட்ட அறிஞர்கள்.

தொழில் நுணுக்கச் சொற்கள் மட்டும் 25 ஆயிரத்திற்கும் அதிமாக உள்ளன.

இத்தகைய பெரும்பணியை சிறப்புறச் செய்துள்ள கலைக்களஞ்சியத்தின் ஆசிரியர் பெரியசாமி தூரன் அவர்களும் அவரைச்சார்ந்த ஆசிரிய குழாத்தினரும் தமிழ் மக்களின் போற்றுதலுக்கும் பெரும் மதிப்பிற்கும் உரியவர்கள். அவர்களுக்கு தமிழகம் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறது.

## 'மாபெரும் தமிழ்ப்பணி'

''கலைக்களஞ்சியம்'' ஆசிரியர் திரு பெரியசாமி தூரன் அவர்களை தமிழ் மக்கள் நன்கு அறிவார்கள். சிறந்த கதைகள், கவிதைகள் எழுதிப்புகழ் பெற்றவர் அவர். பல்லாண்டுக்காலம் பள்ளி ஆசிரியராகப் பணிபுரிந்துள்ளவர். தமிழ் மொழியில் பெரும்பித்துக்கொண்டுள்ள இவர் பல ஆண்டுகளுக்கு முன்பு 'பித்தன்' என்ற பெயரில் ஒரு பத்திரிக்கையில் பெரும் பங்கு கொண்டிருந்தார். அப்போதே அவர் கண்ட கனவுதான் - தமிழில் ஒரு கலைக்களஞ்சியம். அன்று அவர் கண்ட கனவு அவராலேயே நனவாக்கப்பட்டுவிட்டது.

பேராசிரியர் கல்கி அவர்களும் திரு தூரன் அவர்களும் தான் முதலில் தமிழ் வளர்ச்சிக் கழகத்திற்கு செயலாளர்களாக இருந்து பணிபுரிந்தனர். கழகம் கலைக் களஞ்சியப்பணியை துவக்கியவுடனே அதற்குத் தகுந்த ஆசிரியர் யார்? என்ற கேள்வி பிறந்தது.

அந்த ஆசிரியரைத் தேடும் முயற்சியையும் நடந்தது. அப்போது தான் ''கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு யாரேனும் நெய்க்குத் தவிர்ப்பார்களா?'' என்று கூறி திரு தூரன் அவர்களையே அதற்கு ஆசிரியராக்கும் அரிய யோசனையை வெளியிட்டார் திரு. கல்கி. அப்பேராசிரியரின் யோசனை ஏற்கப்பட்டது. திரு தூரன் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அப்பணியை ஒரு வேள்வியாகவே நடத்தி தமிழர்களின் கரங்களில் கலைக்களஞ்சியத்தை சமர்ப்பித்துவிட்டார்.

சமீப காலமாக உடல்நலம் குன்றியிருந்த போதிலும் தனது உழைப்பில் சிறிதும் குன்றாது இப்பணியைச் செய்து வந்தார் அவர். அவருக்கு தமிழ் மக்கள் பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டவர்கள்.

இந்தக் கலைக்களஞ்சியத்துக்கு மத்திய அரசும், மாநில அரசும் பொருளுதவி செய்துள்ளன. இதற்கான செலவு 9 லட்சம் ரூபாய், ஒவ்வொரு தொகுதிக்கும் ஏறக்குறைய ஒரு லட்சம் ஆகியுள்ளது. ஒவ்வொரு தொகுதியிலும் 3000 பிரதிகள் அச்சிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு தொகுதியின் விலையோ ரூ. 25/- தான் கலைக்களஞ்சியங்களை வெளியிட்டவுடன் அவர்கள் பணி முடிந்துவிடவில்லை.

மேல்நாடுகளில் பலமுறைகளில் கலைக்களஞ்சியத் தொகுப்புகள், தொடர்ந்து மாற்றங்கள், திருத்தங்களுடன் அப்போதைக்கப்போது அனுபந்தங்களாக வெளி வந்த வண்ணம் இருக்கிறன.

இந்த 9 தொகுதிகள் வெளியானபின் உலகில் எத்தனையோ மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. அவற்றை எல்லாம் சேர்த்து இதுவரை சேர்க்காதவற்றையும் இணைத்து 10-ம் தொகுதியாக ஒன்றை வெளியிட இருக்கிறார்கள் என்பதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

# INDIAN EXPRESS

4-1-1963

Madras, Jan. 4

The Encyclopaedia is designed incidentally of course to serve as a kind of "Home Doctor".

In the shelves beside me as I write there are massed the volumes of the encyclopaedia Britannica and the National Encyclopaedia. One tends to take them for granted. If not quite so common as the dictionary, the encyclopaedia is liable to some part of the contempt which familiarity is said to breed. Yet a moment's reflection must show what labour, what combined erudition should have gone into their making. An encyclopaedia is, in fact, the lifetime's work of anybody.

With the "release" by the president of the ninth and final volume of the Tamil Encyclopaedia on Friday a great venture in Tamil letter will have been brought to successful conclusion. If Hollywood or any similar agency of extravagance chooses to apply to the task the adjective "massive" nobody need quarrel with it. For everything about the encyclopaedia is massive, in its extent in the years it took to be completed, in the number of authors, and also in the cost of its preparation. But Rs. nine lakhs is a cheap price to pay for what must be considered a land

The Encyclopaedia

TAMIL ENTERS MODERN EPOCH

By N S R

-mark in the development of Tamil. Certainly nothing like it had been done before in the thousands of years of history of this ancient language, Some probationary attempts there were, but not one on this thorough scale. It will stand as an example of constructive scholarship, which unfortunately, has not been much in evidence in recent days.

## COMPREHENSIVE

It is sufficient to indicate the volume of labour involved to realise what the editor Mr. M. P. Periasamy Thooran, and his staff took upon themselves. The Tamil encyclopaedia is meant to be consulted for information and knowledge on every conceivable topic. There is none too abstruse for it, for it expounds the mysteries and horrors of atomic science. There is none too small for it either. There are more than 15,000 main topics which, of course, deal with lesser connected themes. About 1,200 scholars have been laid under contribution from all parts of the world. The editor told me, but with no anger at all, that most of these contributions, even from Madras State, were in English, and were translated. He has gone to the authorities themselves. Who but Mr. B. G. Biggs, Lecturer in Maori at the University of New Zealand, could write with authority on the Maoris?

The encyclopaedia is obviously not a text-book. But it has set before itself the task of bringing down knowledge from the clouds. Though the writers, are in very many cases, learned men the volumes are meant to be read with ease by the S. S. L. C student who, however, should be prepared to take a little trouble. The encyclopaedia is also designed, but incidentally of course, to serve as a kind of "home doctor".

Massiveness cannot have been the sole difficulty Mr. Periasami had, had to contend with. There is the acute problem of scientific and technical terms. It seems to me that the method he has adopted is admirable and, if widely followed, should solve the controversy that has arisen. The practice has been that if the English or foreign word to be translated could be adopted in its present shape that course would be followed. The legal term "torts", for example, appears in Tamil as transliterated. But there are many other expressions, not technical, which do not lend themselves to this change. The encyclopaedia translates "personally" as "alumai". Over the creation of this word took place as many discussions as the French Academy may take to admit a new expression. Committees of scholars deliberated the question, and the consensus of opinion was adopted. There were more than 25,000 strictly technical expressions, and hard thinking went into the final solution of each problem.

FOURTEEN YEARS

It is thus, easy to see that the fourteen years spent over the preparation of the encyclopaedia were far from excessive. Six years no less, were spent in the general organisation of material. Those who have had anything to do with the making up of a daily newspaper will easily realise how time-consuming and sometimes exasperating the other parts of the task like collecting the illustrations, preparing the maps should have been. Through all these fourteen years the editor and his staff must have been sustained by the thought that they were making Tamil a really modern language The Tamil Academy sponsored the enterprise, and the expenses have been borne by the State and Central Governments,' with contributions from the public.

An encyclopaedia needs to be kept update. This will be done in this case by the publication of supplementary volumes, advantage being taken to reair any omissions that may have been noticed in the parent volumes.

It has not only been a great enterprise, but also a momentous one. With it the Tamil language may be said to have entered the modern age. The devoted band of scholars may well reflect that they have contributed more to that developement than it generally falls to the lot of many to claim.

---

# THE HINDU

## 3-1-1963

## *ENCYCLOPAEDIA IN TAMIL*

Monumental work Completed.

**Madras Jan. 3**

With the release of the final volume of the Tamil Encyclopaedia on Friday by the President Dr. Radhakrishnan, the first ever attempt at compiling an encyclopaedia in the modern sense of the term in an Indian language would have come to fruition.

The Editor of the encyclopaedia Mr. M.P. Periyasami Thooran explained in an interview that works of the nature of an encyclopaedia had not been known in Ancient India. Though the puranas could do a certain extent-be discribed as encyclopaedic compilations adopted to Hindu culture essentially they were didactic epics expounding legendary lore. The encyclopaedia of to-day had been discribed as "a marvel of human ingenuity, industry and skill, bringing together the knowledge of the past, information on thousands of particulars of vital interest technical, scientific, literary and other articles contributed by specialists with thousands of pictures, charts, diagrams and maps within the covers of a single organised set of usually finely made volumes".

The Tamil Encyclopaedia, brought out and published by the Tamil Valarchi Kazhagam, on the model of western encyclopaedia, consists of nine volumes each of 750 pages. The topics, arranged in alphabetical order, cover all subjects under the sun, from agriculture to zoology, the treatment being stated to be clear, comprehensive authoritative, accurate and provided with adequate bibliography.

For all important countries, articles on their geography, history, constitution and, fine arts have been included. Gazetteer information on all important cities and towns, mountains and rivers are also given. There are articles on all the important world languages and their growth and development. Biographical sketches of famous people of the world-scientists-philosophers, statesmen, etc. also find a place.

Every volume contains hundreds of illustrations and maps of countries and half a dozen colour plates and many half-tone reproductions on art papar. As many as 1,200 specialists and scholars from all over the world have contributed articles on more than 15,000 topics treated under separate headings and sub-headings.

## 14 YEAR ENDEAVOUR

This colosal work received Governmental monetary assistance and the 14 year endeavour has come to a successful conclusion. This is the result of the labours of a number of people, among whom may be mentioned Mr. T. S. Avinashilingam Chettiar.

The first volume was released in 1954 and thereafter almost every year one volume has been coming out. Describing the difficulties confronted by the Academy, Mr. Thooran said that the technical terms, of which there were more than 25 000 gave a great deal of trouble and expert committees considered the terms and decided on the Tamil equivalents working to an average rate of 30 terms per day. Three thousand copies of each volume were printed, each priced at Rs. 25/-. The whole project cost over Rupees nine lakhs.

The Tamil Academy whose job by no means ends with the publication of all the volumes is at present considering the different methods of keeping the encyclopaedia supplemented from time to time. Apparently, no decission has yet been taken on exact method.

---

The Mail
5-1-1963

# RECAPTURE GREATNESS OF THE PAST

## PRESIDENT TELLS TAMILS

Madras, Jan. 5

President Radhakrishnan yesterday counselled people not to be depressed or disheartened by the exigencies facing them.

The President, who was releaseing the ninth and final volume of the Tamil Encyclopaedia compiled by the Tamil Academy, wanted them to recapture the greatness of the past by getting rid of the inhibitions which encumbered their minds and hearts.

The function was held at Rajaji Hall which was packed. Seated on the dais along with the President were the Governor, the Chief Minister, Mr. O. V. Alagesan and Mr. M. Baktavatsalam.

After prayer, Mr. T. S. Avinashilingam Chettiar, founder-president of the Academy, said one of the major objectives of the Academy founded in 1948 was the production of an encyclopaedia in Tamil. To the appeai he issued there was a magnificent response led by the Dr. Alagappa Chettiar, the Raja of Chettinadu and the Dharmapuram Adhinam and this was followed by a generous grant by the Governments of India and Madras.

Nearly 15,000 topics had to be written and over 1,000 scholars had to contribute. The embassies of various Governments in India as well as the Government which had no empassies here co-operated in the matter of contributions. Special praise was due to Mr. Periaswamy Thooran and the body of devoted workers in bringing out for the first time in the history of Indian languages a comprehensive encyclopaedia in Tamil.

It was proposed, he said, to bring out a supplement. It was also their wish to take up the production of an encyclopaedia for Children in Tamil.

Mr. M. Bhaktavatsalam, an executive member of the Academy, referred to the antiquity and rich-divence and the way of growth of the world would turn to making this world into a single home where all would feel they are brothers belonging to one tribe, of mankind. That is the goal towards which the world is moving.

Language was an expression of human spirit and work along with them. They were interested in the development of all the Indian languages and trying to develop each one of them. An enterprise like the Tamil Encyclopaedia deserved consideration not only from the local Government but the Central Government also.

Mr. Avinashilingam Chettiar had referred thrice during his speech to the grace of God. It was true "that nothing happens in this world without the grace of the Divine", the President said and added "that is the thing in which we should have firm faith".

Mr. Periaswamy Thooran proposed a vote of thanks.

---

தூரனின் 'பாரதி தமிழ்' நூல்பற்றி
ராவ்சாஹிப் எஸ். வையாபுரி பிள்ளையின்
ஆங்கில விமர்சனம் இந்து பத்திரிகையில்

# BHARATI TAMIL

Collected and Edited by

Periaswamy Thooran

In recent years, Bharati literature has been growing rapidly along with the popularity of this great poet. The sense of injustice unwittingly done to him in his life-time has made our literary men contrite and induced them to write about the various aspects of his poetic genius.

Little attempt is made to study systematically the life, genius and art of this great poet. The biographical materials which is available in plenty has not been utilised. But Mr. P. Thooran has now for the first time collected these materials and presented them to us this neat handsome volume.

This volume is a real contribution to Bharati literature. It has added substantially to our knowlede of Bharati. His journalistic activities are also chronologically detailed.

Fearless criticism of men and things, though well known in a general way, are here instanced by Bharati's own writings. His humour is exemplified in 'Ullasa sabhai'. His high thinking finds vent in several essays. His patriotism, his yearning towards a real brotherhood of Indians without distinction of caste or creed, his hatred of all social evils, his desire to make his Motherland independent and his great care of mother-tongue, his enthusiastic endeavours to enrich it in every sense of the word-in fact, everything which has made the name of Bharati the charm that it is, vividly brought to our vision as one reads through this remarkable collection.

We may also note that 'Bharati Tamil' supplements several of the poet's writings. The editor has taken care to point out these. Some new pieces of Bharati's writings are now given in the work for the first time (e g, P. 134)

The labourious research, carried on day after day in reading and picking out Bharati's writings from the dusty files of the 'Swadesamitran', is an arduous task and we are grateful to the editor Thooran for having accomplished his aim successfuly.

# காந்தி அடிகள் வந்தபோது ...........

பெரியசாமித் தூரன்

*காந்தியடிகள் ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக நிதி திரட்ட வந்த சமயத்தில் கோவை வித்யாலயத்திற்கு வந்திருந்தார். அப்போது வித்யாலயம் சுமார் ஐம்பது மாணவர்களைக் கொண்ட ஆரம்பப் பள்ளியாகத்தான் இருந்தது மாணவர்களும், ஆசிரியர்களும் சிறிதும் வேறுபாடின்றி அங்கேயே உண்டு, உறங்கி வாழ்ந்தனர். ஹரிஜன மாணவர்களும் பிராமண வகுப்பைச் சேர்ந்த மாணவர்களும் மற்ற எல்லா வகுப்பைச் சேர்ந்தவர்களும் அங்கு இருந்தார்கள். மாணவர்களே சமையல் முதலிய எல்லா வேலைகளையும் செய்வார்கள். ஊழியர் என்று அங்கு யாரும் இல்லை.*

ஆனால் காந்தியடிகள் அங்கு வரும் சமயத்தில் அவரைத் தரிசிக்கப் பலபேர் அங்கு திரளாக வருவார்கள் என்று அவர்களுக்கு உணவு தயாரித்துத் தரத் திட்டமிட்டோம். மாணவர்களால் அவ்வளவு பெரிய கூட்டத்திற்கு உணவு தயாரிப்பது என்பது இயலாது என நினைத்து, கோயம்புத்தூரிலிருந்து மூன்று சமையல்காரர்களை ஏற்பாடு செய்திருந்தோம். அவர்கள் உணவு தயாரித்துக் கொடுத்தால், மாணவர்கள் பரிமாறும் பணியைச் செய்து விடுவார்கள். காய்கறிகளை நறுக்குவது போன்ற பணிகளையும் மாணவர்களைக் கொண்டே செய்யவும் திட்டமிட்டிருந்தோம்.

காந்தியடிகள் வழியில் காத்திருந்த மக்களைச் சந்தித்து தீண்டாமைப் பேயை விரட்டுங்கள் என்று உபதேசம் செய்து கொண்டே இரவு சுமார் பத்தரை மணியளவிற்கு வித்தியாலயம் வந்து சேர்ந்தார்.

எதிர்பார்த்தபடி கோயம்புத்தூரிலிருந்து நல்ல சமையல்காரர்கள் மூவர் வந்து சேர்ந்துவிட்டார்கள். மாணவர்கள் அனைவரும் வழக்கம்போல முன்னதாகவே குளித்துவிட்டு சந்தனமும் குங்குமமும் அணிந்து தங்களுக்கென குறிப்பிடப்பட்டிருந்த கடமைகளைச் செய்ய உற்சாகத்துடன் நின்றனர். மதிய உணவிற்கு வேண்டிய காய்கறிகளை நறுக்குவதிலே சுறுசுறுப்பாக வித்தியாலய மாணவர்கள் சிலர் முனைந்து விட்டனர்.

அப்பொழுதுதான் அந்த எதிர்பாராத பிரச்சனை முன்னே வந்து நின்றது.

வித்தியாலயத்திலே ஹரிஜன மாணவர்களும் இருக்கிறார்கள் என்ற விபரம் சமையல்காரர்களுக்குத் தெரியாது போலிருக்கிறது. வேலைக்கு வந்த பிறகு தான் இதை அவர்கள் உணர்ந்தனர். அவர்களில் ஒருவர் என் முன் தோன்றினர். தமது சங்கடத்தை விவரிக்கலானார். நான் தான் வித்தியாலயத்திற்கு வார்டன். அதனால் அவர் என்னை அணுகிப் பேசலானார். ''நாங்கள் எல்லோரும் சமையல் செய்வதையே தொழிலாக நடத்தி வாழ்க்கை நடத்துபவர்கள், ஹரிஜன மாணவர்களும் சேர்ந்து நறுக்கிய காய்கறிகளை நாங்கள் பயன்படுத்தினால், பின்னால் சமூகத்தில் எங்கள் தொழிலுக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று பயப்படுகிறோம். எங்களைப் பொறுத்த வரை எந்தவிதமான தடைகளும் இல்லை, இருந்தபோதிலும் சமூகத்தை நம்பித்தானே நாங்கள் இருக்கிறோம்? அதனால் நாங்கள் உங்களிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறோம்'' என்று பக்குவமாகத் தொடங்கினர்.

அவர்கள் மூவரும் சமையலைத் தொடங்காமல் அந்த நிலைமையிலேயே திரும்பிப் போய்விடுவார்களோ என்ற ஐயம் எனக்கு உண்டாகியது.

''இப்போது என்ன செய்யலாம் என்பதைச் சொல்லுங்கள் என்று கேட்டேன். அதற்கு அவர் ''காய்கறிகள் முதலியன நறுக்குவதற்கும், சமையலில் உதவி செய்வதற்கும் ஹரிஜன மாணவர்களைத் தயவு செய்து அனுப்பாதீர்கள். மற்ற மாணவர்களை அனுப்புங்கள். எங்கள் சங்கடம் தீர்ந்துபோகும்''. என்று அவர் தெரிவித்தார்.

ஆனால் என்னுடைய சங்கடம் அப்பொழுதுதான் தொடங்கியது.

வித்யாலயத்திலே சாதி வேறுபாடு என்பது அறவே கிடையாது. அதை மறந்துபோய் எல்லோரும் அண்ணன் தம்பியராக வாழ்ந்திருந்தோம். இப்பொழுது ஒரு சிலரை ''நீங்கள் ஹரிஜன மாணவர்கள், ஆகையால் சமையல் வேலையை எடுத்துக்கொள்ளக் கூடாது'' என்று எப்படி நான் சொல்லுவேன்? அப்படிச் சொன்னால் அது வித்யாலயத்தின் கொள்கைக்கே விரோதமாக முடியுமே'' என்று சொல்லிவிட்டு சமையல் கூடத்திற்குள் சென்றேன்.

அங்கு சென்று பார்த்தால் ஏதோ திட்டமிட்டுச் செய்தது போல காய்கறி நறுக்கிக் கொண்டிருந்த ஐந்து மாணவர்களில், மூன்று பேர் ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்கள். இதுவல்லாமல் ''காய்கறி நறுக்குவதற்கென்று வித்யாலய மாணவர் தலைவன், வேறு ஐந்து பேரையும் ஏற்பாடு செய்திருந்தான். அந்த 5 பேரும் ஹரிஜன மாணவர்கள்தான் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்று பட்டும் படாததுமாக நான் சமையல்காரரைக் கேட்டேன்.

அந்தப் புதிய 5 பேர்களைப் பார்த்து '' இந்த ஐந்து பேரும் தங்கமாச்சே! இவர்களைப் பற்றி எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபமும் இல்லை'' என்று கூறிவிட்டு மெதுவான குரலில் ''அந்த 3 ஹரிஜன மாண்வர்களைத்தான் இங்கு விடவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன், இப்படிச் சொல்வதற்கு எங்களை மன்னிக்கவேண்டும். வயிற்றுப் பிழைப்பு என்று ஒன்று இருக்கிறதே'' என்று என்னைப் பின்தொடர்ந்து வந்த சமையற்காரர் காதோடு காதாகக் கூறினர்.

புதிதாக வந்தவர்களைச் சுட்டிக்காட்டி ''இவர்களைப் பற்றி ஒன்றும் ஆட்சேபம் இல்லையே'' என்று கேட்டேன்.

''இல்லவே இல்லை; இவர்கள் ஐந்து பேருமே இங்கு வேலை செய்யட்டும்'' என்று சமையல்காரர்கள் மூவரும் ஏகோபித்துக் கூறினர்கள்.

என் சங்கடமும் தீர்ந்தது. அவர்கள் சங்கடமும் தீர்ந்தது. நன்றாக மூச்சு விட்டேன். ஏனென்றால் நானாகப் பொய் சொல்லவும் இல்லை. உண்மையைச் சொல்லவும் இல்லை. பிரச்னை தானாகவே முடிந்துவிட்டது.

## "பூவின் சிரிப்பு"



"சிலுவையிலே அறையப்பட்டிருக்கும் ஏசு முனியின்
வதனத்தைப் பார்!
அதில் என்ன கருணை! அதில் என்ன அமைதி!
உலகிற்கு அன்பு செய்வதிலேயே வாழ்க்கையை ஈந்தார்!
தம்மைத் துன்புறுத்தியவருக்கும் அன்பு காட்டினர்!
அந்த அன்பின் மலர்ச்சியாய் வந்த
இன்பப் பேரொளி அவர் முகத்திலே பொங்குகிறது!!"

— தூரனின் நூல்

# தூரனின் குயில்



தேன்குழைத்து வெண்ணிலவு
தென்றலிலே வீசியதோ
தெள்ளமுதம் களிமிகுந்து
திசையெல்லாம் பொங்கியதோ
வான்செழித்துப் பூத்திருந்த
வண்ணமணித் தாரகைகள்

.. .. ..

மீன்சுழித்த நதிக்கரையில்
வெண்கொழித்த மணற்பரப்பில்
மெல்லநடந்து அமர்ந்த என்றன்
விழிக்கெட்டாப் பொழில்குயிலே!

- தூரனின் 'மின்னல்பூ' கவிதை நூல்

அச்சிட்டோர்: செந்தமிழ்-கோவை-45.

